
உங்கள் வங்காளி ஜடைச்சிங்காரத்தின்
அழகை பூர்த்திசெய்ய
நீடித்து நிற்கும் பரிமளத்தோடுகூடின
கலிபோர்னியன் பாப்பி
ரெஜிஸ்டேர்ட் டிரேட் மார்க்
கூந்தல் தைலம் உபயோகியுங்கள்
இனம்!
இந்த ஜடைச்சிங்காரத்தைப் பற்றிய தகவல்களைத்தரும் துண்டுப்பிரசுரம் தெ. 5க்கு விளம்பர இலாகா, தபால்பெட்டி நெ. 822, பம்பாய் 1க்கு எழுதுங்கள். எந்த பாஷையில் வேண்டுமென்பதை குறிப்பிடவும். மற்ற ஜடைச் சிங்காரங்களை விவரிக்கும் துண்டுப் பிரசுரங்களுக்கு வரவிருக்கும் விளம்பரங்களை கவனிக்கவும்.
இன்னுமொரு நேர்த்தியான இராஸ்மிக் தயாரிப்பு
CPH 13-X30TM



# கல்கி தமிழிசை மலர்

## பொருளடக்கம்


மலர் 12 | இதழ் 38 — 1953 ஏப்ரல் 19 — விஜய ௵ சித்திரை 7௳

கல்கி

மலர் 12 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 38

# என்றும் உள தமிழிசைக்கு ★ ★ ★
# ★ ★ ★ மன்றம் எழுந்தது காணீர்!

வடக்கே, இமய மலையைச் சார்ந்துள்ள கைலயங்கிரியில், பார்வதிக்கும் பரம சிவனுக்கும் திருமணம் நடந்தது. விண்ணுலகத்துத் தேவர் தேவியர்களும், மண்ணுலகத்து மாந்தர்களும் முனிவர்களும் திருமண வைபவத்தைக் கண்டு களிக்கத் திரண்டு வந்திருந்தார்கள். ஒரே இடத்தில் அவ்வளவு பெருங் கூட்டம் சேர்ந்து விட்டதனால், பூமி நிலைகுலையத் தொடங்கியது. இமயமலைப் பிரதேசம் கீழே, கீழே அமுங்கத் தொடங்கியது. கட்டை வண்டி குடை கவிழ்வதுபோலப் பூலோகமே குடை கவிழ்ந்து விடுமோ என்ற பயம் ஏற்பட்டது. பரமசிவன் பார்த்தார். தமது திருக்கலியாண வைபவம் இப்படிப் பெரும் விபத்தில் முடிவதை அவர் விரும்பவில்லை. உலகம் நிலை குலையாமல் தடுத்துக் காப்பாற்றுவதற்கு என்ன உபாயம் என்று யோசித்தார். அப்போது, தெற்கே பொதிகை மலைப் பிரதேசத்திலிருந்து வந்திருந்த அகஸ்திய முனிவர் சிவபெருமானுடைய கண்ணோட்டத்திற்கு இலக்கானார்.

அகஸ்தியர் 'குறு முனிவர்' என்றும், 'தமிழ் முனிவர்' என்றும் பெயர் பெற்றவர். உருவத்தில் குள்ளமானவர். திருக்கலியாணத்துக்காகத் திரண்டிருந்த கூட்டத்தினிடையே இவர் குறுக்கும் நெடுக்குமாகப் போய்க் கொண்டிருந்ததைப் பார்த்து, ஆஜானுபாகுக்களும் கம்பீரத் தோற்ற முடையவர்களுமான தேவர்கள் அடிக்கடி குறுநகை புரிந்து கொண்டிருந்தார்கள். "இந்தக் குறு முனிவர் ஓரிடத்தில் சும்மா உட்கார்ந்திருக்கக் கூடாதோ? கையிலே ஓலைச்சுவடிக் கட்டுடன் எதற்காக இப்படி அங்கு மிங்கும் அலைந்து கொண்டிருக்கிறார்?" என்று தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள். அகஸ்தியர் குள்ளமா யிருந்தபடியால் அவர் திருமண வைபவங் களைப் பார்ப்பதற்குரிய நல்ல இடத்தைத் தேடி அங்குமிங்கும் அலைவது அவசியமா யிருந்தது. தேவர்களுக்கோ அது பரிகாசத்துக்குரிய காரியமா யிருந்தது. இப்படி அவர்கள் பரிகசித்துச் சிரித்துக் கொண்டிருந்த போதுதான் திடீரென்று கைலயங்கிரி தாழத் தொடங்கியது. தேவர்கள், முனிவர்கள் எல்லாரும் பெரும் பீதியடைந்து, நிலைத்து நிற்க முடியாமல் தத்தளித்தார்கள்.

இச்சமயத்தில் பரமசிவன் அகஸ்தியரைத் தமது கருணைக் கண்களினாலே பார்த்தார். தேவர்கள் அந்த மாமுனிவரைப் பற்றிப் பரிகசித்துக் கொண்டிருந்ததை அவருடைய திருஉள்ளம் அறிந்திருந்தது. உலகத்தை நிலைகுலையாமல் பாதுகாக்கவும், அதே சமயத்தில் தேவர்களுக்கு ஒரு பாடம் கற்பிக்கவும் உபாயம் ஒன்று இறைவன் உள்ளத்தில் உதயமாயிற்று. உடனே, குறுமுனிவரைத் தமது அருகில் அழைத்து, தேவர்கள், முனிவர்கள் அனைவருக்கும் கேட்கும்படியாகக் கூறினார்:—

"அகஸ்திய முனிவரே! இங்கே கூட்டம் அதிகமாகி விட்டதால் பூமி நிலை குலையத் தொடங்கி விட்டதைக் காண்கிறீர் அல்லவா? இந்த விபரீதத்தைத் தடுத்துத் திருமணம் நன்கு நிறைவேற நீர்தான் உதவி செய்ய வேண்டும்!" என்றார்.

அதைக் கேட்ட அகஸ்திய முனிவர் பெருமித மகிழ்ச்சி அடைந்து, "இறைவா! தங்கள் சித்தம் என் பாக்கியம். கட்டளை இடுங்கள்!" என்றார்.

"நீர் உமது தமிழையும் எடுத்துக் கொண்டு பழையபடி பொதிகை மலைக்கே போய் விடும். நீர் ஒருவர் இங்கிருந்து தென்திசைக்குப் போனால் பூமி நிலைகுலையாமல் தப்பிப் பிழைக்கும். திருமணமும் இனிது நிறைவேறும்!" என்றார் சிவபெருமான்.

உடனே அகஸ்திய முனிவர் தமது ஓலைச் சுவடிகளையும் எடுத்துக் கொண்டு தெற்கு நோக்கிப் பிரயாணமானார். போகும்போது அவருக்குப் பார்வதி – பரமசிவன் திருக்கலியாணத்தைப் பார்க்க முடியவில்லையே என்ற கோபம் இருந்தது. அந்தக் கோபத்தை விந்திய மலையின்மீது காட்டிக் காலினால் ஓர் அமுக்கு அமுக்கினார். விந்தியமலை கர்வம் அடங்கித் தாழ்ந்து அமுங்கியது. பிறகு, பொதிகை மலை சென்று வழக்கம்போலத் தமிழ் ஆராய்ச்சி செய்யலானார்.

அகஸ்தியர் தமிழுடன் புறப்பட்டுச் சென்றதும் இமயமலைப் பிரதேசம் மறுபடியும் மேலே உயர்ந்து சமநிலை அடைந்தது. உலகம் நிலைகுலையாமல் தப்பியது.

அகஸ்தியரையும் தமிழ் மொழியையும் உலகத் தராசின் ஒரு தட்டிலே வைத்து. மற்றத் தேவர்கள் முனிவர்களையும் அவர்களுடைய மொழிகள் எல்லாவற்றையும் இன்னொரு தட்டிலே வைத்தால், இரண்டு தட்டுக்களும் சமமாக இருக்கும் என்று ஏற்பட்டது.

இந்தச் சம்பவத்திலிருந்து குறு முனிவரின் பெருமையையும் தமிழ் மொழியின் சிறப்பையும்தேவர்கள்முனிவர்கள் அனைவரும் நன்கு உணரச் செய்தார் தேவ தேவராகிய சிவபெருமான்.



மன்றத்தின் தலைவாசல்

இத்தகைய அபூர்வ கற்பனையின் மூலம் தமிழ் மொழியின் மேன்மையை எடுத்துக் காட்டி நம் முன்னோர்கள் மகிழ்ந்தார்கள்.

அகஸ்தியரின் பெருமையைக் கூறியபோது தமிழ் மொழியின் சிறப்பையே குறிப்பிட்டார்கள்.

"அகஸ்தியர் பலே கெட்டிக்காரர். ஒரு சாமர்த்தியமான காரியம் செய்து உலகம் முழுவதும் தமது புகழ் பரவும்படி செய்து கொண்டார்" என்று கூறுகிறார் கம்பர் பெருமான்.

"தமிழ் மொழி என்றும் சிரஞ்சீவியாக உள்ள மொழி. அம்மொழியை உலகத்துக்கு எடுத்துச் சொல்ல முன்வந்ததின் மூலம், குறு முனிவர் தமது பெருமையை யல்லவோ நிலைநாட்டிக் கொண்டார்!" என்று கம்பர் பெருமான் வியந்திருக்கிறார்.

"என்றுமுள தென்தமிழ் இயம்பி
இசை கொண்டான்!"

என்ற கம்பர் கூற்றில், மேற்கூறிய பொருள் தொனிக்கின்றதல்லவா!

* * *

ஆதிகாலத்தில் தமிழ் மொழிக்கு அகஸ்தியர் செய்த தொண்டை நமது நாளில் ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் தமிழ் இசைக்குச் செய்தார்கள்.

தமிழ் இசை பல நூற்றாண்டுகளுக்கு முன்னாலேயே தோன்றித் தமிழகத்தில் வளர்ந்து வந்த அரும்பெருங் கலை. சிலப்பதிகாரம் முதலிய பழந் தமிழ் நூல்களில் வரும் குறிப்புகளிலிருந்தும், சிலாசாஸன ஆதாரம் உடைய சரித்திர ஆராய்ச்சியிலிருந்தும், தமிழ் இசை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே சிறந்து விளங்கியிருக்க வேண்டும் என்று அறியலாம்.

ஏழாவது, எட்டாவது நூற்றாண்டுகளில் தமிழகத்தில் அவதரித்த அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகியவர்கள் பக்திச் சுவையோடு சேர்ந்து வளர்த்த தமிழிசைச் செல்வங்களை இன்றைக்கும் நாம் அநுபவித்து வருகிறோம்.

ஆனால் கால வேறுபாடுகளினாலும் அரசியல் மாறுதல்களினாலும் நம்முடைய காலத்தில் தமிழிசை மங்கி யிருந்தது. சங்கீதக் கச்சேரிகளில் தமிழ்ப் பாடல்களைக் கேட்பதே அபூர்வமாக இருந்தது. பிரபல சங்கீத வித்வான்கள் பிற பாஷைகளிலுள்ள கீர்த்தனங்களையே பாடி வந்தார்கள். கச்சேரிகளின் பின்பகுதியில் பாமர ரஞ்சகமாகப் பாடும் பாடல்களும் தெலுங்குப்பதங்கள், ஜாவளிகள், உருச்சிதைந்த ஹிந்துஸ்தானிப் பாட்டுக்கள், இப்படி—அந்தக்காலத்தில் இருந்து வந்தன.

இந்த நிலைமையைக் குறித்து மகா கவி பாரதியார் வெகு காலத்துக்கு முன்னரே தமிழ் மக்களுக்கு எச்சரிக்கை செய்தார்.

"வித்வான்கள் பழைய கீர்த்தனங்களைப் பாடம் பண்ணிப் புராதன வழிகளைத் தெரிந்து கொள்ளுதல் அவசியம். ஆனால் தமிழ்ச் சபைகளிலே எப்போதும் அர்த்தம் தெரியாத பிற பாஷைகளில் பழம் பாட்டுக்களை மீட்டும் மீட்டும் பாடுதல் நியாயம் இல்லை. அதனால் நமது ஜாதி சங்கீதஞானத்தை இழந்து போகும்படி நேரிடும்."

இவ்வாறு பாரதியார் தீர்க்க தரிசனத்துடன் எச்சரிக்கையாகக் கூறிய மொழிகள் பாரதியார் நூல்கள், பகுதி 19. பக்கம் 120ல் அச்சிடப்பட்டிருக்கின்றன. ஆனால் அவை அச்சிலேயே பத்திரமாயிருந்தன. பாரதியாரின் தெய்விகப் பாடல்களின் மகிமையைத் தமிழர்கள் அறிந்து கொள்ள வெகுகாலம் ஆயிற்றே! அவர் வசனத்தில் எழுதியதை யார் படிக்கப் போகிறார்கள்! அப்படியே படித்தாலும் அவருடைய எச்சரிக்கையை யார் பொருட்படுத்தப் போகிறார்கள்!

* * *

ரஸிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் போன்ற சில தமிழ்ப் பெரியார்கள் நமது கர்நாடக சங்கீதத்தின் தரம் குன்றாமல் தமிழிசையை வளர்க்க வேண்டியதன் அவசியத்தைப் பற்றிப் பேசியும் எழுதியும் வந்தார்கள். எல்லாம் பேச்சளவிலும் எழுத்தளவிலும் இருந்து வந்தன.

ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியாரின் உள்ளத்தில் எப்போது தமிழ்ப் பாடல்களின் அவசியம் உதயமாயிற்றோ, அப்போது தமிழிசைக் கிளர்ச்சி ஓர் இயக்கமாக உருக்கொண்டது.

தமிழிசை வளர்ச்சிக்காக முதன் முதலில் பத்தாயிரம் ரூபாய் நன்கொடை வழங்கினார்கள்.

அண்ணாமலை சர்வகலாசாலையின் ஆதரவில் நாலு தினங்கள் தமிழிசைக் கச்சேரிகள் நடை பெற ஏற்பாடு செய்தார்கள். அவர்களுடைய ஆதரவுடன் தேவ கோட்டையில் நடந்த தமிழிசை மகா நாடு தமிழிசை இயக்கத்துக்குப் பெரும் ஆதரவைத் தேடித் தந்தது.

பிறகுதான், தமிழிசைக்கு எதிர்ப்புத் தோன்றியது. தமிழிசைக் கிளர்ச்சி பேச்சளவிலும் எழுத்தளவிலும் இருந்தபோது அதை யாரும் பொருட்படுத்தவில்லை. ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் சிரத்தை எடுத்ததின் காரணமாக அது ஓர் இயக்கமாக உருக் கொண்ட பிறகு, பலர் அதை எதிர்க்கப் புறப்பட்டார்கள்.

எதிர்த்தவர்களில் சிலர் "கர்நாடக சங்கீதத்தின் தரம் கெட்டுப் போகக் கூடாதே!" என்ற

நல்ல எண்ணத்துடன் எதிர்த்தார்கள். வேறு சிலர், தியாகராஜர்—தீக்ஷிதர் முதலிய மகான்களின் தெய்வீக கீர்த்தனங்களுக்கு ஆபத்து வந்து விடுமோ என்று பயந்து எதிர்த்தார்கள். மற்றும் பலர், வெறும் விஷமத்துக்காகவே எதிர்த்தார்கள்.

எதிர்த்தவர்கள் தங்கள் வாதங்களைச் சொன்ன போது, தமிழ் மொழியையே குறைவு படுத்தக் கூடிய முறையில் பேசினார்கள்; எழுதினார்கள். இதனால் தமிழன்பர்களின் மனம் பெரிதும் புண் பட்டது. இருதரப்பிலும் வாதப் பிரதிவாதங்கள் கடுமையாக நடந்தன.

இவை யெல்லாம் மொத்தத்தில் தமிழிசை இயக்கத்துக்கு வலிவு அளித்தன. எதிர்ப்பைக் கண்டு பின்வாங்கும் இயல்பு ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியாரிடம் இல்லை. எதிர்ப்பினால் அவர்களுடைய தமிழிசை ஆர்வம் அதிகம் ஆயிற்று. ஆனால் எதிர்த்தவர்களும் தமிழிசைக்கு ஒரு விதத்தில் நன்மையே செய்தார்கள்.

எதிர்ப்பின் காரணமாகவே, தமிழ் அன்பர்கள் தமிழிசையை வளர்ப்பதற்கு நிரந்தரமான ஸ்தாபனம் அமைக்க முன் வந்தார்கள். தமிழிசைச் சங்கத்தை அமைத்தார்கள். இச் சங்கத்தின் ஆதரவில் ஆண்டுதோறும் சென்னையில் தமிழிசை விழாவும் அதையொட்டிய தமிழிசைக் கச்சேரிகளும் நடைபெற்று வந்தன.

இவ்வளவோடு, தமிழிசை இயக்கம் நிலைத்து நடைபெறுவதற்கு உதவியாக ராஜா ஸர் அவர்கள் நிதி திரட்டவும் முனைந்தார்கள். ராஜா ஸர் நிதி திரட்ட முற்பட்டால், அதன் வெற்றியைப் பற்றிக் கேட்க வேண்டுமா! ஐந்து லட்சம் ரூபாய்க்கு மேல் சேர்த்து விட்டார்கள்.

சேர்ந்த நிதியைத் தமிழிசைக்கு எந்த விதத்தில் நிரந்தரமாகப் பயன்படுமாறு உபயோகப்படுத்துவதென்று யோசித்தார்கள். சென்னைமா நகரில் ஓர் அழகிய இசை மண்டபம் நிர்மாணிக்கத் தீர்மானித்தார்கள்.

அந்தத் தீர்மானம், மிகத் துரித காலத்தில், காரியத்திலும் நிறைவேறி விட்டது.

சென்னைமாநகரின் நடுநாயகமான இடத்தில், இதோ தமிழிசை மண்டபம் கம்பீரமாக எழுந்து நிற்கிறது. "அண்ணாமலை மன்றம்" என்ற அதிர்ஷ்டமான பெயரைத் தாங்கி நிற்கிறது.

தமிழிசை இயக்கத்தை உருவாக்கி, அதற்கு எல்லா விதத்திலும் ஆக்கமளித்த பெரியாரின் பெயரை வெகு பொருத்தமாக அம்மண்டபத்துக்குச் சூட்டியிருக்கிறார்கள்.

தமிழன்பர்களும் தமிழிசை அன்பர்களும் வெகு நாளாகக் கண்டு வந்த கனவு பலித்து விட்டது. சென்னை நகருக்கு ஒரு நல்ல சங்கீத மண்டபம் இல்லையே என்று இந்நகரிலுள்ள சங்கீதப் பிரியர்கள் வெகு காலமாகக் கொண்டிருந்த மனக் குறையும் நீங்கி விட்டது.

ராஜா சர் அண்ணாமலைச் செட்டியாரின் மனோரதத்தை இவ்வளவு விரைவாகவும் திறமையாகவும் நிறைவேற்றி வைத்த அவருடைய புதல்வர் ராஜா முத்தையா செட்டியார் அவர்களுக்கும், தமிழிசைச் சங்கத்தின் தலைவர் ஸ்ரீ ஆர். கே. சண்முகம் செட்டியார் அவர்களுக்கும் நமது மனமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவிக்கிறோம்.

* * *

புதிய தமிழ் ஆண்டின் ஆரம்பத்தில் விஜய வருடம் சித்திரை மீ 3உ (ஏப்ரல் 16உ) மாலை, புதிய தமிழ் இசை மண்டபத்தில், அண்ணாமலை மன்றத்தில், தமிழ் இசை விழா தொடங்குகிறது.

தமிழிசை இயக்கத்துக்கு ஆரம்ப முதல் ஆதரவு காட்டி ஊக்கம் ஊட்டிவந்த ராஜாஜி அவர்கள் விழாவைத் தொடங்கி வைக்கிறார்கள்.

## வில்லை வளைப்பவர் யார்?




ஆந்திர மாகாணம் ஏற்படுவதற்குரிய நாள் நெருங்கிக் கொண்டிருக்கிறது: அதே சமயத்தில் ஆந்திர அரசியல் கட்சிகளின் பலத்தைச் சோதிக்கும் தினமும் நெருங்கி வந்து கொண்டிருக்கிறது!

அந்த அரிய சந்தர்ப்பத்தில் அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய தமிழிசைப் பெரியார்களும், முத்துத்தாண்டவர், அருணாசலக் கவிராயர், கோபாலகிருஷ்ண பாரதியார், ஸ்ரீராமலிங்க சுவாமிகள் போன்ற தமிழ்சாஹித்ய கர்த்தர்களும், மகா வைத்தியநாதய்யர், காயக சிகாமணி முத்தையா பாகவதர் போன்ற தமிழிசைவளர்த்த வித்வான்களும் வானுலகில் நின்று, அண்ணாமலை மன்றத்தின்மீது மலர்மாரி பொழிவார்கள்.

ஏன்! தியாகய்யர், தீக்ஷிதர், சாமா சாஸ்திரிகள் ஆகிய சங்கீத மும்மூர்த்திகளுங்கூட அங்கு விஜயம் செய்து மகிழ்வார்கள் என்பதில் சந்தேகமில்லை. நாதப் பிரம்ம உபாசனை செய்த அப்பெரியார்கள் தமிழ் ஸாஹித்யங்களை வெறுத்தார்கள் என்பதற்கு எவ்வித சரித்திர ஆதாரமும் இல்லை அல்லவா!

* * *

அழகிய அண்ணாமலை மன்றத்தில் என்றென்றும் இன்பத் தமிழோடு இனிய இசை கலந்து எழுந்து பொங்கிப் பெருக வேண்டுமென்றும், தமிழ் நாட்டு இசை ரஸிகர்களின் செவிகளைக் குளிர்வித்து உள்ளங்களை மகிழ்வித்துக் கொண்டிருக்க வேண்டுமென்றும் பிரார்த்திக்கிறோம்.

# அகால அவசரக் கோலம்!

சில தினங்களுக்கு முன் சென்னையில் உள்ள பிரபல டாக்டருடைய வீட்டுக்கு ஒரு பிரமுகர் வந்து சேர்ந்தார். அவர் வந்தபோது இரவு பதினொரு மணி இருக்கலாம்.

டாக்டரை வெகு அவசரமாகப் பார்க்கவேண்டும் என்று அந்தப் பிரமுகர் கூறியதால், தூங்கிக் கொண்டிருந்த டாக்டரைத் தட்டி எழுப்ப வேண்டியதாயிற்று.

டாக்டர் வந்ததும் பிரமுகர் தாம் வந்த காரியத்தை அவருக்கு விளக்கினார்.

"சென்ற ஏழு வருஷங்களாகச் சகிக்க முடியாத வயிற்று வலியால் மிகவும் கஷ்டப்பட்டு வருகிறேன். தங்களிடம் வந்தால் குணமாகிவிடும் என்று சொன்னார்கள். எனவே, தாங்கள் மருந்து கொடுத்து, என் வலியைச் சொஸ்தப்படுத்த வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்.

ஏழு ஆண்டுகளாக வயிற்று வலியால் கஷ்டப்படும் நீங்கள் இன்னும் சில மணி நேரம் அந்தக் கஷ்டத்தைப் பொறுத்துக் கொண்டிருக்கக் கூடாதா! இந்த அகால வேளையில் வந்து என்னைக் கஷ்டப்படுத்தாமல் காலையில் வரக் கூடாதா! — இவ்வாறு அந்த நோயாளியைக் கேட்க வேண்டும் போலிருந்தது டாக்டருக்கு.

எனினும் நோயாளிகளிடம் இனிமையாகப் பேசுவதையே தமது முக்கிய கொள்கையாகக் கொண்ட டாக்டர், "காலை ஒன்பது மணிக்கு வாருங்கள். உங்கள் தேகத்தைப் பரிசீலனை செய்து, தகுந்த மருந்து கொடுக்கிறேன்" என்று சொல்லி வைத்தார்.

சென்னை நகரில் சென்ற அறுபது ஆண்டுகளாக நடந்து வரும் சென்னை டிராம்வே கம்பெனியின் திடீர் நடவடிக்கை மேற்படி பிரமுகரின் அகால அவசரக் கோலத்தைப் போலவே இருக்கிறது.

* * *

தமிழ் மகாஜனங்களில் பலர் தங்களுடைய உற்றார் உறவினருக்கும் நண்பர்களுக்கும் வாழ்த்துக்கள் அனுப்பி விஜய வருஷப் பிறப்பைக் கொண்டாடி யிருப்பார்கள். பற்பல ஸ்தாபனங்களைச் சேர்ந்தவர்களும் பரிசுகள் வழங்கிப் புத்தாண்டைக் கொண்டாடி யிருப்பார்கள்.

புது வருஷத்தை முன்னிட்டு, சென்னை டிராம்வே கம்பெனியாரும் மேற்படி கம்பெனித் தொழிலாளர்களுக்கும் சென்னை மகாஜனங்களுக்கும் விசித்திரமான பரிசு வழங்கத் தவறவில்லை.

சென்ற அறுபது வருஷங்களாக சென்னைமா நகர் வீதிகளில் ஓடிக் கொண்டிருந்த டிராம் வண்டிகளை வருஷப் பிறப்புக்கு முதல் நாள் அவர்கள் நிறுத்தி விட்டார்கள்; தங்கள் கம்பெனியையும் மூடி சீலேவரையும் நியமித்து விட்டார்கள்.

அதன் பலனாக, மேற்படி கம்பெனியைச் சேர்ந்த சுமார் இரண்டாயிரம் தொழிலாளர்கள் வேலையை இழந்து தவிக்கும்படி நேர்ந்திருக்கிறது. தினசரி டிராம் வண்டிகளில் தங்கள் தங்கள் காரியாலயங்களுக்குச் சென்று வந்த இரண்டு லட்சம் சென்னைவாசிகள் வண்டி வசதியின்றி அசௌகரியத்துக்கு உள்ளாகும்படி நேர்ந்திருக்கிறது.

சென்ற பல வருஷங்களாகச் சென்னை டிராம் கம்பெனி கஷ்டத்தில் நடந்து வந்ததாம். மாதா மாதம் ஐம்பதினாயிரம் ரூபாய் வரையில் நஷ்டம் ஏற்பட்டு வந்ததாம். அதனாலேயே கம்பெனியை மூடி, டிராம் வண்டிகளை நிறுத்தி விடும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது என்று மேற்படி கம்பெனி மானேஜர் ஸ்ரீ ஜே. பி. பியர்ட்ஸெல் தமது அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறார்.

டிராம்வே கம்பெனிக்கு அவ்வளவு அதிக நஷ்டம் ஏற்படுவதற்குக் காரணம் என்ன என்பது மேற்படி மானேஜரின் அறிக்கையிலிருந்து தெளிவாக வில்லை.

சிக்கன முறைகளை ஒட்டிக் கைத்தொழில் நீதிச் சபையோ, சென்னை சர்க்காரோ கூறிய யோசனைகளை டிராம்வே கம்பெனியார் ஏற்றுக் கொள்ளவில்லை என்று கூறப்படுகிறது.

எனவே, நஷ்டத்தைச் சமாளிப்பதற்கான வழிகளையெல்லாம் கம்பெனி எடுத்துக் கொண்டு பார்த்து விட்டதாகக் கூறுவதற்கில்லை.

டிராம் வண்டிகளை நிறுத்திவிட்டு, கம்பெனியை மூடுவதென்பது இறுதியாகக் கைக் கொள்ள வேண்டிய கடுமையான முறையாகும். நிலைமையைச் சமாளிப்பதற்குரிய மற்ற முறைகளை எடுத்துக் கொள்ளுமுன் கம்பெனியார் அவசரப்பட்டு டிராம் வண்டிகளை நிறுத்தியது பொது ஜனங்களுக்கு இழைக்கப்பட்ட பெரும் அநீதி என்றே கூற வேண்டும்.

பல வருஷங்களாக ஏற்பட்ட நஷ்டத்தைத் தாங்கும் சக்தியுள்ள டிராம்வே கம்பெனியார் சில நாட்கள் தாமதித்துத் தங்களுடைய மூடு படலத்தைத் தொடங்கி யிருக்கலாம். அதாவது மேற்படி கம்பெனியில் வேலை செய்யும் தொழிலாளர்கள், பொது ஜனங்கள், சென்னை சர்க்கார் முதலியோருக்கு முன் கூட்டியே அறிவித்து விட்டு, டிராம் வண்டிகளை நிறுத்தும் நடவடிக்கையை மேற் கொண்டிருக்கலாம்.

டிராம் வண்டிகளை நிறுத்திவிடப் போவதாக மேற்படி கம்பெனியார் முன்னதாகவே சர்க்காருக்கு அறிவித்திருந்தால், சர்க்கார் அத்தகைய அசம்பாவிதம் நேராமல் தடுப்பதற்குற்ற வழி வகைகளைச் செய்திருப்பார்கள்; அல்லது அதனால் ஜனங்களுக்கு அதிக அசௌகரியம் ஏற்படாமல் இருப்பதற்கான முறைகளையாவது கைக் கொண்டிருப்பார்கள்.

எனினும் டிராம் வண்டிகள் நிறுத்தப்பட்டதும், போக்குவரத்து மந்திரி டாக்டர் யூ. கிருஷ்ணராவ் சிறிதும் தாமதமின்றித் தகுந்த நடவடிக்கைகளை எடுத்துக் கொண்டது போற்றத் தக்கதாகும்.

டிராம் சென்று கொண்டிருந்த பாதைகளில் அதிக பஸ்கள் போக்கு வரத்துக்கு அவர் ஏற்பாடு செய்துள்ளார். வேலை இழந்துள்ள டிராம் கம்பெனித் தொழிலாளர்களின் நலன்களுக்கு யாதொரு குந்தகமும் ஏற்படாமல் பார்த்துக் கொள்வதாக உறுதி கூறியிருக்கிறார்.

*　　*　　*

டிராம்வே கம்பெனி, வியாபாரம், லாப நஷ்டம் இவற்றை மாத்திரம் குறிக்கோளாகக் கொண்ட ஸ்தாபனம் அல்ல; அது முக்கியமாகப் பொது நலனில் அக்கறை கொள்ள வேண்டிய ஸ்தாபனம் ஆகும்.

எனவே சாதாரண வர்த்தக ஸ்தாபனங்களைப் போல டிராம்வே கம்பெனி நடந்து கொள்வது கூடாது. பொது ஜனங்களுக்கோ, சர்க்காருக்கோ அறிவிக்காமல் அவர்கள் தங்கள் கம்பெனியை மூடிவிடக்கூடாது. தங்களுடைய அத்தகைய நடவடிக்கையால் தினசரி இரண்டு லட்சம் ஜனங்கள் போக்கு வரத்து வசதியின்றிக் கஷ்டத்துக்கு உள்ளாகும்படி நேருமே என்பதை அவர்கள் கவனிக்க வேண்டும்.

ஆனால், சென்னை டிராம்வே கம்பெனியார் அதையெல்லாம் கொஞ்சமாவது ஆய்ந்தோய்ந்து பார்த்ததாகத் தெரியவில்லை.

பொது நல ஸ்தாபனங்கள் யாவும் தேசிய மயமாக வேண்டும்: அவைகள் பொதுஜன சர்க்கார் நிர்வாகத்தில் இருக்க வேண்டியது அவசியம் என்பது மேற்படி டிராம்வே கம்பெனியாரின் விபரீத நடவடிக்கையிலிருந்து வெளியாகிறது அல்லவா!

*　　*　　*

டிராம் வண்டிகள் நின்று விட்டதால் எழுந்துள்ள விபரீத நிலைமையைச் சென்னை சர்க்கார் தங்களுக்கும் பொது ஜனங்களுக்கும் பலன் தரத்தக்க விதத்தில் உபயோகித்துக் கொள்ள வேண்டும் என விரும்புகிறோம்.

பல ஆண்டுகள் உழைத்து ஓட்டையான டிராம் வண்டிகளால் சென்னை நகர வீதிகளில் ஏற்படும் பயங்கரமான ஓலம் அடியோடு ஒழிந்துவிடும்படி செய்யலாம்.

ஒரு கையால் டிராம் வண்டியையும் மற்றொரு கையால் உயிரையும் பிடித்துக்கொண்டு ஜனங்கள் மேற்படி வண்டிகளில் தொத்திச் செல்லும் கண்றாவிக்கு முற்றுப் புள்ளி வைக்க முயற்சிக்கலாம்.

கட்டை வண்டிக்குச் சமமான இப்போதுள்ள டிராம்களில் பொதுஜனங்கள் பிரயாணம் செய்வதால் ஏற்படும் கால விரயத்தைத் தடுக்கலாம்.

ரஸ்தாக்களின் அழகைக் கெடுக்கும் தண்டவாளங்களை அகற்றி விட்டு, முன்னேற்றம் அடைந்துள்ள நாடுகளில் இருப்பது போல் டிராலி பஸ்களை உபயோகிக்க முற்படலாம்.




அத்தியாயம் 9

## கரை உடைந்தது!

பழுவேட்டரையரின் மனத்தில் குடி கொண்டிருந்த வேதனையைப் படகிலே இருந்த மற்றவர்கள் உணரக் கூட வில்லை. புயற் காற்றில் படகு அகப்பட்டுக் கொண்டதன் காரணமாகவே அவர் அவ்வளவு சங்கடப்படுவதாக நினைத்தார்கள். பெரிய பழுவேட்டரையர் மனோ தைரியத்தில் நிகரற்றவர் எனப் பெயர் வாங்கியிருந்தவர். அவரே இவ்வளவு கலங்கிப் போனதைப் பார்த்து, மற்றவர்களின் மனத்திலும் பீதி குடி கொண்டது. எந்த நேரம் படகு கவிழுமோ என்று எண்ணி, அனைவரும் தப்பிப் பிழைப்பதற்கு வேண்டிய உபாயங்களைப் பற்றியும் யோசித்துக் கொண்டிருந்தார்கள்.

கடைசியாக, வெகு நேரம் படகு தவித்துத் தத்தளித்த பிறகு, கரை ஏற வேண்டிய துறைக்கு அரைக் காத தூரம் கிழக்கே சென்று, படகு கரையை அணுகியது. "இனிக் கவலை இல்லை" என்று எல்லாரும் பெருமூச்சு விட்டார்கள். அச்சமயத்தில் நதிக் கரையில் புயற் காற்றினால் பேயாட்டம் ஆடிக் கொண்டிருந்த மரங்களில் ஒன்று தடார் என்று முறிந்து விழுந்தது. முறிந்த மரத்தைக் காற்று தூக்கிக் கொண்டு வந்து படகின் அருகில் தண்ணீரில் போட்டது. படகைத் திருப்பி அப்பால் செலுத்துவதற்கு ஓடக்காரர்கள் பெரு முயற்சி செய்தார்கள். பலிக்கவில்லை. மரம் அதி வேகமாக வந்து படகிலே மோதியது. படகு தடால் என்று கவிழ்ந்தது. மறு கணம் படகில் இருந்தவர்கள் அனைவரும் தண்ணீரில் விழுந்து மிதந்தார்கள்.

மற்றவர்கள் எல்லாரும் படகு கவிழ்ந்தால் தப்பிப் பிழைப்பது பற்றியே எண்ணிக் கொண்டிருந்தார்களாதலால், அவ்வாறு உண்மையில் நிகழ்ந்து விட்டதும், அந்த அபாயத்திலிருந்து சமாளிப்பதற்கு ஓரளவு ஆயத்தமாயிருந்தார்கள். கரையை நெருங்கிப் படகு வந்து விட்டிருந்தபடியால் சிலர் நீந்திச் சென்று கரையை அடைந்தார்கள். சிலர் மரங்களின்மீது தொத்திக் கொண்டு நின்றார்கள். சிலர் கையில் அகப்பட்டதைப் பிடித்துக் கொண்டு தண்ணீரில் மிதந்து கொண்டிருந்தார்கள்.

ஆனால் பழுவேட்டரையர் வேறு சிந்தனைகளில் ஈடுபட்டிருந்தபடியால், படகுக்கு நேர்ந்த விபத்தை எதிர்பார்க்கவே இல்லை. படகு கவிழ்ந்ததும் தண்ணீரில் முழுகி விட்டார். அவரைப் பிரவாகத்தின் வேகம் வெகு தூரம் அடித்துக் கொண்டு போய் விட்டது. சில முறை தண்ணீர் குடித்து, மூக்கிலும் காதிலும் தண்ணீர் ஏறி, திணறித் தடுமாறி, கடைசியில் ஒருவாறு சமாளித்துக் கொண்டு அவர் பிரவாகத்துக்கு மேலே வந்தபோது படகையும் காணவில்லை; படகில் இருந்தவர்கள் யாரையும் காணவில்லை. அது மட்டு

மல்லாமல், வெள்ளம் தம்மை அந்த மா நதியின் மத்தியப் பிரதேசத்தை நோக்கி இழுத்துக் கொண்டு போவதைப் பழுவேட்டரையர் அறிந்தார்.

உடனே அந்தக் கிழவரின் நெஞ்சில் பழைய தீரத்துவம் தளிர்த்து எழுந்தது. எத்தனையோ போர்களில் மிக ஆபத்தான நிலைமைகளில் துணிவுடன் போராடி வெற்றிபெற்ற அந்த மாபெரும் வீரர் இந்தக் கொள்ளிடத்து வெள்ளத்துடனும் போராடி வெற்றி கொள்ளத் தீர்மானித்தார். சுற்று முற்றும் பார்த்தார்; சமீபத்தில் மிதந்து வந்த ஒரு மரக் கட்டையை எட்டிப் பிடித்துக் கொண்டார். கரையைக் குறி வைத்து நீந்தத் தொடங்கினார். வெள்ளத்தின் வேகத்துடனும் புயலின் வேகத்துடனும் ஏக காலத்தில் போராடிக் கொண்டே நீந்தினார். கை சளைத்தபோது சிறிது நேரம் வெறுமனே மிதந்தார். பலமுறை நதிக் கரையை ஏற முயன்றபோது மழையினால் சேறாகி யிருந்த கரை அவரை மறுபடியும் நதியில் தள்ளி விட்டது. உடனே, விட்டு விட்ட கட்டையைத் தாவிப் பிடித்துக் கொண்டார்.

இவ்விதம் இருட்டி ஒரு ஜாமத்துக்கு மேலாகும் வரையில் போராடிய பிறகு, நதிப் படுகையில் நாணற் காடு மண்டி வளர்ந்திருந்த ஓரிடத்தில், அவருடைய கால்கள் தரையைத் தொட்டன. பின்னர், வளைந்து கொடுத்த நாணற் புதர்களின் உதவியைக் கொண்டு அக் கிழவர் தட்டுத் தடுமாறி நடந்து, கடைசியாகக் கரை ஏறினார்.

அவரைச் சுற்றிலும் கனாந்தகாரம் சூழ்ந்திருந்தது. பக்கத்தில் ஊர் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. திருவையாற்றுக்கு எதிரில் கரை ஏற வேண்டிய ஓடத் துறைக்குச் சுமார் ஒன்றரைக் காத தூரம் கிழக்கே வந்திருக்க வேண்டுமென்று தோன்றியது. ஆம், ஆம்! குடந்தை நகரத்துக்கு அருகிலேதான் தாம் கரை ஏறியிருக்க வேண்டும். இன்றிரவு எப்படியாவது குடந்தை நகருக்குப் போய்விட முடியுமா?......

புயல் அப்போதுதான் பூரண உக்கிரத்தை அந்தப் பிரதேசத்தில் அடைந்திருந்தது. நூறாயிரம் பேய்கள் சேர்ந்து சத்தமிடுவது போன்ற பேரோசை காதைச் செவிடுபடச் செய்தது. மரங்கள் சட சட வென்று முறிந்து விழுந்தன. வானத்தில் அண்ட கடாகங்கள் வெடித்து விடுவது போன்ற இடி முழக்கங்கள் அடிக்கடி கேட்டன. பெரு மழை சோ வென்று கொட்டியது.

“எங்கேயாவது பாழடைந்த மண்டபம் அல்லது பழைய கோயில் இல்லாமலா போகும்? அதில் தங்கி இரவைக் கழிக்க வேண்டியதுதான். பொழுது விடிந்த பிறகுதான் மேலே நடையைத் தொடங்க வேண்டும்” என்று முடிவு கட்டிக் கொண்டு, தள்ளாடி நடுங்கிய கால்களை ஊன்றி வைத்த வண்ணம் நதிக் கரையோடு நடந்து சென்றார்.

நதியில் கரையின் விளிம்பைத் தொட்டுக் கொண்டு வெள்ளம் போய்க் கொண்டிருந்தது. மழை பெய்தபடியால் கரை மேலேயும் ஓரளவு தண்ணீராயிருந்தது. இருட்டைப் பற்றியோ சொல்ல வேண்டியதாயில்லை. ஆகவே, அந்த வீரக் கிழவர் நடந்து சென்ற போது, தம் எதிரிலே நதிக் கரையின் குறுக்கே கொஞ்சம் தண்ணீர் அதிகமாக ஓடியதைப் பற்றி அதிக கவனம் செலுத்தவில்லை. திடீரென்று முழங்கால் அளவு ஜலம் வந்து விட்டதும், சற்றுத் தயங்கி யோசித்தார். தொடையளவு ஜலம் வந்ததும் திடுக்கிட்டார். அதற்கு மேலே யோசிப்பதற்கு அவகாசமே இருக்கவில்லை. மறு கணம் அவர் தலை குப்புறத் தண்ணீரில் விழுந்தார். கொள்ளிடத்தின் கரை உடைத்துக் கொண்டு அந்த இடத்தில் தெற்கு நோக்கிப் பாய்ந்து கொண்டிருந்த வெள்ளம் அவரை உருட்டிப் புரட்டி அடித்துக் கொண்டு போயிற்று. கரைக்கு அப்பால் பள்ளமான பிரதேசமானபடியால் அவரை ஆழமாக, இன்னும் ஆழமாக, அதல பாதாளத்துக்கே அடித்துக் கொண்டு போவது போலிருந்தது. படகு கவிழ்ந்து நதியில் போய்க் கொண்டிருந்த வெள்ளத்தில் மூழ்கிய போது அவர் சற்று எளிதாகவே சமாளித்துக்கொண்டார். இப்போது அவ்விதம் முடியவில்லை. உருண்டு புரண்டு, உருண்டு புரண்டு, கீழே கீழே போய்க் கொண்டிருந்தார். கண் தெரியவில்லை; காது கேட்கவில்லை; நிமிர்ந்து நின்று மேலே வரவும் முடியவில்லை. மூச்சுத் திணறியது. யாரோ ஒரு பயங்கர ராட்சதன் அவரைத் தண்ணீரில் அமுக்கி அமுக்கித் தலை குப்புறப் புரட்டிப் புரட்டி, அதே சமயத்தில் பாதாளத்தை நோக்கி இழுத்துக் கொண்டு போனான். ஆகா! அந்த ராட்சதன் வேறு யாரும் இல்லை! கொள்ளிடத்தின் கரையை உடைத்துக்

கொண்டு, உடைப்பின் வழியாக அதி வேகமாகப் பாய்ந்த வெள்ளமாகிய ராட்சதன்தான்! அவனுடைய கோரமான பிடியிலிருந்து, பயங்கரமான உருட்டலிலிருந்து, தப்பிப் பிழைக்க முடியுமா? கால் தரையில் பாவவில்லையே? கைக்குப் பிடி எதுவும் அகப்படவில்லையே? மூச்சுத் திணறுகிறதே? கழுத்தைப் பிடித்துத் திருகுவது போலிருக்கிறதே? காது செவிடுபடுகிறதே! ...... துர்க்கா பரமேசுவரி! தேவி! நான் இந்த விபத்திலிருந்து பிழைப்பேனா!...... அடிபாவி! நந்தினி! உன்னால் எனக்கு நேர்ந்த கதியைப் பார்! ஐயோ! பாவம்! உன்னை அந்த தூர்த்தர்கள் மத்தியில் விட்டுவிட்டு வந்தேனே? சீச்சீ! உன் அழகைக் கண்டு மயங்கி, உன் நிலையைக் கண்டு இரங்கி, உன்னை மணந்து கொண்டதில் நான் என்ன சுகத்தைக் கண்டேன்? மன அமைதியை இழந்ததைத் தவிர வேறு என்ன பலனை அனுபவித்தேன்? கடைசியில், இப்படிக் கொள்ளிடத்து உடைப்பில் அகப்பட்டுத் திணறித் திண்டாடிச் சாகப் போகிறேனே! அறுபத்து நாலு போர்க் காயங்களைச் சுமந்த என் உடம்பைப் புதைத்து வீரக் கல் நாட்டிப் பள்ளிப்படை கட்டப் போவதில்லை! என் உடலை யாரும் கண்டெடுக்கப் போவதுகூட இல்லை! எங்கேயாவது படு பள்ளத்தில் சேற்றில் புதைந்து விடப் போகிறேன்! என் கதி என்ன ஆயிற்று என்று கூட யாருக்கும் தெரியாமலே போய்விடப் போகிறது! அல்லது எங்கேயாவது கரையிலே கொண்டு போய் என் உடம்பை இவ்வெள்ளம் ஒதுக்கித்தள்ளிவிடும்! நாய் நரிகள் பிடுங்கித் தின்று பசியாறப் போகின்றன!...

சில நிமிட நேரத்திற்குள் இவை போன்ற எத்தனையோ எண்ணங்கள் பழுவேட்டரையர் மனத்தில் தோன்றி மறைந்தன. பின்னர் அடியோடு அவர் நினைவை இழந்தார்......

தடார் என்று தலையில் ஏதோ முட்டியதும் மீண்டும் சிறிது நினைவு வந்தது. கைகள் எதையோ, — கருங்கல்லையோ, கெட்டியான தரையையோ,—பிடித்துக் கொண்டிருந்தன. ஏதோ ஒரு சக்தி, அவரை மேலே கொண்டு வந்து உந்தித் தள்ளியது. அவரும் மிச்சமிருந்த சிறிது சக்தியைப் பிரயோகித்து, கரங்களை ஊன்றி மேலே எழும்பிப் பாய்ந்தார். மறு நிமிடம், கெட்டியான கருங்கல் தரையில் அவர் கிடந்தார். கஷ்டப்பட்டுக் கண்களைத் திறக்கப் பிரயத்தனப்பட்டார். இறுக அழுங்கிக் கிடந்த கண்ணிமைகள் சிறிது திறந்ததும், எதிரே தோன்றிய ஜோதி அவருடைய கண்களைக் கூசச் செய்தது. அந்த ஜோதியில் துர்க்கா பரமேசுவரியின் திருமுக மண்டலம் தரிசனம் தந்தது! தேவி! உன் கருணையே கருணை! என்னுடைய அமைதியற்ற மண்ணுலக வாழ்வை முடித்து விண்ணுலகில் உன்னுடைய சந்நிதானத்துக்கே அழைத்துக் கொண்டாய் போலும்!......

இல்லை, இல்லை! இது விண்ணுலகம் இல்லை. மண்ணுலகத்திலுள்ள அம்மன் கோவில். எதிரே தரிசனம் அளிப்பது அம்மனுடைய விக்கிரகம். தாம் விழுந்து கிடப்பது கர்ப்பக் கிருஹத்தை அடுத்துள்ள அர்த்த மண்டபம். அம்மனுக்கு அருகில் மூணுக், மூணுக்கென்று சிறிய தீபம் எரிந்துகொண்டிருக்கிறது. அதன் வெளிச்சந்தான் சற்று முன் தம் கண்களை அவ்வளவு கூசும்படி செய்தது! வெளியிலே இன்னும் 'சோ' என்று மழை கொட்டிக் கொண்டிருக்கிறது. புயலும் அடித்துக்கொண்டிருக்கிறது. அவ்வளவு புயலும் மழையும் தேவி கோவிலின் கர்ப்பக்கிருஹத்தில் ஒளிர்ந்த தீபத்தை அசைக்க முடியவில்லை! இது ஒரு நல்ல சகுனமோ? துர்க்கா பரமேசுவரி தம்மிடம் வைத்துள்ள கருணைக்கு அறிகுறியோ? எத்தனை பெரிய விபத்துக்கள் வந்தாலும் தமது ஜீவன் மங்கிவிடாது என்று எடுத்துக் காட்டுவது போல அல்லவா இருக்கிறது? ஜகன்மாதாவின் கருணையே கருணை! தமது பக்தி யெல்லாம், தாம் செய்த பூசனை எல்லாம் வீண் போகவில்லை.......

கிழவர் தட்டுத் தடுமாறி, எழுந்து நிற்க முயன்றார். அவர் உடம்பு நடுங்கியது. வெகு நேரம் வெள்ளத்திலேயே கிடந்தபடியால் உடம்பு சில்லிட்டு நடுங்குவது இயல்புதான் அன்றோ? அம்மன் சந்நிதியில் திரை விடுவதற்காகத் தொங்கிய துணியை எடுத்து உடம்பை நன்றாகத் துடைத்துக் கொண்டார். தமது ஈரத் துணியைக் களைந்து எறிந்து விட்டு திரைத் துணியை அரையில் உடுத்திக் கொண்டார்.

அம்மன் சந்நிதியில் உடைத்த தேங்காய் மூடிகள், பழங்கள், நிவேதனத்துக்கான பொங்கல் பிரசாதங்கள்—எல்லாம் வைத்திருப்பதைக் கண்டார். தேவிக்குப் பூஜை செய்வதற்காக வந்த பூசாரியும் பிரார்த்தனைக் காரர்களும் எல்லாவற்

றையும் அப்படி அப்படியே போட்டு விட்டு ஓடிப் போயிருக்க வேண்டும். ஏன் அவர்கள் அப்படி ஓடினார்கள்? புயலுக்கும் மழைக்கும் பயந்து ஓடினார்களா? அல்லது கொள்ளிடத்துக் கரையில் உடைப்பு ஏற்பட்டு விட்டதைப் பார்த்து விட்டு ஓடினார்களா? எதுவாயிருந்தாலும் சரி. தாம் செய்த புண்ணியந்தான்! துர்க்கா பரமேசுவரி தம்மை உடைப்பு வெள்ளத்திலிருந்து காப்பாற்றியது மட்டுமல்ல; தம்முடைய பசி தீருவதற்குப் பிரசாதமும் வைத்துக் கொண்டு காத்திருக்கிறாள்......

இன்றிரவை இந்தக் கோயிலிலேயே கழிக்க வேண்டியதுதான். இதைக் காட்டிலும் வேறு தக்க இடம் கிடைக்கப் போவதில்லை. உடைப்பு வெள்ளம் இந்தச் சிறிய கோவிலை ஒட்டித்தான் பாய்ந்து செல்ல வேண்டும். அதனால் கோவிலுக்கே ஆபத்து வரலாம். கோவிலைச் சுற்றிலும் வெள்ளம் குழி பறித்துக் கொண்டிருக்கும். அஸ்திவாரத்தையே தகர்த்தாலும் தகர்த்து விடும். ஆயினும் இன்று இரவுக்குள்ளே அப்படி ஒன்றும் நேர்ந்து விடாது. அவ்விதம் நேர்வதாயிருந்தாலும் சரிதான். அன்றிரவு அந்தக் கோவிலை விட்டுப் போவதற்கில்லை. உடம்பில் தெம்பு இல்லை; உள்ளத்திலும் சக்தி இல்லை......

பய பக்தியுடன் பழுவேட்டரையர் தேவியின் சந்நிதானத்தை நெருங்கினார். அங்கிருந்த பிரசாதங்களை எடுத்து வேண்டிய அளவு அருந்தினார். மிச்சத்தைப் பத்திரமாக வைத்து மூடினார்.

தேவியின் முன்னிலையில் நமஸ்காரம் செய்யும் பாவனையில் படுத்தார். கண்களைச் சுற்றிக்கொண்டு வந்தது. சிறிது நேரத்துக்குள் பழுவேட்டரையர் பெருந் துயிலில் ஆழ்ந்து விட்டார்.

## அத்தியாயம் . 10

# கண் திறந்தது!

முதலில் நதி வெள்ளத்திலும், பின்னர் உடைப்பு வெள்ளத்திலும் அகப்பட்டுத் திண்டாடியபடியால் பெரிதும் களைப்படைந்திருந்த பழுவேட்டரையர் வெகு நேரம் நினைவற்று, உணர்ச்சியற்று, கட்டையைப்போல் கிடந்து தூங்கினார். வேண்டிய அளவு தூங்கிய பிறகு, இலேசாக நினைவுகளும் கனவுகளும் தோன்றின. ஒரு சமயம் துர்க்கா பரமேசுவரி கோவில் விக்கிரகத்திலிருந்து புறப்பட்டு நாலு அடி எடுத்து வைத்து நடந்து அவர் அருகில் வந்தாள். அனல் வீசிய கண்களினால் அவரை உற்று நோக்கிய வண்ணம் திருவாய் மலர்ந்தாள்:— "அடே, பழுவேட்டரையா! நீயும் உன் குலத்தாரும் தலை முறை தலை முறையாக எனக்கு வேண்டியவர்கள். ஆகையால் உனக்கு எச்சரிக்கிறேன். உன்னுடைய அரண்மனையில் நீ கொண்டு வைத்திருக்கிறாயே, அந்த நந்தினி என்பவள் மனிதப் பெண் உருக்கொண்ட ராட்சஸி. உன்னுடைய குலத்தையும் சோழர் குலத்தையும் வேரோடு அழித்துப் போடுவதற்காக வந்தவள். அதற்குச் சரியான சமயத்தை எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறாள். அவளை உன் அரண்மனையிலிருந்தும் உன் உள்ளத்திலிருந்தும் அப்புறப் படுத்தி விட்டு மறு காரியம் பார்! இல்லாவிட்டால், உனக்கும் உன் குலத்துக்கும் என்றும் அழியாத அபகீர்த்தி ஏற்படும்......!"

இவ்விதம் எச்சரித்து விட்டுத் தேவி திரும்பிச் சென்று விக்கிரகத்துக்குள் புகுந்து கலந்து விட்டாள்!......

பழுவேட்டரையர் திடுக்கிட்டு எழுந்தார். அவர் உடம்பு கிடுகிடென்று நடுங்கிக் கொண்டிருந்தது. தாம் கண்டது கனவுதான் என்று நம்புவது அவருக்குச் சற்று சிரமமாகவே இருந்தது. ஆயினும் அப்படித்தான் இருக்க வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டார்.

பொழுது நன்றாக விடிந்திருந்தது. புயலின் உக்கிரம் தணிந்திருந்தது. மழை நின்று போயிருந்தது. 'சோ' வென்ற சத்தம் மட்டும் கேட்டுக் கொண்டிருந்தது. கோவில் வெளி மண்டபத்தின் விளிம்பின் அருகில் வந்து நின்று சுற்று முற்றும் பார்த்தார். அவர் கண்ட காட்சி உற்சாக மளிப்பதாக இல்லை.

கொள்ளிடத்தின் உடைப்பு இதற்குள் மிகப் பெரிதாகப் போயிருந்தது. நதி வெள்ளத்தில் ஏறக்குறையப் பாதி அந்த உடைப்பின் வழியாகக் குபுகுபுவென்று பாய்ந்து கொண்டிருந்ததாகத் தோன்றியது. கிழக்குத் திசையிலும் தெற்குத் திசையிலும் ஒரே வெள்ளக் காடாக இருந்தது. மேற்கே மட்டும் கோவிலை

அடுத்துச் சிறிது தூரம் வரையில் வெள்ளம் சுழி போட்டுக் கொண்டு துள்ளிக் குதித்துக்கொண்டு போயிற்று. அப்பால் குட்டை மரங்களும் புதர்களும் அடர்ந்திருந்த காட்டுப் பிரதேசம் வெகு தூரத்துக்குக் காணப்பட்டது. அது திருப்புறம்பயம் கிராமத்தை அடுத்த காடாயிருக்க வேண்டுமென்றும், அந்தக் காட்டின் நடுவில் எங்கேயோதான் கங்க மன்னன் பிருதிவிபதிக்கு வீரக் கல் நாட்டிய பழைய பள்ளிப் படைக் கோயில் இருக்க வேண்டும் என்றும் ஊகம் செய்தார்.

அந்தப் பள்ளிப்படை உள்ள இடத்தில் நூறு வருஷங்களுக்கு முன்னால் நடந்த மாபெரும் யுத்தம் அவர் நினைவுக்கு வந்தது. அந்தப் போரில் சோழர் குலத்துக்கு உதவியாகத் தமது முன்னோர்கள் செய்த வீர சாகஸச் செயல்களையும் ஞாபகப் படுத்திக் கொண்டார். அப்படிப்பட்ட தமது பழம் பெருங் குலத்துக்கு இந்த நந்தினியினால் உண்மையிலேயே அவகேடு நேர்ந்து விடுமோ? துர்க்கா பரமேசுவரி தமது கனவிலே தோன்றிக் கூறியதில் ஏதேனும் உண்மை இருந்தாலும் இருக்குமோ......?

எப்படியிருந்தாலும் இனி சர்வ ஜாக்கிரதையாக யிருக்க வேண்டும். நந்தினியின் அந்தரங்கம் என்ன வென்பதையும் கண்டு பிடித்தேயாக வேண்டும். முதலில், இங்கிருந்து தப்பிச் சென்ற பிறகல்லவா, மற்றக் காரியங்கள்? திருப்புறம்பயம் கிராமத்தை அடைந்தால் அங்கே ஏதேனும் உதவி பெறலாம். கவிழ்ந்த படகிலிருந்து தம்மைப் போல் வேறு யாரேனும் தப்பிப் பிழைத் திருந்தால், அவர்களும் அங்கே வந்திருக்கக் கூடும். ஆனால் வெள்ளத்தைக் கடந்து திருப்புறம்பயம் கிராமத்துக்குப் போவது எப்படி?

இந்தக் கோவிலைச் சுற்றி உடைப்பு வெள்ளம் இப்படிச் சுழி போட்டுக் கொண்டு ஓடுகிறதே? இதில் ஒரு மத யானை இறங்கினால் கூட அடித்துத் தள்ளிக் கொண்டு போய் விடுமே? இதை எப்படித் தாண்டிச் செல்வது?

உடைப்பு வெள்ளம் கோவிலைச் சுற்றிக் கீழே கீழே தோண்டிக் குழி பறித்துக் கொண்டிருப்பது திண்ணம். கோவில் எப்போது விழுமோ தெரியாது! துர்க்கா பரமேசுவரியின் சக்தியினால் விழாமலிருந்தால் தான் உண்டு. ஆயினும், அங்கிருந்து வெளியேறுவது எப்படி? உடைப்பு வெள்ளம் வடிந்த பிறகு போவது என்றால், எத்தனை நாள் ஆகுமோ தெரியாது.

நல்லவேளை, வேறொரு வழி இருக்கிறது. கோவிலுக்கு எதிரே பிரம்மாண்டமாக வளர்ந்திருந்த வேப்ப மரம் ஒன்று இருந்தது. புயற் காற்றிலே விழாமல் அது எப்படியோ தப்பிப் பிழைத்தது. ஆனால் கோவிலைச் சுற்றித் துள்ளிச் சென்று கொண்டிருந்த உடைப்பு வெள்ளம், அந்த வேப்ப மரத்தைச்சுற்றிலும் சுழியிட்டுக் குழி பறித்






துக்கொண்டிருந்ததால், கோவில் விழுவதற்கு முன்னால், அந்த மரம் விழுவது நிச்சயம். மரம் விழுந்தால் அநேகமாக மேற்குத் திசையிலுள்ள காட்டுப் பிரதேசத்துக்கு ஒரு பாலத்தைப் போல் அது விழக்கூடும். இல்லாவிட்டாலும், வெள்ளம் மரத்தை அடித்துக் கொண்டு போய் எங்கேயாவது கரையோரத்தில் சேர்க்கும். மரம் விழுந்தவுடனே அதன் மேல் தொத்தி ஏறிக் கொண்டால், ஒருவாறு அங்கிருந்து தப்பிப் பிழைக்கலாம்.

அதுவரையில் அக் கோயிலிலேயே இருக்க வேண்டியதுதான். தேவியின் கருணையினால் இன்னும் ஒருநாள் பசியாறுவதற்கும் பிரசாதம் மிச்சமிருக்கிறது. மரம் விழும் வரையில், அல்லது வெள்ளம் வடியும் வரையில் அங்கேயே பொறுமையுடன் காத்திருக்க வேண்டியதுதான். அதைத் தவிர வேறு என்ன செய்வது?

அவசரப் படுவதில் பயன் ஒன்றுமில்லை. நம்மால் இவ்வுலகில் இன்னும் ஏதோ பெரிய காரியங்கள் ஆக வேண்டியிருப்பதனாலேதான், தேவி ஜகன்மாதா வெள்ளத்தில் சாகாமல் காப்பாற்றியிருக்கிறாள். ஆதலின் மேலே நடக்க வேண்டியதற்கும் துர்க்கா பரமேசுவரியே வழி காட்டுவாள் அல்லவா?

அன்று பகல் சென்றது. இன்னும் ஓர் இரவும் பகலும் கழிந்தன. புயல்தான் சென்ற விடமெல்லாம் அதாஹதம் செய்து கொண்டே மேற்குத் திசையை நோக்கிச் சென்று விட்டது.

தூவானமும் விட்டு விட்டது. ஆனால் துர்க்கா தேவியின் கோயிலில் அகப்பட்டுக் கொண்ட பழுவேட்டரையருக்கு மட்டும் விடுதலை கிட்டவில்லை. கொள்ளிடத்து வெள்ளம் குறைந்தது போலக் காணப்பட்டது. ஆனால் உடைப்பு வர வரப் பெரிதாகிக் கொண்டு வந்தது. கோயிலைச் சுற்றிச் சென்ற வெள்ளம் குறையவில்லை. ஆழம் என்னமோ அதிக

மாகிக் கொண்டே இருக்க வேண்டும். அதை அளந்து பார்ப்பது எப்படி? அல்லது அந்த உடைப்பு வெள்ளத்தில் இறங்கி நீந்திச் செல்லுவது பற்றித்தான் நினைத்துப் பார்க்கவும் முடியுமா?

கடைசியாக, அன்று சூரியன் அஸ்தமிக்கும் நேரத்தில் பழுவேட்டரையர் எதிர்பார்த்தபடி, கோயிலுக்கு எதிரேயிருந்த பெரும் வேப்பமரமும் விழுந்தது. விழுந்த மரம் நல்ல வேளையாக உடைப்பு வெள்ளத்தின் மேற்குக் கரையைத் தொட்டுக் கொண்டு கிடந்தது. அதன் வழியாக அப்பால் செல்வதற்குப் பழுவேட்டரையர் ஆயத்தமானார். இரவிலே புறப்பட்டு அந்தக் காட்டுப் பிரதேசத்தில் எப்படி வழி கண்டு பிடித்துப் போவது என்பது பற்றிச் சிறிது தயங்கினார். சில கண நேரத்துக்கு மேல் அந்தத் தயக்கம் நீடித்திருக்கவில்லை. உடனே புறப்பட வேண்டியதுதான் என்று முடிவு செய்து, தம்மை அந்தப் பேராபத்திலிருந்து காத்தருளிய துர்க்கா பரமேசுவரிக்கு நன்றி தெரிவிப்பதற்காகச் சந்நிதியை நெருங்கினார். சந்நிதியில் விழுந்து நமஸ்கரித்தார்.

அச்சமயத்தில் அவர் உடம்பு சிலிர்க்கும்படியான குரல் ஒன்று கேட்டது. முதலில் துர்க்கையம்மன்தான் பேசுகிறாளோ என்று தோன்றியது. பிறகு, இல்லை; குரல் வெளியில் சிறிது தூரத்துக்கு அப்பாலிருந்து வருகிறது என்று தெளிவடைந்தார்.

"மந்திரவாதி! மந்திரவாதி!" என்று கூப்பிட்டது அந்தக் குரல்.

பிறகு மறுபடியும், "ரவிதாஸா! ரவிதாஸா!" என்று மீண்டும் கூவியது. முன் எப்பொழுதோ கேட்ட குரல் போலத் தோன்றியது.

பழுவேட்டரையர் எழுந்து முன் மண்டபத்துக்கு வந்தார். தூண் மறைவில் நின்று குரல் வந்த இடத்தை நோக்கினார். உடைப்பு வெள்ளத்துக்கு அப்பால், விழுந்த வேப்ப மரத்தின் நுனிப் பகுதிக்கு அருகில், ஓர் உருவம் நின்று கொண்டிருக்கக் கண்டார். "மந்திரவாதி! மந்திரவாதி!" என்னும் கூக்குரல், அவருக்குத் தம் சகோதரன் முன்னொரு சமயம் கூறியவற்றை ஞாபகப் படுத்தியது. துர்க்காதேவியின் கருணையினால் தாம் அதுவரை அறிந்திராத மர்மத்தை அறிந்து கொள்ளப் போகிறோமோ என்ற எண்ணம் உதித்தது. ஆதலின் அசையாமல் நின்றார்.

அக்கரையில் நின்ற உருவம் விழுந்த வேப்ப மரத்தின் வழியாக உடைப்பு வெள்ளத்தைக் கடந்து வரத் தொடங்கியதைப் பார்த்தார்.

தம் வாழ்நாளில் அதுவரை செய்திராத ஓர் அதிசயமான காரியத்தைப் பழுவேட்டரையர் அப்போது செய்தார். கோவில் முன் மண்டபத்தில் சட்டென்று படுத்துக் கொண்டார். தூங்குவது போலப் பாசாங்கு செய்தார்.

ரவிதாஸன் என்னும் மந்திரவாதியைப்பற்றி அறிந்து கொள்ளும் ஆசை அவரை அவ்வளவாகப் பற்றிக் கொண்டது. அவன் நந்தினியைப் பார்ப்பதற்காகச் சில சமயம் அவர் அரண்மனைக்கு வந்த மந்திரவாதியாகவே இருக்க வேண்டும். அவனுக்கும் நந்தினிக்கும் உள்ள தொடர்பு உண்மையில் எத்தகையது? அவனை இந்த இடத்தில் இந்த வேளையில் தேடி அலைகிறவன் யார்? எதற்காகத் தேடுகிறான்? இதையெல்லாம் தெரிந்து கொண்டால், ஒரு வேளை நந்தினி தம்மை உண்மையிலேயே வஞ்சித்து வருகிறாளா என்பதைப் பற்றி அறிந்து கொள்ளலாம் அல்லவா? ரவிதாஸன் மட்டும் அவரிடம் சிக்கிக் கொண்டால், அவனிடத்திலிருந்து உண்மையைத் தெரிந்து கொள்ளாமல் விடுவதில்லை என்று மனத்தில் உறுதி கொண்டார்.

தூங்குவதுபோல் பாசாங்கு செய்தவரின் அருகில் அந்த மனிதன் வந்தான். மீண்டும் "ரவிதாஸா! ரவிதாஸா!" என்று கூப்பிட்டான்.

ஆகா! இந்தக் குரல்? கடம்பூர் மாளிகையில் முன்னொரு தடவை வேலனாட்டம் ஆடிக் குறி சொன்னானே, அந்தத் தேவராளன் குரல்போல அல்லவா இருக்கிறது? இவனுடைய கழுத்தைப் பிடித்து இறுக்கி உண்மையைச் சொல்லும்படி செய்யலாமா? வேண்டாம்! இன்னும் சற்றுப் பொறுப்போம். இவன் மூலமாக மந்திரவாதி ரவிதாஸனைப் பிடிப்பதல்லவா முக்கியமான காரியம்?

"மந்திரவாதி! சூரியன் அஸ்தமிப்பதற்குள்ளேயே தூங்கி விட்டாயா? அல்லது செத்துத் தொலைந்து போய் விட்டாயா?" என்று சொல்லிக் கொண்டே வந்த மனிதன் பழுவேட்டரையரின் உடம்பைத் தொட்டு அவருடைய முகம் தெரியும்படி புரட்டினான். அப்படிப் புரட்டியும் பழுவேட்டரையர் ஆடாமல் அசையாமல் கிடந்தார்.

பின் மாலையும் முன்னிரவும் கலந்து மயங்கிய அந்த நேரத்தில், மங்கலான வெளிச்சத்தில், தேவராளன் (ஆமாம்: அவனேதான்!) பழுவேட்டரையரின் முகத்தைப் பார்த்தான். தன் கண்களை நன்றாகத் துடைத்துக் கொண்டு இன்னொரு தடவை உற்றுப் பார்த்தான். பீதியும், பயங்கரமும், ஆச்சரியமும், அவநம்பிக்கையும் கலந்து தொனித்த எனக் குரலில் "ஊ ஊ!" "ஓ! ஓ!" "ஆ! ஆ!" என்று ஊளையிட்ட வண்ணம் அவ்விடத்தை விட்டு ஓட்டம் பிடித்தான்!

**ப**ழுவேட்டரையர் கண்ணைத் திறந்து நிமிர்ந்து உட்கார்ந்து பார்ப்பதற்குள்ளே அவன் கோயிலுக்கு முன்னுலிருந்த பலி பீடத் திறந்த மண்டபத்தை இரண்டு எட்டில் தாண்டிச் சென்று, வேப்பமரப் பாலத்தின் மீது வேகமாக நடக்கத் தொடங்கி விட்டான்.

திரும்பிப் பார்ப்பதற்குக் கூட ஒரு கணமும் நில்லாமல் அதி விரைவாக அம்மரத்தின்மீது ஓட்டமும் தாவலுமாகச் சென்று அக்கரையை அடைந்தான். மறு கணம் புதர்களும் மரங்களும் அடர்ந்த காட்டில் மறைந்து விட்டான்.

பழுவேட்டரையர் அவன் மிரண்டு தாவி ஓடுவதைக் கண் கொட்டா வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தார். காட்டில் அவன் மறைந்ததும், சமயம் நேர்ந்தபோது அவனைப் பிடிக்காமல் தாம் விட்டுவிட்டது தவறோ என்ற ஐயம் அவரைப் பற்றிக் கொண்டது. உடனே, அவரும் குதித்து எழுந்து ஓடினார். தேவராளனைப் போல் அவ்வளவு வேகமாக மரப் பாலத்தின் பேரில் அவரால் தாவிச் செல்ல முடியவில்லை. மெள்ள மெள்ளத் தட்டுத் தடுமாறிக் கிளைகளை ஆங்காங்கு பிடித்துக் கொண்டுதான் போகவேண்டியிருந்தது.

அக்கரை அடைந்ததும் காட்டுப் பிரதேசத்துக்குள்ளே ஒற்றையடிப் பாதை ஒன்று போவது தெரிந்தது. அதை உற்றுப் பார்த்தார். சேற்றில் புதிதாகக் காலடிகள் பதிந்திருந்தது தெரிந்தது. அந்த வழியிலேதான் தேவராளன் போயிருக்க வேண்டுமென்று தீர்மானித்து மேலே விரைவாக நடந்தார்.

அது முன்னிலாக் காலமானாலும் வானத்தில் இன்னும் மேகங்கள் சூழ்ந்திருந்தபடியால் நல்ல இருட்டாகவே இருந்தது. காட்டுப் பிரதேசத்தில் என்னவெல்லாமோ சத்தங்கள் கேட்டன. புயலிலும் மழையிலும் அடிபட்டுக் கஷ்டங்களுக்கு உள்ளாகியிருந்த காட்

# கவர்னரின் வாழ்த்து

தமிழ் இசைச் சங்கம் இம்மாதம் பதினைந்தாம் தேதி பத்தாவது ஆண்டு விழா கொண்டாடுவதைக் குறித்து மகிழ்ச்சி அடைகிறேன்.



இப்போது நடந்து வரும் நமது கலைகளின் புனருத்தாரண சகாப்தத்தில் இசை நிபுணர்களுக்கு ஊக்கமும் உற்சாகமும் அளிப்பது எனக்கு மிகச் சந்தோஷத்தைக் கொடுக்கிறது. சங்கீதத் துறையில் சென்னை மகத்தான கீர்த்தி பெற்று விளங்குவது எல்லோரும் அறிந்ததே.

இந்த விழா மக்களின் வாழ்க்கையில் இன்னும் அதிக அன்னியோன்னியத்தையும் இன்பத்தையும் உண்டு பண்ணுமாக.

தமிழ் இசைச் சங்கம் அதன் உயர்ந்த முயற்சியில் சகல வெற்றியும் பெறப் பிரார்த்திக்கிறேன்.

ராஜபவனம், கிண்டி
ஏப்ரல் 6, 1953

ஸ்ரீ பிரகாசா
(சென்னை கவர்னர்)

டில் வாழும் ஜீவராசிகள் கணக்கற்றவை மழை நின்றதினால் ஏற்பட்ட மகிழ்ச்சியைத் தெரிவித்துக் குரல் கொடுத்துக் கொண்டு அங்கு மிங்கும் சஞ்சரித்தன.

ஒற்றையடிப் பாதை சிறிது தூரம் போய் நின்று விட்டது. ஆனால் பழுவேட்டரையர் அத்துடன் நின்றுவிட விரும்பவில்லை. அன்றிரவு முழுதும் அந்தக் காட்டில் அலைந்து திரியும்படி நேர்ந்தாலும் அந்தத் தேவராளனையும் அவன் தேடிப் போகும் மந்திரவாதி ரவிதாஸனையும் பிடித்தே தீருவது என்று தீர்மானித்துக் கொண்டு, காட்டுப் புதர்களில் வழிகண்ட இடத்தில் நுழைந்து சென்றார்.

ஒரு ஜாம நேரம் காட்டுக்குள் அலைந்த பிறகு சற்றுத் தூரத்தில் வெளிச்சம் ஒன்று தெரிவதைப் பார்த்தார். அந்த வெளிச்சம், நின்ற இடத்தில் நில்லாமல் போய்க் கொண்டிருந்தபடியால், அது வழி கண்டு பிடிப்பதற்காக யாரோ கையில் எடுத்துச் செல்லும் சுளுந்தின் வெளிச்சமாகவே இருக்க வேண்டும்.

அந்த வெளிச்சத்தைக் குறி வைத்துக் கொண்டு வெகு விரைவாக நடந்தார். வெளிச்சத்தை நெருங்கிச் சென்று கொண்டிருந்தார்.

கடைசியாக, அந்தச் சுளுந்து வெளிச்சம் காட்டின் நடுவே ஒரு பாழடைந்த மண்டபத்தை வெளிச்சம் போட்டுக் காட்டுவது போல் காட்டி விட்டு உடனே மறைந்தது. அந்த மண்டபம் திருப்புறம்பயத்திலுள்ள பிருதிவிபதியின் பள்ளிப்படைக் கோவில்தான் என்பதைப் பழுவேட்டரையர் பார்த்த உடனே தெரிந்து கொண்டார். பள்ளிப்படையை நெருங்கி ஒரு பக்கத்துச் சுவர் ஓரமாக நின்று காது கொடுத்துக் கேட்டார்.

ஆமாம்; அவர் எதிர்பார்த்தது வீண் போகவில்லை. இரண்டு பேர் பேசிக் கொண்டிருந்தது கேட்டது. உரத்த குரலில் பேசியபடியால் பேசியது தெளிவாகக் கேட்டது.

"மந்திரவாதி! உன்னை எத்தனை நேரமாகத் தேடிக் கொண்டிருக்கிறேன், தெரியுமா? நீ ஒரு வேளை வர முடியாமற் போய் விட்டதோ, அல்லது உன்னையுந்தான் யமன் கொண்டு போய் விட்டானோ என்று பயந்து போனேன்!" என்றான் தேவராளன்.

மந்திரிவாதி ரவிதாஸன் கட கட வென்று சிரித்தான்.

"யமன் என்னிடம் ஏன் வருகிறான்? சுந்தர சோழனையும் அவனுடைய இரண்டு பிள்ளைகளையுந்தான் யமன் நெருங்கிக் கொண்டிருக்கிறான். நாளைய தினம் அவர்களுடைய வாழ் நாள் முடிந்து விடும்!" என்றான் மந்திரவாதி.

அச்சமயம் வானத்தையும் பூமியையும் பிரகாசப்படுத்திக் கொண்டு மின்னல் ஒன்று மின்னியது. (தொடரும்)

# ஒரு 1 ANNA அணாவுக்கு 3 மைல்கள்



## உங்கள் மோட்டார் சைகிள் மீது

ஒரு 125 ஸி. ஸி. வாங்குங்கள். ஒரு காலன் பெட்ரோலில் அது உங்களை 120 மைல் தூரம் ஏற்றிச் செல்கிறது. ஒரு மைலுக்கு நாலு தம்பிடிதான் ஆகும். உங்களுக்கென்று ஒரு சொந்த வண்டியும் ஆகிறது. நீங்கள் எங்கே வேண்டுமானாலும் எப்போது வேண்டுமானாலும் போகலாம்.

- சுலபமாக பணம் செலுத்த வசதி செய்யப்படும்.
- எப்பொழுதும் ஸ்பேர்கள் கிடைக்கும்.
- விற்பனைக்குப் பின்னர் சேவையும் உண்டு.

## ராயல் என்பீல்ட்
## எக்ஸெல்ஸியர்
## டி. கே. டபிள்யூ

குறைந்த குதிரையோட்டமுள்ள மோட்டார் சைகிள்கள்

### தி மதராஸ் மோட்டார்ஸ் லிட்.

மோட்டார் சைகிள் ஸ்பெஷலிஸ்டுகள்

36-C, மவுண்ட் ரோடு, மதராஸ்-2

# தமிழ்க்கலையின் சின்னம்

**ரா. க. சண்முகம் செட்டியார்**

தமிழ் நாட்டில் தமிழிசையைப் பரவச் செய்யத் தமிழ் மக்களிடையே உற்சாகத்தை ஊட்டுவதற்கான வழியைத் தேட வேண்டுமென்ற கருத்து பத்தாண்டுகளுக்கு முன்னர் 1943-ம் ஆண்டில் இராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் மனத்தில் எழுந்தது. தமிழ் இசைச் சங்கத்தின் சிறந்த கருத்து 1953-ம் ஆண்டில் உருவம் பெற்றது.

தமிழிசைச் சங்கம் சென்ற பத்தாண்டுகளாகப் பணியாற்றி வருகிறது. முடிவாகச் செட்டி நாட்டரசரின் கருத்து அழகியதொரு கலை மண்டபமாக உருக்கொண்டு காட்சியளிக்கிறது. இம்மண்டபத்தைத் தமிழிசை, நாட்டியம், நாடகத்தின் சின்னமாகக் கொள்ளாது தமிழ்க் கலையின் சின்னமாகவே கொள்ளுதல் வேண்டும். இவ்வழகிய மண்டபத்தின் கம்பீரத் தோற்றம் தமிழர்கள் பெருமையடைவதற்குரியது.



இந்தச் சமயத்தில் பொதுவாகத் தமிழிசைச் சங்கத்துக்கும், குறிப்பாகக் கர்நாடக சங்கீதத்துக்கும் தென்னிந்தியாவில் ஏற்பட்ட சச்சரவுகளை வினையூட்ட வேண்டுமென்பது என் விருப்பமில்லை. இந்த எதிர்ப்புகளுக்கு மத்தியில் தமிழிசை இயக்கம் வெற்றி பெற்றுத் தமிழ் மக்களின் இதயத்தில் பசுமரத்து ஆணியென நிலை கொண்டு விட்டது. இவ்வளர்ச்சி எதிர்பார்த்த தொன்றாகும். ஏனெனில் தமிழிசை இயக்கம் தமிழ்க் கலை மறுமலர்ச்சியின் ஓர் சிறந்த அம்சமாகும். பன்னீராண்டுகளாகப் பரவிவரும் பற்பல மாறுதல்களுக்குப் பின்னர் தமிழ்க் கலை தென்னிந்தியாவில் இன்று வேரூன்றிவிட்டது. இனி, தமிழ்க் கலையினையும் தமிழ் மொழியினையும் சிதைக்க முயன்றால் அந்த முயற்சி இறுதியில் கண்டிப்பாகத் தோல்வியுறும். தமிழ்க் கலையின் தொன்மையினையும் பெருமையினையும் உண்மையில் போற்றப்படுவதுடன் இந்தியக் கலையின் ஒருமைக்குத் தமிழ்க் கலை ஆக்கம் தருமென்பது உறுதி.

தமிழ் அன்பர்கள் எல்லோரும் இவ்வழகிய மண்டபம் பூர்த்தியாவதை வரவேற்க வேண்டும். பொதுவாகத் தென்னிந்திய மக்களுக்கும், சிறப்பாகச் சென்னை நகரவாசிகளுக்கும் இம்மண்டபம் சிறந்த பணியாற்றும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. இவ்வழகிய மண்டபம் செட்டி நாட்டரசருக்குரியதொரு ஞாபகச் சின்னமாக மட்டுமின்றி இதன் வழியாக இசை, நாட்டியம், நாடகம் ஆகிய கலைகளின் ஒளிக் கதிர் யாங்கணும் பரவி மக்கள் மகிழ்வர் என்பது உறுதியாகும்.

## இரண்டு விஷயங்கள்

பரந்து விரிந்து கிடக்கும் இந்த உலகில் எந்தப் பகுதியில் எப்படிப்பட்ட வாழ்க்கையைக் கடைப்பிடிக்கும் மனிதனுக்கும் அவன் வாழ்க்கைக்கு வேண்டிய இரண்டு முக்கியமான விஷயங்களில் ஒரு அபூர்வமான ஒற்றுமையைக் காணலாம். உலகமெல்லாம் சுற்றிக் கொண்டு வந்தாலும் இந்த இரண்டு விஷயங்களிலும் அவனவனுடைய சொந்த நாட்டின் விஷயங்கள்தான் அவனுக்கு அலாதியான ருசியைக் கொடுக்கும். அந்த அருமையான விஷயங்கள் என்ன தெரியுமா? ஒன்று சாப்பாடு. மற்றொன்று சங்கீதம்.

—சீன அறிஞர் லின்யூடாங்.

# நல்ல காலம் பிறக்கப் போகிறது!

டி. கே. சி.

தமிழ் நாட்டுச் சங்கீதம் தமிழ் நாட்டிலுள்ளவர்களுக் கெல்லாம் சொந்தம். ஆடவர் பெண்டிர் குழந்தைகளும் கூட அனுபவிக்கக் கூடியது. வட நாட்டிலிருந்து வந்த ஒருவர் அனுபவித்து விடவே முடியாது. மேல் நாட்டாரும் அனுபவிக்க முடியாது. அவர்கள் அனுபவித்தோம் என்று சொல்லுவதெல்லாம் வெறும் உபசாரந்தான்.

* * *

தமிழ்ச் சங்கீதத்தை வைத்துக் கொண்டு கோடிக்கணக்கான தமிழர்களையும் சந்தோஷப் படுத்தலாம். அப்படிச் சந்தோஷப் படுத்துவதற்கு ஒரே ஒரு வழிதான். சங்கீதம் எல்லாம் தமிழிலேயே இருக்க வேண்டும். ஜெர்மன் பாஷையில் உயர்ந்த சாகித்தியமும் சங்கீதமும் இருக்கிறதாம், நமக்கென்ன பிரயோசனம்? விட்டுத் தொலை என்று தானே சொல்லுகிறோம்.

மனிதனுக்குக் கடவுள் எத்தனையோ சக்திகளைக் கொடுத்திருக்கிறார். விஷயத்தைத் தெரியப்படுத்த பாஷையைக் கொடுத்திருக்கிறார். ஆனால் உணர்ச்சி பாவங்களை பாஷை அவ்வளவாக எடுத்துச் சொல்ல உதவுவதில்லை. எடுத்துச் சொன்னபோதிலும் இதயத்தில் நிறுத்துவதில்லை. பதிய வைப்பதில்லை. சங்கீதம் அதைச் சாதித்து விடுகிறது.

"பக்தன் வந்து நிற்கிறான் நம்மைச் சேவிக்க. நந்தியே நீர், இருக்கிற காரணமாக சன்னிதானம் மறைக்கிறதாம். கொஞ்சம் விலகிக் கொள்ளும்" என்று கடவுளே சொல்லுகிற பாவனை எவ்வளவு அருமையானது.

சற்றே விலகி
இரும்பிள்ளாய்!
சன்னிதானம்
மறைக்குதாம்:

என்று உண்மையான உணர்ச்சியோடும் பாவமான சங்கீதத்தோடும் பாடி விட்டால், நம் உணர்ச்சி இந்த உலகத்தை விட்டு வேறு உலகத்துக்குப் போய்விடவில்லையா! பக்தி பாவம் நம் இதயத்திலே பதிந்து விடுகிறது. இது அற்புதந்தான். தில்லையம்பலத்து நடராஜப் பெருமானை "தெருவில் வாரானோ!" என்று கமாஸ் ராகத்தில் பாடிவிட்டால், ஒரு பெண்ணின் ஆற்ற முடியாத ஏக்கத்துக்கு நாமே உள்ளாகி விடுகிறோமல்லவா?

* * *

கொஞ்ச காலமாக நம்முடைய சங்கீதத்துக்கு நல்ல காலம் வந்திருக்கிறது என்று சொல்ல வேண்டும். கூட்டங்களிலே இங்கிலீஷில் பேச ஆரம்பித்தால் 'தமிழிலே பேசுங்கள்' என்கிறார்கள். அப்படியே பாடகர்களைத் தமிழில் பாட வேண்டும் என்று சொல்ல ஆரம்பித்து விட்டார்கள். இனிமேல் பாடகர்கள்



தமிழ்ப் பாடல்களைக் கற்க ஆரம்பிப்பார்கள். தமிழ்ப் பாடல்களைப் பாடுகிறது தங்களுக்கு அகௌரவம் என்கிற எண்ணம் நீங்கி விடும். பாடல்களோ நிச்சயமாகத் தெலுங்கில் இருப்பதை விட எத்தனையோ மடங்கு அதிகமாகத் தமிழில் இருக்கின்றன. பாடகர்கள் அவைகளைக் கற்று நமக்கு உதவப் போகிறார்கள். நல்ல காலம் பிறக்கப் போகிறது. ஆடவர் பெண்டிர் பிள்ளைகள் எல்லோரும் காதை நன்றாகத் திறந்து வைத்துக் கொள்ளுங்கள்!

# உயிர் வாழ்கிறார்!

ரா. கி.

அமெரிக்காவின் பிரபல கோடீசுவரனான ராக்பெல்லர் பற்றிச் சமீபத்தில் ஒரு கதை படித்தேன். கோடி கோடியாக அவர் பணம் சேர்த்துக் கொண்டிருந்த சமயத்திலும் கவலை அவரைப் பிடுங்கித் தின்று கொண்டிருக்குமாம்! ஒரு சிறிய நஷ்டம் நேர்ந்து விட்டாலும் மிக்க மனவேதனைக்கு உள்ளாவாராம். ஒரு சமயம் அவர் நாற்பதினாயிரம் டாலர் பெறுமான தானியத்தைக் கப்பலேற்றி அனுப்பினாராம். கப்பல் போய்க் கொண்டிருந்த பிரதேசத்தில் பெரிய புயல் அடிப்பதாகத் தெரிய வந்ததாம். "ஐயையோ! இன்ஷியூர் செய்ய வில்லையே!" என்று தவித்தாராம். இன்ஷியூர் செய்ய 150 டாலர் செலவாகுமே என்பதற்காக இன்ஷியூர் செய்ய வில்லை. இப்போது புயலைப் பற்றிச் செய்தி வந்ததும் இன்ஷியூர் செய்யாதது பிசகு என்று எண்ணினாராம். உடனே ஆளை அனுப்பி இந்த நேரத்தில் எந்தக் கம்பெனியாவது இன்ஷியூர் செய்யுமா என்று பார்க்கச் சொன்னாராம். ஒரு கம்பெனியார் அதற்குச் சம்மதிக்கவே போன ஆசாமி இன்ஷியூர் செய்து விட்டுத் திரும்பினார். ஆனால் அவர் திரும்பி வந்து செய்தி சொன்னதும் ராக்பெல்லர் முன்னைக் காட்டிலும் "ஐயோ, போச்சே!" என்று அலறினாராம். காரணம் விசாரித்த போது, கப்பல்கள் ஜாக்கிரதையாகப் போக வேண்டிய இடத்துக்குப் போய்ச் சேர்ந்தனவென்று தெரிய வந்தது. பின்னே கோடீசுவரனான ராக்பெல்லர் எதற்காக அலறினார் என்றால், "அனாவசியமாக இன்ஷியூர் செய்யச் சொன்னேனே! நூற்றைம்பது டாலர் அநியாயமாய்ப் போச்சே!" என்பதற்காகத்தான்.

ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களைத் "தமிழ் நாட்டு ராக்பெல்லர்" என்று சிலர் சொல்லக் கேட்டிருக்கிறேன். இது எவ்வளவு தூரம் சரியான உவமை என்று நான் சொல்ல முடியாது. ஆனால் ஒரு விஷயத்தில் இந்த இரண்டு கோடீசுவரர்களுக்கும் வெகு தூரத்துக்கு வெகு தூரம்—கிட்டத்தட்ட கோடி மைல் தூரம் என்று நான் சொல்ல முடியும்.

1941-ம் வருஷத்தில் ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் தமிழிசை இயக்கத்துக்குத் தலைமை வகித்து நடத்த ஆரம்பித்தார்கள். அந்த இயக்கம் சம்பந்தமாக அந்த வருஷத்திலேதான் அவர்களை நான் சந்திக்க நேர்ந்தது. பிறகு சில காலம் அடிக்கடி பார்க்கவும் பேசிப் பழகவும் பாக்கியம் கிடைத்தது. இதே நாட்களில்தான் மலாய் நாடும் பர்மாவும் ஜப்பானியரால் கைப்பற்றப்பட்டன. மலாய் — பர்மா நாடுகளில் செட்டி நாட்டு அரசருக்கு ஏராளமான கொடுக்கல் வாங்கலும் வியாபார ஸ்தலங்களும் நிலபுலன்களும் உண்டு என்பது அனைவரும் அறிந்த விஷயம். ஒரு சமயம் ராஜா ஸர் அவர்களைச் சந்தித்த போது மலாயாவிலும் பர்மாவிலும் அவர்களுக்கு நேர்ந்திருக்கக் கூடிய பெரு நஷ்டங்களைக் குறித்து அனுதாபம் தெரிவிக்கும் முறையில் பிரஸ்தாபித்தேன். அப்போது அவர்கள் கூறிய பதில், பாச மறுத்துப் பற்றறுத்து முற்றும் துறந்த முனிவரின் மனோ நிலையை வெளிப்படுத்தியது கண்டு திகைத்துப் போனேன். "ஆமாம், பர்மாவிலும் மலேயாவிலும் எங்களுக்குப் பெரு நஷ்டந்தான். ஆனாலும் அதைப்பற்றி நான் கவலைப் படவில்லை. 'அங்கே யெல்லாம் நமக்குச் சொத்து இல்லை. எப்போதும் இருக்க வில்லை!' என்பதாக எண்ணிக் கொண்டு விட்டேன்" என்றார்கள்.

பர்மாவிலும் மலாயிலும் அவர்களுக்கு இருந்த லட்ச லட்சமான செல்வத்தை யெல்லாம் ஒரு நொடிப் பொழுதில் "இல்லை" என்று தீர்மானித்துக் கொண்டு விட்டார்கள். இதனால் மனத்தில் கவலைக்கும் இடமில்லை என்றாயிற்று.

ஆனால் ராஜா ஸர் அவர்களுடைய மனத்தில் கவலையே இல்லாமல் போய் விட்டதா? பர்மா—மலாய் சொத்துக்களைப் பற்றித்தான் கவலையில்லையென்றாயிற்றே தவிர, வேறொரு பெரும் கவலை அவர் மனத்தில் குடி கொண்டிருந்தது.



ராஜா சர் முத்தையா செட்டியார்

"தமிழ் இசை இயக்கத்தை எதிர்க்கிறார்களே! ஏன் எதிர்க்கிறார்கள்!" என்ற கவலை அச்சமயத்தில் ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களுக்குப் பெரும் வேதனை யளித்தது.

தமிழ் இசை இயக்கத்துக்கு விரோதமாக அவர் அப்படிப் பேசி இருக்கிறாரே! ஏன் அப்படிப் பேசி இருக்கிறார்! தமிழ் இசை இயக்கத்தை எதிர்த்து இந்தப் பத்திரிகை இப்படி எழுதியிருக்கிறதே! ஏன் இப்படி எழுதியிருக்கிறது! இந்த எதிர்ப்பை நாம் எப்படிச் சமாளிப்பது! எப்படி இயக்கத்துக்குப் பலம் அளிப்பது என்பதாக ஒரு நாள் அல்ல, சில நாள் அல்ல, பல காலம் கவலைப் பட்டார்கள். கோடி கோடியாகப் பணம் நஷ்டமாகிக் கொண்டிருந்த காலத்தில் செட்டி நாட்டு அரசரின் மனக் கவலை யெல்லாம் தமிழிசை இயக்கத்தைப் பற்றியதாகவே இருந்தது. இதிலிருந்து பணத்தைப் பற்றி அவர்கள் எத்தனைய பற்றற்ற

## தமிழ் உயரும்!

தமிழன் தமிழில் பாடினால் தமிழ் உயரும்; தமிழ்க் கலை சிறக்கும். இது யாரும் ஒப்புக் கொள்ளும் உண்மை. ஒரு குயில் குகூ என்றால் மற்றொரு குயில் குகூ என்கிறது. குயில் மொழி குயில்களுக்கு இனிது. காக்காய் கர்ர் என்றால் மற்றொரு காக்காய் கர்ர் என்று பதில் கொடுக்கிறது. காக்காய் மொழி காக்காய்க்கு இனிது. ஒரு சோலையில் குயிலுக்குக் குயில் பாடிக் கொள்கிறது. "ஏ குயிலே நீ ஏன் குயில் மொழியில் பாடுகிறாய்? கொக்கறகோ என்று என் மொழியில் பாடு" என்பதில்லை கோழி.

யோகி சுத்தானந்த பாரதியார்.

மனோ நிலையை அடைந்திருந்தார்கள் என்பது வெளியாயிற்று. தமிழிசையில் அவர்களுடைய பற்று எவ்வளவு உறுதியானது என்பதும் சந்தேகமற வெளியாயிற்று.

தமிழிசை இயக்கத்தைப் பற்றிச் செட்டி நாட்டு அரசரின் மனக் கவலையை நானும் சில சமயம் அதிகமாக்கினேன் என்று சொல்ல வேண்டியதாயிருக்கிறது. தமிழிசையை எதிர்ப்பவர்களை ஒரு சமயம் நான் காரசாரமாகத் தாக்கி ஒரு கட்டுரை எழுதியிருந்தேன். இந்தக் கட்டுரை வெளியான சில நாளைக்கெல்லாம் ராஜா ஸர் அவர்களை நான் பார்க்க நேர்ந்தது. வேறு விஷயங்களைப் பற்றிப் பேசினார்களே தவிரக் கட்டுரையைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லை. "ஒரு வேளை படிக்க வில்லை போலிருக்கிறது!" என்று நினைத்துக் கொண்டேன். கடைசியில் புறப்படும் சமயத்தில் அவர்கள் கூறியதாவது:—"உங்களுடைய கட்டுரையைப் படித்தேன். நன்றாக எழுதியிருக்கிறது. ஆனால் ரொம்பக் கடுமையாகத் தாக்கியிருக்கிறது. உங்களுக்குப் புத்தி சொல்ல வரவில்லை. என் அபிப்பிராயத்தைச் சொல்லுகிறேன். இவ்வளவு காரமாக எழுதுவதினால் காரியத்துக்கு அநுகூலம் உண்டா என்று யோசித்துப் பார்க்க வேண்டும்!"

இதைக் கேட்டு நான் ஒரு நிமிஷம் திகைத்துப் போனேன். பிறகு, "எதிர்ப்பவர்கள் கடுமையாகத்தானே எதிர்த்திருக்கிறார்கள்!" என்றேன்.

"எதிர்ப்பவர்கள் எப்படி வேணுமானாலும் பேசலாம்; எழுதலாம். ஆனால் நாளைக்கு அவர்கள் நம்முடைய கட்சிக்கு வருவதற்கு இடம் வைத்து நாம் எழுத வேண்டும். ரொம்பக் காரமாக எழுதிவிட்டால் அவர்கள் நம்முடன் சேருவதற்கே இடமில்லாமற் போய் விடும்" என்று ராஜா ஸர் கூறியது, நேற்றுத்தான் கூறியதுபோல் இன்னும் என் காதில் ஒலித்தவண்ணம் இருக்கிறது.

ராஜாஜி அவர்கள் அடிக்கடி எனக்கு இதே விதமான புத்திமதி கூறியதுண்டு. "அதிகமாகத் தாக்கி எழுதக் கூடாது" என்று ராஜாஜி அவர்கள் அஹிம்சை நெறியில் நின்று எனக்கு யோசனை சொன்னார்கள். அதேவிதமான யோசனைக் "காரிய சாதனை"யை முன்னிட்டு ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களும் கூறினார்கள். வெவ்வேறு நோக்குடன் பார்த்து இந்த இரு பெரியவர்களும் ஒரே முடிவுக்கு வந்திருப்பதை நினைக்க நினைக்க எனக்கு வியப்பாயிருந்தது.

நம்முடைய காலத்து இந்திய பிரமுகர்களுக்குள்ளே ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் மிக உன்னதமான ஸ்தானத்துக்கு உரியவர்கள் என்பதில் சந்தேகமில்லை. அவர்களுடைய ஆலயத் திருப்பணிகளும், சொந்தப் பொறுப்பில் நிலைபெறுத்திய ஸ்தாபித்த அண்ணாமலை சர்வகலாசாலையும் மற்றக் கல்வித் துறையில் அவர்கள் ஆற்றிய தொண்டுகளும், கடைசியாக அவர்கள் தலைமை வகித்துச் சிறப்புடன் நடத்திய தமிழிசை இயக்கமும் தமிழ் நாட்டின் தற்கால சரித்திரத்தில் செட்டி நாட்டுஅரசருக்கு அழியாத உயர்ந்த ஸ்தானத்தை அளித்திருக்கின்றன.

ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் "காலமானார்" என்று நம்புவது இன்னமும் எனக்குக் கஷ்டமாகத்தான் இருக்கிறது. ஒரு விதத்தில் அந்தச் செய்தி உண்மையில்லைதான். ராஜா ஸர் அவர்கள் தம்முடைய அருமைப் புதல்வர்கள் மூன்று பேரிடத்தும் இன்றைக்கும் உயிர் வாழ்கிறார்கள் என்றே சொல்லத் தோன்றுகிறது. ராஜா ஸர் முத்தையா செட்டியார், ஸ்ரீ ராமநாதன் செட்டியார், ஸ்ரீ சிதம்பரம் செட்டியார் ஆகிய மூவரும் ராஜா ஸர் அவர்களுடைய திரண்ட செல்வத்தை மட்டுமல்லாமல் அவரிடமிருந்த அரும் பெரும் குணங்களையும் ஆற்றல்களையும் கூடப் பங்கிட்டுக் கொண்டிருக்கிறார்கள். அவர் நடத்தி வந்த திருப்பணிகளை இவர்களும் தொடர்ந்து நடத்தி வருகிறார்கள்.

எனவே இந்த மூன்று புதல்வர்களின் உருவத்தில் ராஜா ஸர் அவர்கள் இன்னமும் உயிர் வாழ்ந்து வருகிறார்கள் என்று ஏன் சொல்லக் கூடாது!



டி. எஸ். கச்சாபகேச முதலியார்
(கௌரவ காரியதரிசி, தமிழிசைச் சங்கம்.)



சுதேசி
தயாரிப்பு
ஸ்வீடனிலிருந்து தருவிக்
கப்பட்ட நூதன நவீன
மெஷினரிகளுடன் இந்த
பாக்டரி தேர்ந்த அயல்
நாட்டினரின் மேற்பார்வை
யில் நடத்தப் படுகின்றது.
TOWER BRAND
1¼ A 9
SCREWS
டவர்
பிராண்டு
ஸ்குரு
ஆணிகள்
தயாரிப்பாளர்கள்:
சதர்ன் இண்டஸ்ட்ரியல்
கார்ப்பொரேஷன்
தொழிற்சாலை:
புழல் கிராமம்
புழலேரி
ஆபீஸ்:
2, அரண்மனைக்காரத் தெரு
சென்னை-1

# தமிழிசைக் கோயில்

**பி. எஸ். குமாரஸ்வாமி ராஜா**

★★★ பத்தாம் ஆண்டு இசை விழாவை 1953, ஏப்ரல் 15ம் தேதியன்று தமிழிசைச் சங்கம் கொண்டாடப் போவதைக் குறித்து நான் மகிழ்ச்சி யடைகிறேன். பெருமைக்குரிய இந்தக் கழகத்தின் தலைவர்களுடைய விருப்பங்களும் கருத்துகளும் நிறைவேறியதின் வெற்றிச் சின்னமாகும் இப்பத்தாம் ஆண்டு விழா. இத் தமிழிசைச் சங்கம் இதுவரையில் அடைந்துள்ள வெற்றிகளை இந்த விழா குறிப்பதுடன் வருங் காலத்தில் இன்னும் சிறப்பான வெற்றிகளை அடைவதற்கு உறுதி கொண்டிருப்பதையும் காட்டுகிறது.

இசை விழாவை இதுபோது கொண்டாடுவது மிகவும் பொருத்தமானது. ஒவ்வோராண்டிலும் டிசம்பர் மாதத்தில் இவ்விழாவைக் கொண்டாடுவது வழக்கம். அதற்கு மாறாக "விஜய" என்னும் திருநாமங் கொண்ட இப்புத்தாண்டின் பிறப்பன்று தமிழிசை விழாவைக் கொண்டாடுவது மிகப் பொருத்த முள்ளதாகும். இந்த ஆண்டின் பெயருக்கு ஏற்ப, தமிழர்களின் எண்ணங்களும் முயற்சிகளும் இவ் வாண்டில் வெற்றி பெறும்.

தனக்கென்று புதிதாக அமைத்துக் கொண்ட "அண்ணாமலை மன்ற"த்தில் தமிழிசை விழா நடப்பதால் மேலும் தனிச் சிறப்பை அடைந்துள்ளது. இம்மண்டபம் கம்பீரத் தோற்றத்துடன் நம் நாட்டினற்குரிய கலைப் பண்பையும், குறிப்பாகக் கலைகளுக் கெல்லாம் சிறந்ததான தமிழிசையின் கோயிலாகத் திகழ்ந்து வரும்.

அழகு நிறைந்த சென்னைமா நகரம் இந்த மன்றத்தால் மேலும் அழகு பெற்றது. இவ்வழகிய மண்டபத்துக்கு அண்ணாமலை செட்டியார் அவர்களின் ஞாபகார்த்தமாக "அண்ணாமலை மன்றம்" என்ற பெயர் சூட்டப்பட்டுள்ளது மிகப் பொருத்தமானதாகும். அப்பெரியார் தமிழிசைச் சங்கத்தின் ஸ்தாபகரும் தந்தையுமாகின்ற புகழைப் பெற்றவர் என்பதை யாரும் மறக்க முடியாது.

விஜய என்ற இவ்வாண்டின் பெயருக்கு ஏற்ப தமிழிசைச் சங்கம் எடுக்கும் காரியங்களி லெல்லாம் வெற்றி பெறும் என்பது திண்ணம்.

ஜூபிடர்-
லாவண்யா



ஏப்ரல்

17உ முதல்

சென்னை

ஸ்ரீகிருஷ்ணா

சித்ரா

நூர்ஜஹான்

(சைதாப்பேட்டை)

மற்றும்

தென்னாடெங்கும் ஆரம்பம்

டைரக்ஷன்:

K. ராம்நாத்

ஸ்டுடியோ:

நெப்ட்யூன்

# மனிதன்

# பாரிலே இணையற்ற இலக்கியம்

சர் சி. பி. ராமசாமி ஐயர்

வெளி நாடுகளில் மாத்திரமல்ல, இந்தியாவில் கூடப் பண்டைய காலத்தில் தமிழ் நாடு அடைந்திருந்த மகோன்னதமான நிலையைப் பற்றிப் பலருக்கும் ஒன்றும் தெரியாது. அரசாங்க நிர்வாகத்திலும் பொது மராமத்து வேலைகளிலும் தமிழ் நாடு எவ்வளவு சிறந்து விளங்கியது என்பதும் பலருக்குத் தெரியாது. பக்தி மார்க்கத்தைப் பற்றியும் லௌகிக மார்க்கத்தைப் பற்றியும் தமிழ் இலக்கியத்தில் விலைமதிக்க முடியாத பொக்கிஷங்கள் இருக்கின்றன. எனினும் அவற்றின் மகத்துவத்தைப் பற்றியும் சிறப்பைப் பற்றியும் எங்கும் அறியாமையே நிலவி வருகிறது.

இத்தகைய அறியாமைக்குக் காரணங்கள் என்ன என்பதைக் கவனிப்போம்:

பண்டைய காலத்தில் வெளி நாடுகளிலிருந்து இந்தியாவுக்கு வந்த யாத்திரீகர்களும் தூதர்களும் இந்தியாவில் அரசியல் முக்கியத்துவம் வாய்ந்த இடங்களுக்கு விஜயம் செய்வதுடன் நின்று விட்டார்கள். அதாவது பஞ்ச நதிகள் பாயும் பாஞ்சாலப் பிரதேசத்துக்கோ கங்கை நதிப் பள்ளத்தாக்கிற்கோ விஜயம் செய்வதுடன் நின்றுவிட்டார்கள்.

ஜோன்ஸ், கோல்ப்ரோக், மாக்ஸ்முல்லர் போன்ற ஐரோப்பிய மேதாவிகள் சம்ஸ்கிருத இலக்கியத்திலேயே தங்கள் முழு கவனத்தையும் செலுத்தினார்கள். டில்லியைச் சுற்றி ஆதிக்கம் செலுத்தி வந்த ஹிந்து, முஸ்லிம் அரசாங்கங்களோவெனில், விந்தியப் பிரதேசத்துக்குத் தெற்கே அதிக கவனம் செலுத்தவில்லை. தமிழ் நாட்டைப் பற்றி அவர்கள் கவனிக்க முற்படவே இல்லை. எப்போதாவது அத்தி பூத்தாற் போல் ஒரு சிலர் மாத்திரம் தமிழ் நாட்டுக்கு வந்து போயினர். எனவே. தமிழ் நாட்டின் சிறப்பை அவர்களால் அறிந்துகொள்ள முடியவில்லை.

பல்லவ, சேர, சோழ, பாண்டியர் ஆட்சியில் மக்கள் எவ்வளவு அற்புதமான திறமை வாய்ந்தவர்களாக இருந்தனர்? சிற்பம், சித்திரம் முதலிய கலைகளிலும், விவசாயத்திலும் மற்றும் பல்வேறு கைத்தொழில்களிலும் அவர்கள் எவ்வளவு நிபுணர்களாக இருந்தனர்? இதெல்லாம் சமீப காலத்தில்தான் நன்கு உணர்ந்து கொள்ளப்பட்டிருக்கிறது.

முதன் முதலாகத் தமிழின் பெருமையை, வெளி நாடுகளிலிருந்து இங்கு வந்த பாதிரிமார்களின் பெருமுயற்சியால்தான் வெளி உலகம் அறிந்துகொள்ள முடிந்தது.

தமிழில் சரித்திர நூல்கள் இராததால், தமிழ் அரசர்களின் சாம்ராஜ்யமும், தமிழ் மக்களின் வர்த்தகமும் எவ்வளவு தூரம் பரந்து விரிந்து இருந்தன என்பதை வெளி நாட்டினர் அறிந்து கொள்ளவில்லை. இலக்கியத்திலும் கலைகளிலும் தமிழர்கள் எவ்வளவு சிறப்புடன் விளங்கினார்கள் என்பதையும் அவர்கள் தெரிந்து கொள்ளவில்லை.

சமீப காலமாகத்தான் சரித்திரத் துறையில் கனகசபைப் பிள்ளை, வையாபுரிப் பிள்ளை, நீலகண்ட சாஸ்திரி போன்றவர்கள் சிரத்தை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

தமிழ் இலக்கியங்களின் புனருத்தாரணத்துக்காகவும், மறைந்து கிடந்த தமிழ் ஏட்டுச் சுவடிகளைக் கண்டு பிடிக்கும் விஷயத்திலும் டாக்டர் உ. வே. சுவாமிநாதய்யர் தமது வாழ்க்கையை அர்ப்பணம் செய்திராவிடில், பல அற்புதமான தமிழ் இலக்கியங்களை நாம் இழந்திருப்போம்; மேற்படி துறையில் மீனாக்ஷி சுந்தரம் பிள்ளை போன்றவர்கள் எவ்வளவு தொண்டு செய்தார்கள் என்பதையும் நாம் அறிந்து கொண்டிருக்க முடியாது.

* * *

சங்க கால இலக்கியத்தைப் பற்றி இன்று கூட வெகு சொற்ப விஷயங்களே தெரிந்திருக்கின்றன. இது உலகத்துக்கே ஒரு நஷ்டம் என்று சொல்ல வேண்டும்.

ஔவை, நாயன்மார்கள், ஆழ்வார்கள், திருவள்ளுவர் போன்றவர்கள் வாழ்க்கைத் தத்துவம், ஞானம், பக்தி போன்ற தமிழ் இலக்கியத்தின் பல்வேறு அம்சங்களுக்கும் இலக்கணங்களாகத் திகழ்கிறார்கள்.

ஞான சம்பந்தர், அப்பர், சுந்தர மூர்த்தி, மாணிக்க வாசகர் முதலியோரின் பக்தி மார்க்க இலக்கியங்களும், தேவாரம், திருவாசகம் பெரிய புராணம், கம்ப ராமாயணம் முதலியவையும் தமிழ் இலக்கியத்தின் தனிச் சிறப்புக்கு எடுத்துக் காட்டாக விளங்குகின்றன.

தமிழ் இலக்கியம் தோன்றியதிலிருந்து கோபால கிருஷ்ண பாரதி, சுப்பிரமணிய பாரதி காலம் வரையில் பாடல்கள் ரூபமான தமிழ் இலக்கியத்துக்கு இந்த உலகிலேயே உவமை காண்பது அரிது.

இன்று தமிழ் இலக்கியத்தின் புனருத்தாரணத்துக்குத் தமிழ் இசைச் சங்கம் சின்னமாக விளங்கி வருகிறது.

தமிழ் இலக்கிய வளர்ச்சிக்காக அண்ணாமலை சர்வகலாசாலையும், அதை ஸ்தாபித்தவரும், அவருக்குப் பிறகு அதன் பொறுப்பாளர்களும் செய்துள்ள அரிய தொண்டு மிகவும் பாராட்டத் தக்கதாகும். அவர்களுடைய தொண்டுக்கு டாக்டர் சாமிநாத ஐயர், தேசிக விநாயகம் பிள்ளை, ராகவ ஐயங்கார் போன்றவர்களின் ஆராய்ச்சி பெருதவியாக இருந்து வந்திருக்கிறது.

வர்ண, வகுப்பு வேற்றுமை எதுவுமின்றி, பாரத நாட்டின் பண்பாடு உயர்வதற்கு உதவி புரிவதே தமிழ் பாஷையின். தமிழ் இலக்கியத்தின் இலட்சியம் என்பதைத் தமிழ் இசை இயக்கத்தின் சரித்திரம் இன்று நமக்கு நிரூபித்திருக்கிறது.

# கதகளி நடனக்காரர்

கொட்டாரக்கரை அரசருக்கு பாரதநாடு மிகவும் கடமைப்பட்டிருக்கிறது. அவர்தான் நானூறு வருடங்களுக்கு முன்பாக கேரளத்தின் கிராமிய நடனங்களையெல்லாம் தொகுத்து சீர்படுத்தி இன்று நாம் கதகளி நடனம் என்று அறிந்துள்ள கலையழகு செறிந்த நடனமுறையை உருவாக்கினார் என்று சரித்திரம் கூறுகிறது. இயற்கையாக அமைந்த பின்னணிக்காட்சியையும், ஒரே ஒரு பெரிய நாவரா எண்ணெய் விளக்கின் ஒளியையும் உதவியாகக்கொண்டு இரவு முழுவதிலும் இந்த நடனக்காரர்கள் நமது புராண பொக்கிஷங்களிலுள்ள கதைகளைத் தமது முகபாவனைகளாலும் அங்க அசைவுகளினாலும் விளக்கிக்கூறுகின்றனர். அவர்களது அபிநயம் தனிப்பட்டமுறையிலிருப்பினும் கம்பீரமாயும் அர்த்தபுஷ்டியுடனும் விளங்குகின்றது. அவர்களது அலங்காரமும் வேஷமும் ஆடம்பரமானவை. நடிப்புத்திறன் அற்புதமானது. கதகளி நடனக்கழகத்தில் அவர்கள் நீண்டகாலம் கடுமையான பயிற்சி பெறுவதையும், மனம் விரும்பியவரையில் உடம்பு வளைந்துகொடுக்கக்கூடிய பால்ய வயதில், அந்தந்தக் கதைகளின் நிகழ்ச்சிகளை அப்படியே தத்ரூபமாக மனதில் பதிந்துகொள்ளக்கூடிய அளவில் அவர்கள் பயிற்சி துவங்குவதையும் கவனிக்கும்போது இதில் அதிசயம் ஏதுமில்லை. இவ்விதம் பயிற்சியின் காரணமாக கதகளி நடனக்காரர்களின் நடனச்சிறப்பு இந்தியாவுக்கு வெளியேயுள்ள நாடுகளிலும் பிரசித்தி பெற்று உன்னதப்புகழுடன் விளங்குவதில் அதிசயம் என்ன!



நாங்கள் இந்தியாவின் மூலை முடுக்குகளிலுள்ள அநேகம் சமூகங்களோடு உறவாடிக்கொண்டிருக்கிறோம். அவர்கள் சகலரை நம்பி இருக்கிறோம். நாங்களும் அவர்களுக்கு பணி செய்வதில் பெருமை அடைகிறோம்.

**பர்மா-ஷெல்... பாரத நாட்டின் வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கிறது**




## மூன்றாம் பகுதி

சேகரைப் பாராட்டி டைரக்டர் சத்திய சங்கர் கூறிய மொழிகள், சுகுணாவுக்கு மகிழ்ச்சி யளிப்பதற்குப் பதில், அருவருப்பைத்தான் அளித்தது.

“இந்த மாதிரி அவனைப் புகழ்ந்து, தட்டிக் கொடுத்துப் பேசுகிறீர்களே தவிர, சினிமாவில் சட்புட்டுனு ‘சான்ஸ்’ கொடுத்து, உருப்படியாக ஒரு காரியம் பண்ணுவோம் என்பதில்லை. இந்த வீட்டில் தன்னந் தனியாக எத்தனை நாள் தவங்கிடப்பது? குழந்தை புகழும் கீர்த்தியும் அடைய வழி செய்யப் போவதில்லை என்று ‘பளிச்’ சென்று சொல்லி விட்டாலாவது, நான் வந்த வழியைப் பார்த்துக் கொண்டு ஊருக்குத் திரும்பிப் போவேன்” என்று சொன்னாள் சுகுணா.

சங்கர், எவ்வளவு மகிழ்ச்சியில் இருந்தார். அவ்வளவும் கணத்தில் மாயமாய் மறைந்து விட்டதே! சந்திரமண்டலம் வரை அலைகள் வீசி ஆஹ்லாதிக்கும் பெரிய கடல் திடீர் என்று வறண்டு பாலை வனமாகி விட்டாற் போல் அல்லவா ஆகிவிட்டது டைரக்டர் சத்திய சங்கரின் உள்ளம். அன்பு கொண்ட பெண் ஒருத்தி ஒத்து உணரவில்லை யென்றால் இப்படித்தான் ஆகுமோ?

அவள் பேசி நிறுத்தியவுடன், சங்கர் இரண்டு நிமிஷ நேரம் ஏதோ யோசித்தார். பிறகு “சுகுணா!......” என்று வேதனை நிரம்பிய குரலில் ஏதோ சொல்ல ஆரம்பித்தார்.

அதற்குள், “அம்மா போஸ்ட்” என்ற குரல் வந்தது. சங்கர் தாம் சொல்ல வந்ததை நிறுத்தி விட்டு, வாசலுக்கு ஓடினார்.

தபால்காரர் அவரைப் பார்த்ததும், “நீங்க தானா டைரக்டர் சத்திய சங்கர்!” என்று ஒரு கேள்வி கேட்டார். ‘ஆமாம்’ என்று பதில் கூறினார் சத்தியசங்கர். அடுத்த கணம் விழித்துக் கொண்டார். ‘என் பெயருக்கு, இந்த வீட்டுக்குக் கடிதம் வரக் காரணம் என்ன? என் இருப்பிடம் இது வல்லவே!’ என்று நினைத்துக் கொண்டே தபால்காரர் கொடுத்து விட்டுச் சென்ற ‘புக்போஸ்டி’ன் மேலிருந்த விலாசத்தைப் பார்த்தார். ‘சுகுணாபாய்’ என்று எழுதியிருந்தது. அவர் மனசுக்குத் தைரியம் ஏற்பட்டது. ‘நம்மை எங்கேயாகிலும் பார்த்திருப்பார். மறுபடியும் இங்கே பார்த்தவுடன், நிஜமாகவே நான்தானா என்று சந்தேகம் ஏற்பட்டிருக்கும். அதைத் தீர்த்துக் கொள்ள என்னைக் கேட்டிருக்கிறார் இந்தத் தபால்காரர்’ என்று நினைத்துக் கொண்டே அந்த ‘புக்போஸ்’டைப் பிரித்தார். அது ஒரு “மஞ்சள் பத்திரிகை” என்பதைக் கண்டார். தன்னையும் சுகுணாவையும் சம்பந்தப்படுத்தி அபாண்டமான பொய்கள் திரித்து எழுதப்பட்டிருந்தன. அதைப் பார்த்தவுடன், தபால்காரர் தன்னைக் கேட்டதின் பொருள் விளங்கி விட்டது. பல்லைக் கடித்துக் கொண்டே, அதைச் சுக்கு நூறாகக் கிழித்தார். கிழித்த துணுக்குகளை அங்கே எங்கேயும் கீழே போட மனமில்லாமல் தம் “கோட்டு”ப் பையில் போட்டுக் கொண்டார்.

அதற்குள் “எனக்கு வந்த தபால் எங்கே?” என்று சுகுணா கேட்டாள்.

“உனக்கு ஒன்றும் இல்லை. இங்கு யாராகிலும் ‘மீனாபாய் என்றிருக்கிறார்களா?’ என்று விசாரிக்கத் தபால்காரர் குரல் கொடுத்திருக்கிறார். இந்தத் தெருப் பெயர் போட்டிருக்கிறதாம், வீட்டு இலக்கம் போட வில்லையாம். ...அதிருக்கட்டும், சுகுணா! மாதர் மறுமணத்தைப் பற்றி உன் அபிப்பிராயமென்ன?” என்று கேட்டார் சத்தியசங்கர்.

“எல்லா விஷயங்களையும் பற்றி என் அபிப்பிராயம் தெரிந்து கொண்டு விட்டீர்கள்! இது ஒன்றுதான் பாக்கி... சரி நீங்கள் போய் வாருங்கள்! எனக்கு அடுப்படியில் வேலையிருக்கிறது. நான் வருகிறேன்” என்றாள்.

சத்திய சங்கர், சினிமாவில் கதாநாயகன் சிந்தாவசத்தனாக இருக்கும்போது எப்படி நடக்க வேண்டும் என்று கற்றுத் தருவானோ, அந்த நடையில் நடந்து போனார்.

★

அந்தப் பங்களாவிலிருந்து, கம கம வென்று சாம்பிராணியின் நறு மணமும், ஊதுவத்திகளின் இன் மணமும் கலந்து வந்தால் சுகுணா, தேவிக்குப் பூஜை செய்கிறாள் என்பதை யாரும் ஊகிக்கலாம். பூஜை

யறை அவ்வளவு துல்யமாகவும், மணங் கமழ்ந்தும் விளங்கும்.

அன்று கருணா கண்களில் நீர் மல்க, கூறினாள்: "தேவி, இது என்ன சோதனை! சிறு வயது முதல் துடுக்காகப் பேசிப்பேசிக் கடையில் இவரிடமும் துடுக்காகப் பேச வைத்து என்னை இப்படி வதைக்கிறாயே! அவரிடம் உண்மையைச் சொல்ல வேண்டும் என்று பார்க்கிறேன். தொண்டை வரை வார்த்தை வருகிறது. பிறகு வெளியே வர மறுக்கின்றதே! நான் என்ன செய்வேன்? எத்தனை நாள் இந்தக் கஷ்டம்? நான் உண்மையைச் சொல்வதினால், என்னைப் பற்றி அவர் தவறாக நினைத்துக் கொள்வாரோ? என்னை இனி முகாலோபனமே செய்ய மாட்டேன் என்று கூறிவிடுவாரோ? எனக்குப் பயமாக இருக்கிறதே! நான் என்ன செய்வது?

ஊரில் அக்கா, என்னுடைய இந் நிலைமையைக் கண்டால் என்ன நினைப்பாள்! குழந்தை சேகர் வேறு என்னுடைய இவ் வாழ்க்கைச் சுழலில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறான். குழந்தை சேகர் தான் எத்தகைய நிலையிலிருக்கிறான் என்பதை உணரவில்லை, பாவம், அவன் குழந்தை!

இப்பொழுது குழந்தை சேகரைப் பிரித்து விட முயன்றால், அது பெரிய துயரத்தைச் சங்கருக்கு விளைவிப்பதாக இருக்கும். அவர் சேகரின்மேல் எவ்வளவு அன்பு வைத்திருக்கிறார். அவனை ஒரு நாள் பார்க்காமல் இருந்தால், அவருக்கு இரவு தூக்கம் வருவதில்லையாம். அவன் மேல் தன் உயிரையே அல்லவா வைத்திருக்கிறார்!

உண்மையில் பார்க்கப்போனால் குழந்தை சேகருக்கும், அவருக்கும் என்ன சம்பந்தம்? அவருக்கும் எனக்கும் என்ன தொடர்பு? எனக்கும் குழந்தைக்கும்தான் என்ன தொடர்பு? — இருப்பினும், என் தவறினாலேயே இப்படியொரு தொடர்பும் சிக்கலும் ஏற்பட்டுத் தவிக்கிறோம். ஒருவரை யொருவர் விடுவித்துக் கொள்ளலாம் என்றால் முடியவில்லையே! தேவி! கருணை பாலிக்க மாட்டாயா?

தேவி, நான் அபசாரம் செய்து விட்டேன்! ஏழை, என்னை மன்னித்து, அருள்புரிவாய்! இப்படித் தன்னந் தனியாக ஒரு பெண் ஏதோ ஒரு குழந்தையுடன் குடியிருப்பது, நன்றாக இருக்கிறதா? உலகோர் பார்த்தால் என்ன நினைப்பார்கள்? பெண் பிள்ளைகளுக்குத் துணிச்சல் இருக்கலாம். ஆனால் என்னைப் போல் அசட்டுத் துணிச்சல் எதற்குப் பயன்? தேவி! என்னைக் காப்பாற்று! என்னை இச் சிக்கலி லிருந்து விடுவித்துக் கருணைபுரி! அம்பிகே! தாயே! ராஜராஜேஸ்வரி!......" என்று வாயார அவள் முறையிட்டுக் கொண்டிருந்தாள். அப்பொழுது 'வீல்' என்று காதைக் துளைக்கும் குரல் கேட்டது.

அப்படியே கூடத்துக்கு ஓடி வந்தாள். குழந்தை சேகர் மாடிப் படிகளின் வழியாக உருண்டு வந்து கொண்டிருந்தான்.

★

ஸ்டுடியோவில் 'டிரிங் டிரிங்' என்று டைரக்டர் சத்திய சங்கர் அறையில் டெலிபோன் மணிச் சத்தம் கேட்டது. சங்கர் ரிஸீவரை எடுத்து, 'ஹலோ' என்றார்.

அவர் காதில், "கருணா பேசுகிறேன். இங்கே சேகர் மாடிப்படியிலிருந்து உருண்டு கீழே விழுந்து விட்டான். மூர்ச்சையாகிக் கிடக்கிறான். கைகால் ஓடவில்லை. எனக்கு என்ன செய்வது என்று புரியவில்லை. உடனே புறப்பட்டு வாருங்கள் ..." என்று விழுந்தன.

"இதோ வருகிறேன்" என்று பதில் சொல்லி விட்டு, 'டக்' என்று ரிஸீவரைக் கீழே வைத்தார்.

வெளியில் வந்து காரை எடுத்ததுதான் தெரியும். அடுத்த பத்து நிமிஷத்தில் சங்கர் ஒரு டாக்டருடன் கருணா வீட்டு வாசலில் வந்திறங்கினார்.

சங்கர் ஒரு வார்த்தை பேச வில்லை. டாக்டர் தோல் பையை எடுத்துக் கொண்டு சங்கரைப் பின் தொடர்ந்தார். நேரே படுக்கை அறைக்குச் சென்றார்கள். குழந்தை சேகர், படுக்கையில் புஸ்தகம் போல் படுத்திருந்



தான். சுகுணா, கண்களில் கண்ணீர் பெருக்கிக் கொண்டு பக்கத்தில் உட்கார்ந்திருந்தாள். சங்கரைப் பார்த்ததும், அவளுடைய துக்கம் இன்னும் அதிகமாயிற்று. சங்கருக்கும் துக்கம் நெஞ்சை அடைத்தது. உதட்டைக் கடித்துக் கொண்டு, பீறிக் கொண்டு வந்த துக்கத்தை அடக்கிக் கொண்டார்.

டாக்டர் ஏதோ சிகிச்சைகள் செய்தார். அரை மணி நேரங்கழித்து, சேகருக்குச் சற்று பிரக்ஞை வந்தது. கண்களைத் திறக்கவில்லை. முனக ஆரம்பித்தான்.

டாக்டர், "சங்கர், இனி கவலையில்லை. குழந்தை பிழைத்து விடுவான். ஆனால் மூன்று நான்கு நாட்கள் கடும் சுரமும் பிதற்றலும் இருக்கும். கவலைப்படாதீர்கள்! நான் நர்ஸிங் ஹோமிற்குப் போய், ஒரு நர்ஸை அனுப்புகிறேன். ராத்திரி யெல்லாம், பையனுக்கு நெற்றியில் ஐஸ் வைத்துக் கட்ட வேண்டியிருக்கும்; அடிக்கடி ராத்திரி எழுந்திருந்து மருந்தும், ஆகாரமும் கொடுக்க வேண்டியிருக்கும். அதனால் ஒரு நர்ஸ் இங்கேயிருப்பதே நலம்" என்று சொன்னார்.

"அப்படியே செய்யுங்கள். டாக்டர்" என்றார் டைரக்டர் சத்தியசங்கர்.

ஒரு வாரம் சென்றது. நெற்றிக் காயங்கள் குணமாகி வந்து கொண்டிருந்தன. இந்த ஒரு வாரமும், டைரக்டர் சங்கர் சுகுணாவின் பங்களாவுக்கு இரண்டு வேளை தவறாமல் வந்து சேகரைக் கவனித்துக் கொண்டார். சேகரின் காரணமாக இருவரும் மனத்தால் நெருங்கி வரலாயினர். சுகுணா தன் பழைய கடுகடுப்பைக் குறைத்துக் கொண்டிருந்தாள்.

அன்று பௌர்ணமி. வட்ட வடிவமான சந்திரன் வான வீதியில் உலா புறப்பட்டுவிட்டான். உலகை யாவும் பொன்மயமாக மூலாம் பூசத் தொடங்கி விட்டான். குழந்தைகள் நிலாப் பாட்டுப் பாடி கும்மாளம் அடித்துக் கொண்டிருந்தனர். காதல் இளம் தம்பதிகள், நிலவையும் பின்னர் ஒருவர் முகத்தை மற்றொருவர் பார்த்துக் கொண்டும் பொருள் பொதிந்த புன்னகை புரிந்தனர். கவிதைச் சுவை பெற்ற சதிபதிகள் கவிதா லோகத்தில் சஞ்சரிக்கத் தலைப்பட்டனர்.

ஆனால் அந்த வீட்டு மாடியில் இருவர் உட்கார்ந்திருந்தனர். ஆம், காதலர்கள்தான். ஆனால் அவர்கள் காதலை, ஒருவர் மேல் ஒருவர் கொண்டுள்ள கட்டுக் கடங்காக் காதலை ஏதோ ஒரு அணை தடுத்து வருகிறது. வெளியில் சொல்லிக் கொள்ள முடியவில்லை.

'அப்படிப்பட்ட காதலர்கள் யார்?' என்கிறீர்களா? அவர்கள்தான், டைரக்டர் சத்திய சங்கரும் சுகுணாவும்.

எத்தனை நாழிகை தாங்கள் செய்த தவறை நினைந்து மன முருகிக்கொண்டு உட்கார்ந்திருப்பார்கள்? ஆகவே சுகுணா ஆரம்பித்தாள்:

"பாவம், என்னால் உங்களுக்கு எவ்வளவு கஷ்டம்! முன்பின் தெரியாத எனக்காக வேண்டி, குழந்தை சேகருக்காக வேண்டி எத்தனை இன்னல்களுக்கு உள்ளானீர்கள்! நினைக்க நினைக்க வியப்பாக இருக்கிறது! எப்படித்தான் என் நன்றிக் கடனைத் தீர்க்கப் போகிறேனோ இந்த ஜன்மத்தில்..." என்றாள்.

"சுகுணா! இதெல்லாம் என்ன வார்த்தை? நீ வேண்டுமானாலும், உனக்கும் எனக்கும் என்ன சம்பந்தம் என்று நினைக்கலாம். ஆனால் எனக்கு என்ன தோன்றுகிறது தெரியுமா! பத்து வருஷங்களுக்கு முன் முதல் முதல் உன்னை நவராத்திரியின் போது சந்தித்த அன்றே, உனக்கும் எனக்கும் பூர்வ ஜன்மத்திலிருந்தே தொடர்பு இருப்பதாக நினைத்தேன்! எனக்காகவே நீ ஏற்பட்டவள் என்று நினைத்தேன்.

"அப்புறம் உன்னை ஸ்டுடியோவில் பார்த்த போது நீண்ட நாள் பிரிந்திருந்து சந்திப்பதாகத் தோன்றியதே தவிர வேறு விதமாகப் படவில்லை. ஆனால், நீயே உன் வாயை விட்டு, நான் வேறொருவனுக்கு உரிமையாக்கப்பட்டு, அவல நிலை யடைந்திருப்பவள் என்று சொல்லக் கேட்ட பிறகுதான் ஓரளவு நம்ப முடிந்தது. ஆம், என் மனசு பரிபூரணமாக இந்த உண்மையை ஏற்க மறுக்கிறது! இன்னும் என் உள் மனசு, நீ என்னுடையவள் என்னுடையவள் என்று ஓயாமல் கூறிக்கொண்டேயிருக்கிறது. அதனால்தான் அன்று ரொம்ப ரொம்ப யோசனை செய்து, நீ தவறாக எடுத்துக் கொள்ளாமல் இருக்க வேண்டுமே என்று சர்வ ஜாக்கிரதையுடன் விதவா விவாகத்தைப் பற்றிப் பிரஸ்தாபித்தேன்..."

இந்த இடத்தில் சுகுணா விஷயம் நேர் முகமாகத் தன்னிடமே வருவதை உணர்ந்து, "எனக்காக நீங்கள் இவ்வளவும் செய்யலாம். நான் கண்யமாக வாழும் பொருட்டு, தனி வீடு பார்த்து அமர்த்தி, துணைக்கு வயதுவந்த ஒரு பெண் சமையற்காரியையும் ஏற்பாடு செய்தீர்கள். இவ்வளவும் செய்தது சரிதான். ஆனால் சேகருக்கும் உங்களுக்கும் என்ன சம்பந்தம்? அவனிடம் எவ்வளவு அன்பும்

## நோக்கம் என்ன?

○

தமிழ் நாட்டில் நடக்கும் கச்சேரிகளைக் கேட்கும் தமிழர் உள்ளம் 'இன்று தமிழிசை அரங்கு நடந்தது; நம் உள்ளம் தமிழிசையால் பூரித்தது' என்று உணர வேண்டும். தமிழ் நாட்டில் நடக்கும் பாட்டுக் கச்சேரிகள் தமிழருக்கு இன்ப மளிக்க வேண்டும். இது தான் நமது நோக்கம்.

டாக்டர் ராஜா ஸர்
அண்ணாமலை செட்டியார்

பரிவும் காட்டுகிறீர்கள்? அவன் மாடியிலிருந்து உருண்டு விழுந்ததிலிருந்து,—நீங்கள் எவ்வளவு பணம் செலவு செய்திருக்கிறீர்கள்? அதுகூட எனக்குப் பெரிதாகப் படவில்லை—சௌகரிய மிருந்தது செய்தீர்கள். ஆனால்—இரவும் பகலும் இந்த ஒரு வாரமாகக் கண் விழித்து நீங்கள் பட்ட கவலையும், பட்ட சிரமமும் என்னால் எப்படிப் பாராட்டுவது என்று புரியவில்லை! சேகருக்கும் உங்களுக்கும் இத்தகைய தொடர்பு ஏற்படத்தான் காரண மென்ன என்று யோசித்து யோசித்துப் பார்க்கிறேன். எனக்கு விளங்கவில்லை..." என்று கூறினாள் சுகுணா.

"சுகுணா! நீ தவறாக என்னைப் பற்றி நினைக்க மாட்டாயே?" என்று குரலில் ஆதாரம் தொனிக்கக் கேட்டார்.

அதைக் கேட்டதும் சுகுணாவின் இதயம் இளகி விட்டது. "இல்லை; சொல்லுங்கள்" என்றாள் உற்சாக மூட்டும் குரலில்.

"சேகர்...சேகர்..." என்று பேச ஆரம்பித்தபோது டைரக்டர் சத்தியசங்கரின் குரல் இன்னும் தழதழத்தது.

"உங்கள் மனசிலுள்ளதைச் சொல்லுங்கள், உங்களை நான் தவறாக எண்ண மாட்டேன். சொல்லுங்கள்" என்று ஊக்கினாள்.

சங்கர் "சுகுணா! நிச்சயமாகச் சொல்லுகிறேன்! எப்படி உன்னைப் பார்த்தபோது, நீண்ட நாள் பிரிந்திருந்து விட்டுப் பார்த்ததாகக் கருதினேனோ, அதேபோல்தான் சேகர் விஷயத்திலும் ஏற்பட்டது. என் சொந்தப் புதல்வன் சேகர் என்றே எனக்குத் தோன்றியது! ஆம், சுகுணா! என்னுடைய கல்யாணப் பேச்சு அடிபட்ட சமயத்தில், என் விருப்பப்படி உனக்கும் எனக்கும் கல்யாணம் நடந்திருந்தால் இத்தனை நாளைக்குச் சேகர் போன்ற பையன் நமக்கிருக்க மாட்டானா, சுகுணா? அதனால்தான் என் சொந்த மகன் எமனிடம் சிக்கிக்கொண்டானானால், எப்படிப் போராடி மீட்பேனோ அப்படி மீட்டிருக்கிறேன். இதில் அதிசயப்படுவதற்கு ஒன்றுமில்லை, சுகுணா! சேகர் என் சொந்தப் பிள்ளை. அவ்வளவுதான்..." என்று உணர்ச்சி வசப்பட்டுக் கூறினார் சங்கர்.

சுகுணாவுக்கு இருப்புக் கொள்ளவில்லை. சங்கர் கூறிய ஒவ்வொரு வாசகமும், அவளுக்கு ஏனோ எட்டிக்காயாகக் கசந்தது!

"போதுமே! இதுவும் ஸ்டுடியோவென்று நினைத்து விட்டீர்களா? 'செட்'டில் டைலாக் சொல்லிக் கொடுப்பதாக ஞாபகமா, என்ன? அல்லது ஒரு வாரமாகத் தூங்காததால், இப்பொழுது தூக்கத்தில் பிதற்றுகிறீர்களோ?" என்றாள் சுகுணா.

"சுகுணா! நீ என்னை எப்படி வேண்டுமானாலும் நினைத்துக் கொள். ஏன், பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்குப் 'போன்' செய்து 'இந்த வீட்டில் ஒரு பைத்திய மிருக்கிறது' என்று சொல்லி அப்புறப்படுத்த வேண்டுமானாலும், பார்! ஆனால் என் மனசில் இன்னும் ஒரு விஷயம் இருக்கிறது அதையும் சொல்லி விட்டால்தான் என் மனசு நிம்மதிப்படும். ஆகவே, அதையும் கேட்டுக்கொள் சுகுணா!

"சேகரை—இல்லை, என் மகனைப் பார்க்கும் நிமிஷம் வரைக்கும் குழந்தையை ஹீரோவாக வைத்து ஒரு படம் எடுக்க வேண்டும் என்று நினைத்தேன். ஆனால் சேகரை, என் அருமை மகனைப் பார்க்கத் தொடங்கியதிலிருந்து அந்த எண்ணத்தையே அடியோடு கை விட்டு விட்டேன், சுகுணா!

## என்றும் போற்றுவோம்

இசை யென்பது காதுக்கு மட்டுமல்லாமல் மனத்துக்கும் இனிய உணவை அளிப்பது. கர்நாடக சங்கீதத்தின் மும்மூர்த்திகளாக கருதப்படுகின்ற பெரியோர்கள் பாடிய கீர்த்தனங்களில் அமைந்திருக்கும் நல்லிசையுடன், மனத்தை உருக்கும் உயர்ந்த கருத்துக்களே அவைகளுக்குச் சங்கீத உலகில் சிறப்பை அளித்திருக்கின்றன. எனவே, இசையைக் காதுகளால் கேட்கின்றவர்கள், பாடப்படும் பாடல்களின் கருத்தை உணர்ந்தாலன்றி அவ் விசையை நன்கு அனுபவிக்க முடியாதென்பது மறுக்க முடியாத உண்மை. இதுவே தமிழிசை இயக்கத்தின் அடிப்படையான தத்துவம். இன்னிசைப் பாடல்களைத் தமிழிலேயே கேட்டு அனுபவிக்கத் தமிழர்கள் விரும்புவது இயற்கையே. அத்தகைய செல்வம் நமக்கு ஏராளமாக உண்டு என்பதை எடுத்துக் காட்டுவது தமிழிசை இயக்கம்.

ராஜா சர் அண்ணாமலை செட்டியார் அவர்களால் ஆர்வத்துடன் தொடங்கப்பட்டு அவர்கள் குடும்பத்தினரால் ஊக்கத்துடன் போற்றப்பட்டு வரும் தமிழிசைச் சங்க வேலையின் பலனாக தமிழ் இசை வளர்ந்து வருகிறது. ஒரு சிறந்த கலை மண்டபமும் அமைந்துவிட்டது. சங்கத்தலைவர் டாக்டர் ரா. க. சண்முகம் செட்டியாரின் பேராதரவுக்கு நாடும் மக்களும் கடமைப்பட்டவர்கள், இவர்கள் யாவரையும் நாம் என்றும் போற்றுவோம்.

— எம். பக்தவத்சலம்

"ஏன், தெரியுமா? குழந்தை நடை இனியது, மழலை இனியது. மழலைப் பாட்டு அதைவிட இனியது. இவற்றையெல்லாம் திரைக்குக் கொண்டு வந்து காண்பித்தால் ஜனங்கள் ரஸிப்பார்கள். அந்தக் குழந்தையைப் பெருவாரியான மக்கள் பாராட்டுவார்கள். புகழ்வார்கள். தட்டிக் கொடுப்பார்கள். மாலைகள் போடுவார்கள். மெடல்கள் கொடுப்பார்கள், கோப்பைகள்கொடுப்பார்கள். ஆனால் இந்தப் புகழ்ச்சி அந்தக் குழந்தைக்கு மகிழ்ச்சி யளித்தாலும், பின்னால் அதுவே, அந்தக் குழந்தையின் வளர்ச்சிக்குப் பெரிய இடையூறாக இருக்கும். வயதாக ஆக, குழந்தைப் பருவத்தில் பெற்ற பாராட்டு பிற்கால வாழ்க்கையிலும் பெற முடியவில்லையே என்ற ஏக்கமும் மனச் சோர்வும் ஏற்பட்டு விடும். குழந்தை பெரியவனானால், எதிலும் மனம் பற்றாது. பேயறைந்தாற்போல் வாழ நேரலாம்! ஆகவே, குழந்தையால் தாங்க முடியாத ஒரு மாபெரும் புகழ்ச்சியைத் தேடிக் கொடுத்து, அதன் உள் வளர்ச்சியைக் குன்றச் செய்ய விரும்பவில்லை. அதுவும் என் சொந்த மகனை, இப்படிக் கொல்ல விரும்பவில்லை. ஆகவே, அந்த முயற்சியையே கைவிட்டுவிட்டேன், சுகுணா!" என்று சொல்லி நிறுத்தினார் டைரக்டர் சங்கர்.

இந்தச் சமயத்தில் கீழேயிருந்து நர்ஸ் மேலே வந்து, "அம்மா, சேகர் உங்களைக் கூப்பிடுகிறான்" என்றான். சங்கரும், சுகுணாவும் கீழே இறங்கிச் சென்றார்கள்!

★

பொழுதுவிடிந்து எட்டு மணியாகிறது இன்னும் அந்தச் சிந்தனை அவளை விட்டபாடில்லை!

சேகர், உடம்பெல்லாம் பலத்த காயம்பட்டு, இரவெல்லாம் புழுவாகத் துடித்ததினால், ஒரு வாரமாக சுகுணாவுக்கு இராத் தூக்கமே இல்லை. ஆனால் நேற்று சத்திய சங்கர் தன் மனத்தைத் திறந்து காட்டுகிறேனென்ற பேர்வழி என்று ஏதெல்லாமோ சொல்லிவிட்டுப் போனது, அவள் மனத்தை இன்னும் குழப்பிவிட்டது.

எப்படி, எவ்விதம், யார் உண்மை நிலையை சங்கருக்கு எடுத்துச் சொல்வார்கள்? தான் மௌனம் சாதித்துக் கொண்டிருந்தால் எத்தனை நாள் இந்தப் புளுகு செலவாணியில் இருக்கும்! ஒரு நாள் இல்லாவிட்டால், ஒரு நாள் குட்டு வெளிப்பட்டதானால் சங்கர் தன்னைப் பற்றி என்ன நினைப்பார்—இப்படியெல்லாம் முதல் நாள் இரவு முழுதும் எண்ணி எண்ணி பொழுதைக் கழித்தாள்.

"என்ன செய்வது அம்பிகே! ஏதாகிலும் வழி காட்டேன்!" என்று பிரார்த்தனை செய்து கொண்டிருந்தாள். இந்தச் சமயத்தில் கல் கல் என்று சத்தத்துடன், ஒரு மாட்டு வண்டி வந்து நின்றது.

சுகுணா தன் வீட்டுத் தாழ்வாரத்தில் நின்று கொண்டு பார்த்தாள். வண்டியிலிருந்து வெளியே ஒரு துணி மூட்டை தெரிந்தது. அதற்குப் பின் முப்பத்தைந்து வயது மதிக்கத்தக்க ஒரு மாது இறங்கினாள்!

அவளைப் பார்த்தவுடனே சுகுணாவின் நெஞ்சம் 'திக்' என்றது. "அ...க்...கா!" என்று சுகுணாவின் வாய் கூறியது. பின்னர் திறந்த வாய் மூடவில்லை.

சுகுணாவின் தமக்கை கேட்டைத் திறந்து கொண்டு உள்ளே வர முயன்றபோது, வாசலிலிருந்த நாய்கள் குலைக்கத் தொடங்கின. நாய்களை அடக்கி, தன் தமக்கையை அழைத்து வர வாசலுக்கு ஓடினாள் சுகுணா.

இதற்குள் 'பாம்' 'பாம்' என்று காரின் ஹாரன் சத்தம் கேட்டது.

சுகுணாவுக்கு வயிற்றைக் குமட்டியது. தலை சுற்றியது. 'ஐயோ! இந்தக் கணமே என் உயிர் போய்விடக் கூடாதா?' என்று ஏங்கினாள். ஏனெனில் அது டைரக்டர் சத்திய சங்கருடைய காரின் ஹாரன் சத்தம். அந்தச் சத்தம் கேட்டால் டைரக்டர் சத்திய சங்கர் வருகிறார் என்று அர்த்தம்!

'அக்கா வீட்டுக்குள் நுழைகிற இதே சமயத்திலா, இவரும் வந்து சேரவேண்டும்! ஐயோ! இன்னும் என்ன தொல்லைகள் நேரப் போகிறதோ' என்று நினைத்துக் கொண்டே கேட்டைத் திறந்து விட்டாள். அக்கா உள்ளே நுழைந்தாள். (தொடரும்)

---

வாசனைத் திரவியங்கள் என்றால் "டி. எஸ். ஆர்." என்ற பெயர்தான் நினைவுக்கு வரும். அப்படி ஒவ்வொருவர் உள்ளத்திலும் நிலைத்து நிற்கும்படி டி. எஸ். ஆர். கம்பெனியை நிர்வகித்து வருபவரும்,



கும்பகோணம் பாணாதுறை உயர் நிலைப் பள்ளியின் கரஸ்பான்டெண்டுமான ஸ்ரீ டி. எஸ். ராஜகோபால ஐயங்கார் அவர்களின் திரு உருவப் படத்தை அந்தப் பள்ளியின் புதுக் கட்டிட ஹாலில் சென்னை உயர் நீதி மன்றத்து நீதிபதி கனம் டி. எல். வெங்கட்ராமய்யர் அவர்கள் மார்ச் மாதம் பதினைந்தாம் தேதி திறந்து வைத்தார்கள். இவ்வைபவத்தின் போது ஸ்ரீ ராஜகோபால ஐயங்கார் அவர்களின் இனிய பண்புகளையும் கொடைத் திறனையும் பாராட்டி மேற்படி பள்ளிக்கூட ஆசிரியர்களால் அவருக்கு ஒரு வாழ்த்துரை வழங்கப்பட்டது.

# ஒலி அமைப்பின் சிறப்பு

**பி. கே. சார்லு**

காலஞ்சென்ற ராஜா சர் அண்ணாமலை செட்டியார் அவர்கள் கண்ட கனவு அண்ணாமலை மன்றமாக நனவாகியுள்ளது. அம் மன்றத்து வாயிலின் கண் உள்ள வளைவின் மீது தில்லைப் பெருமான் கூத்து வழங்கும் நிலையில் உள்ளார். தந்தைக் கேற்ற தனயனாகச் சீரும் சிறப்பும் கொண்டு விளங்கும் ராஜா சர் முத்தையா செட்டியார் அவர்கள் பண்பாட்டின் இருப்பிடமான இந் நிலையத்தைக் கட்டி, தந்தை கண்ட பெருங் கனவை நனவாக்கியதன் பெருமைக்குக் காரணமாயினார். சர் ஆர். கே. சண்முகம் செட்டியார் அவர்களின் சிறந்த தலைமையிலும் பாதுகாப்பாளர் குழுவினர், கௌரவச் செயலாளர் ஆகியோரின் சிறந்த ஒத்துழைப்பாலும் இத் தமிழ் இசைச் சங்கம் தமிழ்ப் பாடல்கள், இசை, நாடகம் ஆகியவற்றின் பெருக்கத்துக்கும் வளர்ச்சிக்கும் துணை செய்யும். தென்னாட்டுத் தமிழ்ச் சிற்பக் கலையை ஒட்டி இம் மண்டபத்தை அமைத்த சிற்பிக்கு நம் பாராட்டுகள் உரியன.

அண்ணாமலை மண்டபத்து ஒலி அமைப்பு புதுமையான ஒரு தனிப்பெருஞ் சிறப்பு வாய்ந்தது. மேடையின் இடது பக்கத்திலிருந்து தோன்றும் ஒலி அப்பகுதியில் அமைக்கப்பட்ட ஒலி பெருக்கிகளால் கிரகிக்கப்பட்டு, மண்டபத்து இடது பக்கத்தில் உள்ள ஒலி பரப்பிகளின் மூலமாக வெளியிடப்படுகிறது. அதேபோல் மேடையில் வலது பகுதியில் தோன்றும் ஒலி அப்பகுதியில் உள்ள ஒலிபெருக்கிகளால் கிரகிக்கப்பட்டு மண்டபத்து வலது பக்கத்தில் உள்ள ஒலி பரப்பிகளால் வெளியிடப்படுகிறது. மேடையின் மத்தியினின்று ஒலி தோன்றுமானால் அவ்வொலி இரண்டு ஒலிபெருக்கி அமைப்புகளாலும் சமமாகக் கிரகிக்கப்பட்டுச் சம தொனியுடன் வெளியிடப்படும். இவ்வகையான ஒலி அமைப்பினால் கேட்போரின் கவனத்தைக் கவரவும் அவர்களுடைய ரஸிக்கும் திறமையைப் பெருக்கவும் முடியும்.

பிலிப்ஸ் கம்பெனியாரால் தயாரிக்கப்பெற்ற ஒலிச் சாதனங்களே பூராவும் உபயோகப்படுத்தப் பட்டுள்ளன. பாடுவோரின் தொனிக் குறைகளைத் திருத்தவும், குரல் இனிமையை எடுத்துக் காட்டவும் இச் சாதனங்களால் முடியும். மேடையின் முகப்பு அடி விளக்குகளுடன் மறைந்துள்ள ஒலி பெருக்கிகளும் உட்பகுதியில் தொங்கும் ஒலி பெருக்கிகளும் அமைந்துள்ளன. முகப்பில் உள்ள ஒலிபெருக்கிகள் மேடையில் வரும் ஒலியைமட்டும் கிரகிக்கும் சக்தி பெற்றவை. எதிரொலியை அவை ஏற்கமாட்டா.

ஒலிபெருக்கிகளின் அக்கம் பக்கங்களில் தோன்றும் தேவையற்ற ஒலிகளை அவை கிரகித்தும் பெருக்கியும் வெளியிடாவண்ணம் அவற்றைக் கட்டுப்படுத்த ஒலி பரப்புக் கருவிகளில் சில சாதனங்கள் உள்ளன. சமய சந்தர்ப்பங்களுக்கு ஏற்றவாறு ஒலி அமைப்புக் கருவிகளை மாற்றி அமைக்கவும் எவ்வகையான ஒலியையும் கிரகிக்கவும் வெளியிடவும் நுண்மையான ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. ஒலி அமைப்புத் திட்டம் தோல்வியுற்ற போதும் விவகாரங்களைத் தொடர்ந்து நடத்த வசதிகள் உள்ளன.

மண்டபத்தின் முகப்பில் உள்ள ஒலிபரப்பிகள் உயர்ந்த ஒலி அலைகளையும் தாழ்ந்த ஒலி அலைகளையும் அப்படியே ஒலிபெருக்கி வெளியிடுவதற்கேற்ற அமைப்புகளைப் பெற்றுள்ளன. மண்டபத்தின் உள்ளே உள்ள ஒலி பரப்பிகள் மேடையினின்று தோன்றும் ஒலியைச் சமமாகப் பகிர்ந்து மண்டபத்தின் எல்லாப் பகுதிக்கும் கேட்கும்படி செய்ய வல்லன. நாடகம், நாட்டியம் ஆகிய நிகழ்ச்சிகளுக்குப் பின்னணி இசை வழங்க மேடையின் முன் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

ஒலிக் கட்டுப்பாடு அறை 'ஆடிட்டோரி'யத்தின் பின்னால் அமைந்திருப்பது அண்ணாமலை மண்டபத்து ஒலி அமைப்புச் சிறப்புகளில் ஒன்று. இதனால் ஒலி பரப்பிகளினின்று தோன்றும் ஒலியை நேரடியாகக் கேட்டு ஏற்றவாறு ஒலி அமைப்புக் கருவிகளைத் திருத்தி அமைக்க முடியும்.

ஆடிட்டோரியத்திற்கு ஒலி கொடுக்க மறைமுக விளக்குகளும் மேடைமீது ஒலியைப் பிரகாசமாக்கவும் மந்தமாக்கவும் விசேஷ ஏற்பாடுகளும் செய்யப்பட்டுள்ளன.

பேச்சுக்காகக் கட்டப்பட்ட மண்டபங்கள் இசைக்கு ஏற்றவை அல்ல. அதேபோல இசைக்காகக் கட்டப்பட்டவை பேச்சுக்குத் தகுதியற்றவை. ஆனால் இந்த அண்ணாமலை மண்டபம் பேச்சையும் இசையையும் ஒருங்கே ஒலி பரப்பவல்ல வசதிகளைத் தன்பால் பெற்றுள்ளது. இம்மண்டபத்தில் எவ்விடத்திலிருந்தும் ஒலியைச் செவ்வனே கேட்க இயலும்.

மேல் நாட்டில் ஒவ்வொரு இசை வல்லுனரும் நியூயார்க்கில் உள்ள கார்னெகி மண்டபத்தில் பாட வாய்ப்புப் பெற்றால், புகழின் சிகரத்தையே அடைந்து விட்டதாக எண்ணுவர். அதேபோலக் கீழ்நாட்டுக் கலைஞர் ஒவ்வொருவரும் அண்ணாமலை மண்டபத்தே தாம் கற்ற கலையை வெளியிட வாய்ப்பு அளிக்கப் பெறும் நாளை ஆர்வத்துடன் எதிர் நோக்குவார்கள் என்பதில் ஐயமில்லை.

# அதிசய நாடகம்



ஒரு சினிமாப் படம் நூறு தியேட்டர்களில் ஒரே சமயத்தில் வெளியிடப்பட்டு, அந்தப் படம் ஐம்பது வாரங்கள் ஓடியது என்றாலும், அல்லது ஒரே யடியாக ஓடியே போய் விட்டது என்றாலும் அதில் அதிசயப் படுவதற்கு ஒன்றும் இல்லை!

ஆனால் ஒரு நாடகம், அதுவும் மிகப் பழைய நாடகம், மருந்துக்குக்கூட ஒரு பெண்மணி இல்லாமல், முற்றிலும் ஆண் மணிகளைக் கொண்டே ஐம்பது நாட்களுக்கு மேலாகவே நடக்கிறது என்றால் அது அதிசய நாடகமாய்த்தானே இருக்க வேண்டும்?

அந்த அதிசய நாடகம், நவாப் ராஜமாணிக்கம் கோஷ்டியார், தேனாம்பேட்டை மைதானத்தில், திறந்த வெளித் தியேட்டரில் சுமார் இரண்டு மாதங்களாக வெற்றிகரமாக நடத்தி வரும் "சம்பூர்ண ராமாயணம்" நாடகம்தான்.

ஸ்ரீ வைகுண்டத்தில் ஸ்ரீ தேவி, பூதேவி சமேதராக எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீ மகா விஷ்ணுவைத் தேவர்களெல்லோரும் பிரார்த்தித்து, துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனம் செய்ய வேண்டும் என்று வேண்டிக் கொள்வதிலிருந்து கடைசியில் ராம பட்டாபிஷேகம் வரையில் சாங்கோபாங்கமாக, ஒரு சின்னச் சம்பவம்கூட விட்டுப் போகாமல், சம்பூர்ண ராமாயணமும் காட்டப்படுகிறது.

முன்னெல்லாம் சம்பூர்ண ராமாயண நாடகம் நடிப்பதுண்டு. பத்திரிகைகளில் தொடர் கதைகள் வெளியிடுவதுபோல், பல நாள் தொடர்ச்சியாக நடத்துவார்கள். நாடகம் அதன் சௌகரியம் போல் முடிவடையும். அல்லது முடிவடையாமலும் போகும்!

பிறகு, நாடகம் இன்னும் கொஞ்சம் முன்னேற்றம் அடைந்தது. இரவு ஒன்பது மணிக்குச் சம்பூர்ண ராமாயண நாடகம் நடத்த ஆரம்பித்தால், சூரிய உதயம் ஆகி வெய்யில் சுரீர் என்று உறைக்கும்போது பட்டாபிஷேகம் முடிந்து விடும்.

ஆனால் நவாப் ராஜமாணிக்கம் கோஷ்டியார் நடிக்கும் சம்பூர்ண ராமாயணம் மிக மிகத் துரித காலத்தில் நல்ல 'டெம்போ'வுடன் சென்று, நாலு மணி நேரத்தில் சம்பூர்ணமாகி விடுகிறது. அந்த நாடகத்தை அவ்வளவு விரிவாகவும் விரைவாகவும் வேறு யாராலும் நடத்த முடியாது என்று சொல்லலாம்.

நாடகத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும்போது, "இப்போதுதானே ஸ்ரீ ராம லட்சுமணர்கள் விசுவாமித்திரருடன் காட்டுக்குப் புறப்படுகிறார்கள். இன்னும் எத்தனையோ சம்பவங்கள் இருக்கின்றனவே! எல்லாவற்றையும் இன்று இரவே பார்த்து விட முடியுமா?" என்று ஒரு கணம் என் மனசில் மலைப்பு தோன்றியது. இன்னும் சிறிது நேரம் கழித்து எனக்கு என் நினைவு வந்தபோது "அடே! ஸ்ரீராமன் இதற்குள் பஞ்சவடிக்கு வந்து விட்டாரே! இடையில் நடந்த அவ்வளவு சம்பவங்களையும் காட்சிகளையும் ஒரு மணி நேரத்துக்குள் எப்படிப் பார்த்தோம்?" என்று பிரமிப்புத் தட்டியது.

தாடகை வதம், அகல்யை சாப விமோசனம், சீதா கல்யாணம், ஸ்ரீ ராமன் வனவாசம், சுக்கிரீவ சகாயம், வாலி வதம், — இப்படிக் காட்சிகள் ஒன்றன்பின் ஒன்றாக மோதி யடித்துக்கொண்டு கனவேகமாகப் பறக்கின்றன. ஆனால் இந்த வேகத்தில், ஆதி மகா காவியத்தின் சுவையும் நயமும் சிறிதும் குன்றிப் போக வில்லை.

ராமனும் லக்ஷ்மணனும் சீதையும் நகர் நீங்கு படலம் நடந்து கொண்டிருந்த சமயம் நாடகத்தைப் பார்க்க வந்தவர்கள் கண்களில் நீர் கசிந்தது. ஒரு குழந்தை பலமாக அழுது தன் தாயாரையும் அழைத்துக் கொண்டு சபையை விட்டே போய் விட்டது!

அயோத்தி மா நகரில் மாட மாளிகைகளையும், கூட கோபுரங்களையும், கைகேயியின் அழகிய அந்தப்புரத்தையும், நகரின் நெடுஞ்சாலைகளையும் பார்த்துக் கொண்டிருக்கிறோம். மறுகணம். கண் இமைக்கும் முன்பு மரங்கள் அடர்ந்த வனப் பிரதேசத்துக்குப் போய் விடுகிறோம். அங்கு ஸ்ரீராமன், சீதை,





லக்ஷ்மணன் மூவரும் வேடர் தலைவன் குகனைச் சந்திக்கின்றனர்.

மறு நிமிஷம் கரை புரண்டோடும் கங்கை நதிக் கரைக்குப் போய் விடுகிறோம். குகன், ஸ்ரீ ராமன், சீதை, லக்ஷ்மணன் மூவரையும் ஓடத்தில் ஏற்றிக் கொண்டு கங்கை நதியைக் கடக்கும் கண் கொள்ளாக் காட்சியைக் காண்கிறோம்.

நவாப் ராஜமாணிக்கம் நடத்தும் நாடகங்களைப் பார்த்தவர்களுக்கு, அவர் நாடக மேடையில் எந்தத் தோற்றத்திலும் தோன்றி நடிக்கக் கூடியவர் என்று தெரிந்திருக்கும்.

"ஸ்ரீ ராமதாஸ்" நாடகத்தில், ஹைதராபாத் நவாப்பாகத் தோன்றி அவர் செய்யும் அட்டகாசம், அவர் நடை, உடை, பாவனை எல்லாம் அவர் நடிக்கிறார் என்ற எண்ணத்தையே மறக்கச் செய்துவிடும். "கிருஷ்ண லீலா"வில் கம்ஸனாகத் தோன்றி நாடக மேடையைத் துவம்ஸம் செய்து விடுவார்.

இந்தச் சம்பூர்ண ராமாயண நாடகத்தில் அவர் என்ன பாத்திரம் ஏற்று நடிப்பார் என்று என்னால் முதலில் நிச்சயிக்கக்கூடாமல் இருந்தது. ஒருவேளை பத்துத் தலை ராவணனாகத் தோன்றுவாரோ என்று நினைத்தேன். ஆனால் அவர் இந்த நாடகத்தில் ஆஞ்சனேயராக நடிக்கிறார் என்று அறிந்ததும் எனக்குக் கொஞ்சம் யோசனையாகப் போய் விட்டது.

அனுமானை மேடையில் பார்த்ததும், சுக்ரீவனுடன் வானர மொழியில், 'கர்புர்' 'கஜ்புஜ்' என்று வானர இயல்புடன் மாருதி பேசினதைப் பார்த்ததும், நவாப் ராஜமாணிக்கம் என்னும் பெயருடன் அனுமார் ராஜமாணிக்கம் என்னும் பெயரையும் கூடச் சேர்த்துக் கொள்ளத் தோன்றியது. அவ்வளவு தத்ரூபமாக, நவாப் ராஜமாணிக்கம், மாருதியாகத் தோன்றிப் பேசி, பாடி, நடித்துச் சக்கைப் போடு போடுகிறார்.



பிறகு ராவணன் சபா மண்டபத்தில் மாருதி தோன்றுகிறான். அங்கே, அரக்கர் குல அதிபனுக்கு மேலே, உயர, உயரத்தில் வால்கோட்டை கட்டிக்கொண்டு அட்டகாசமாக அதன் மேல் அமர்ந்து அனுமான் செய்யும் ஆர்ப்பாட்டமும், ராவணனுடன் செய்யும் வீர சம்வாதமும் லங்கா பட்டணத்துக்குத் தீ வைத்தழித்தலும், சாக்ஷாத் ஆஞ்சநேயருக் கர்ப்பணம் செய்யத்தக்கவை.

ராவண வதம் முடிந்ததும், அனுமான் அயோத்திக்குச் சென்று, பரதனைத் தீயில் விழாமல் தடுத்து, "வந்தனன் தசரத நந்தனன் வந்தனன்!" என்ற சுபச் செய்தியைச் சொல்லி ராம பட்டாபிஷேகத்தை முடித்து வைக்கும்வரையில் நம் உணர்ச்சியும் இறக்கை கட்டிக் கொண்டு பறக்கிறது.

நவாப் ராஜமாணிக்கம் கோஷ்டியாரின் அருமையான காட்சி ஜோடனைகளுக்கு ஏற்ற அருமையான திறந்த வெளித் தியேட்டர் அமைந்திருப்பதை எவ்வளவு பாராட்டினாலும் தகும். ரூ. 2-8-0 கொடுத்து முதல் வகுப்பில் அமர்ந்து நாடகம் பார்ப்பவரைப் போலவே, அணா 6 கொடுத்து, 'காலரி'யில் அமர்ந்து பார்ப்பவரும் நாடகத்தை நன்றாய்ப் பார்க்க முடிகிறது. அரசியல், சமூகம், பொருளாதாரம் முதலிய எல்லாத் துறைகளிலும் வகுப்பு வேற்றுமை ஒழிந்து வரும் இந்நாளில் இது வரவேற்க வேண்டிய அம்சமாகும்.

இந்த நாடகத்தில் மிகவும் சிறந்த முறையில் காட்டப்பட்ட காட்சிகளைக் குறிப்பிடுவதானால், ஸ்ரீ ராமன் சுக்கிரீவனுடைய விருப்பப்படி ஏழு மராமரங்களையும் ஒரே பாணத்தில் துளைத்த நிகழ்ச்சியைக் குறிப்பிடவேண்டும். ஸ்ரீராமனுடைய கோதண்டத்திலிருந்து பாணம் விடுபட்டு விர்ரென்று சென்று, அண்டமுகடு அதிர மரங்களையும் அநாயாசமாகத் துளைத்துத் தள்ளுகிறது.

வாலி இறந்த பிறகு, சுக்கிரீவ பட்டாபிஷேகம் நடைபெறுகிறது. நூற்றுக் கணக்கான கிஷ்கிந்தை வாசிகள் அரங்க மேடையில் தோன்றி, வானர சேஷ்டைகளையும் சாகசங்களையும் செய்து அபார நடனம் ஆடுகிறார்கள். அச்சமயம் சபையிலுள்ளவர்களுக்குத் தாற்காலிகமாகத் தலைக்கு ஒரு சாண் வாலாவது வளரக் கூடுமானால், சபையோர் எல்லோருமே அந்த நடனத்தில் கலந்து கொள்வார்கள். அவ்வளவு உற்சாகத்தைச் சபையோர்கள் அப்போது அடைகிறார்கள்.

மக்களிடையே ஆஸ்திக உணர்ச்சியையும், தெய்வபக்தியையும் பரப்புவதையே தம் நாடகங்களின் லட்சியமாகக் கொண்டுள்ள நவாப் ராஜமாணிக்கம் அவர்களின் நாடகங்களை ஆஸ்திக உணர்ச்சி உள்ளவர்கள் அனைவரும் ஆதரிக்க வேண்டும். ஆதரிப்பதற்குத் தக்க பலன்களை நிச்சயம் அடைவார்கள்.

# கிளாக்ஸோ குழந்தை குதூகலக் குழந்தை



குழந்தைகள் ஗ளாக்ஸோவைச் சாப்பிட்டு புஷ்டியாகவும் நன்ருகவும் வளர்கின்றன — நிலையான வளர்ச்சிக்கு அதுதான் அவைகளுக்குத் தேவை. ஗ளாக்ஸோ மிகப் பரிசுத்தமான பால் ஆகாரம் ... உஷ்ணப் பிரதேசங்களில் உபயோகிப்பதன்பொருட்டு பிரத்யேகமாகத் தயாரிக்கப்பெற்றது. ஗ளாக்ஸோ கைபடாதது. கட்டி, ரத்தசோகை முதலிய நோய்களிலிருந்து காப்பாற்றுவதன்பொருட்டு விடமின் 'டி' யும் இரும்பும் இதில் சேர்க்கப்பட்டிருக்கின்றன.



**Glaxo**

**கிளாக்ஸோ பரிபூரண குழந்தை ஆகாரம்**

குழந்தை பிறந்த ஆருவது மாதத்திலிருந்து அதற்கு முதல் கெட்டி—உணவாக பாரெக்ஸைக் கொடுக்க ஆரம்பிக்கலாம். பாலும் சர்க்கரையும் சேர்ந்த பாரெக்ஸ் தித்திப்பாயிருப்பதுடன் லகுவாக ஜீரணமாகிறது. பாரெக்ஸ் இப்பொழுது இந்தியாவில் விற்கப்படுகிறது.

ளாக்ஸோ லேபாரட்டரீஸ் (இந்தியா) லிட்., பம்பாய் • கல்கத்தா • மதராஸ்.




## 13. எதிர்பாராதது!

போர்க்களத்திலிருந்து ராஜா அப்புறப்படுத்தப் பட்டதும், எதிரி சைன்யம் ஆர்ப்பாட்டம் செய்தது. ஆனால் அங்கு சேனையை நடத்தத் தலைவர் யாரும் இல்லாததால் ஒரே குழப்பமாயிருந்தது.

அப்பொழுது மின் வெட்டுப் போல் அந்த இளம் வீரன் குதிரையில் ஏறிக் கையில் வாளுடன் எதிரி சைன்யத்தில் பிரவேசித்துச் சக்கரம் போல் சுழன்றான்; எதிர்த்தவர்களை யெல்லாம் சீவித் தள்ளினான்: ஒரு சில மணி நேரத்துக்குள் எதிரிகள் பயந்து ஓடத் தலைப்பட்டனர். வாலிப வீரன் 'பம் பம்' மென்று வெற்றிச் சங்கம் முழக்கினான். அவனைச் சேர்ந்த மற்ற சேனை வீரர்களெல்லாம் வீர ஆரவாரம் செய்தனர்.

வீர வர்மனின் சைன்யம் அன்று முழுவதும் உற்சாகக் களியாட்டத்தில் மூழ்கியிருந்தது. நாலு நாட்கள் சென்றன.

அந்த வாலிப வீரன் மட்டும் அமைதியுடன் சேனாபதி ராஜாவின் அருகில் அமர்ந்து அவனையே கவனித்துக் கொண்டிருந்தான். அரண்மனை வைத்தியரின் சிகிச்சையினால் ராஜாவின் காயம் ஆறத் தொடங்கி யிருந்தது.

ராஜா கண் விழித்ததும் அந்த வாலிப வீரனை அன்போடு பார்த்தான். "இளம் வீரனே, இந்த யுத்தத்தின் வெற்றி உன்மையில் உன்னுடையது. வெற்றியை நிலைநாட்டி என் உயிரையும் காப்பாற்றினாய். நீ யார்? உன் பெயர் என்ன? நம் சேனைவீரர்களில் உன்னைப் பார்த்ததாகவே எனக்கு நினைவில்லையே! உன் இளம் முகத்தைப் பார்த்தால் இந்தக் கொடிய போர்க் களத்தில் பார்க்கக் கூடிய முகமாயில்லையே! தடாகத்தில் மலர்ந்திருக்கும் தாமரை போலல்லவா இருக்கிறது! நந்தவனத்தில் பூத்து விளங்கும் ரோஜா மலர் போன்ற உன் முகம் நான் முன்பு எப்போதோ பார்த்த முகம்போல் இருக்கிறது. ஏன் நீ ஒரு வார்த்தை கூடப் பேச மாட்டேன் என்கிறாய்?" என்றான் ராஜா.

"சேனாபதி, என்னைத் தெரியவில்லையா உங்களுக்கு!" என்று கேட்டு அந்த வீரன் தலைப்பாகையை எடுத்தான்.

"கௌசல்யா, எப்படி நீ இங்கே வந்தாய்? என் மார்பில் வேல் பாய்ந்தது, நான் கீழே விழுந்தது, அப்புறம் எதிரி சைன்யங்களை நீ விரட்டி யடித்தது, எல்லாமே கனவோ என்று எனக்குப் பிரமையா யிருக்கிறது. கௌசல்யா, நான் இப்போது காண்பதெல்லாம் உண்மை தானே? நான் கதைப் புத்தகம் படிக்கவில்லையே! எல்லாம் ஒரே அதிசயமா யிருக்கிறதே!" என்றான் ராஜா.

"ராஜா, எல்லாம் உண்மைதான். நீங்கள் புஸ்தகம் எதுவும் படிக்கவில்லை. கனவும் காணவில்லை. இனிமேல் நம்மைப்பற்றிய சுவாரஸ்யமான கதையை யாராவது ஒரு புஸ்தகமாக எழுதுவார்கள்!" என்று கூறி அவள் சிரித்தாள்.

"கௌசல்யா, நீ எப்படி இங்கே வந்தாய்? நான் உன்னைச் சற்றும் இங்கே எதிர்பார்க்க வில்லையாதலால் உன்னைக் கண்டு கொள்ள முடியவில்லை. உன் தகப்பனார் உன்னைப் போர்க் களத்துக்குத் துணிந்து அனுப்பச் சம்மதித்தாரா?"

"அப்பா சம்மதிப்பாரா? அவருக்குத் தெரியாமல்தான் வந்தேன். அம்மாவும் நானும் ஒரு வாரத்துக்கு முன்பு என் பாட்டனார் தேசத்துக்கு, அதாவது என் அம்மாவின் அப்பாவிடம் சென்றிருந்தோம். அம்மாவைப் பற்றி வெகு நாட்களாக ஒன்றும் தெரியாமலிருந்து, இப்பொழுது திடீரென்று அம்மாவையும் என்னையும் பார்த்ததில் அவருக்கு உண்டான ஆனந்தம் இவ்வளவு அவ்வளவு அல்ல. ஆனால் எனக்கு என்னவோ அங்கே இருப்பே கொள்ளவில்லை. யுத்த களத்தில் உங்களைச் சந்தித்து நானும் எப்படியாவது யுத்தத்தில் கலந்து கொள்ள வேண்டும் என்று நினைத்தேன். உங்களை நேரில் சந்தித்துக் கேட்டால் நீங்கள் சம்மதிக்கமாட்டீர்கள். அதற்காகத்தான் இரண்டு நாட்களாக உங்கள் கண்ணில் படாமல் சண்டை செய்தேன். நீங்கள் என்னத்துக்காக எனக்கு வாள் போர் சொல்லிக் கொடுத்தீர்கள்? 'இந்த வித்தை தெரிந்திருப்பது நல்லது. சமயத்தில் பயன்படும்!' என்று ஒரு முறை என்னிடம் சொன்னீர்களே! இப்பொழுது நல்ல சமயத்தில் பயன்பட்டது. சேனாபதி, அடியாளை மன்னிக்க வேண்டும். தங்கள் உத்தரவு இல்லாமல் யுத்த களத்தில் பிரவேசித்துப் போரில் கலந்து கொண்ட அவளுக்கு உரிய தண்டனை கொடுங்கள்!" என்றாள் கௌசல்யா மிகவும் பணிவுடன்.

ராஜாவின் கண்களில் நீர் ததும்பியது. "கௌசல்யா, யாருக்கு யார் தண்டனை கொடுப்பது? என் உயிரைக் காப்பாற்றிய உனக்கா தண்டனை? அரசர்க்கரசனாகிய உன் தகப்பனார் கொடுத்ததுதானே இந்தச் சேனாபதிப் பதவி! ராஜகுமாரி, இந்த ஏழை அநாதைக்கு வாழ்வளித்தது நீ!" என்று உணர்ச்சியோடு சொன்னான்.

"ராஜா, இனி நீங்கள்தான் நம் தேசத்துக்கு ராஜா. இந்த அபலைப் பெண்ணுக்கும் நீங்கள்தான் தலைவர். சாம்ராஜ்யத்துக்கு மன்னராகிய நீங்கள் எப்படி ஏழையாக முடியும்? சரி, நான் முதலில் புறப்பட்டு என் பாட்டனார் தேசத்துக்குச் செல்கிறேன். அம்மாவுக்கு மட்டும் நான் இங்கே வந்திருப்பது தெரியும். அம்மாவுடன் புறப்பட்டு நான் நாலைந்து நாளில் நம் தலை நகரம் போய் விடுவேன். உங்களுக்காக அரண்மனை வாசலில் கையில் மாலையுடன் காத்திருப்பேன்!"

"கௌசல்யா, நீ எப்படித் தனியாகப் போவாய்? நீ சொல்லுவது சரி. இப்பொழுது நீ என்னோடு நம் தேசத்துக்கு வருவது சரியல்ல. ஆனால் உனக்குத் துணை வேண்டாமா?"

"ராஜா, என் வீர வாளும் ஆண் வேஷமும் எனக்குத் தக்க துணையாக இருக்கும். நம் சேனை வீரர்களின் கண்களில் படாமல் நான் உடனே புறப்பட வேண்டும்!"

இப்படிச் சொல்லி விட்டுக் கௌசல்யா தன் குதிரையில் ஏறி வாயு வேகமாய்ப் பறந்தாள். ராஜா அவள் கண்ணுக்கு மறைகிற வரையில் நின்று பார்த்துக் கொண்டிருந்தான். அதிக நேரம் அவனால் அவளைப் பார்க்க முடியவில்லை; அவனுடைய கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருகி மறைத்தது.

• • •

வெற்றி முழக்கத்துடன் ராஜா தன் சேனா சமுத்திரத்தைத் திரட்டிக் கொண்டு தன் தேசத்துக்கு வந்து சேர்ந்தான். அரண்மனை வாயிலை நெருங்கும் போதே ராணி மல்லிகாவும், இளைய ராணியும் வீரவர்மனும், மந்திரி, பிரமுகர்கள் புடை சூழப் பட்டத்து யானையுடன் சேனாபதி ராஜாவை எதிர் கொண்டு வரவேற்றனர். கௌசல்யா கையில் ஒரு அழகிய ரோஜா மலர் மாலையுடனும் முல்லைச் சிரிப்புடனும் காத்திருந்தாள். ராஜா வந்து குதிரையை விட்டுக் கீழே இறங்கியதும், வீரவர்மன், "தேவசேனாபதி, நீ இணையற்ற வீரன். உனக்கு இந்த ராஜ்யத்தையும் குமாரியையும் பரிசாக அளிக்கிறேன்!" என்று கூறியதும் கௌசல்யா புளகாங்கிதத்துடன் ராஜாவுக்கு மாலையிட்டாள்.

"மகாராஜா, கடுமையான போரின் இறுதியில் வெற்றியடைந்தேன். ஆனால்



வந்தவன் —உன் கணவரை நீயேவா போட்டோ எடுத்தாய். வாயில் அசோகா பாக்குப் போட்டுக் கொள்ளச் சொல்லி எடுத்திருக்கப் படாதா?

வீட்டுக்காரி:— போட்டுக் கொண்டு தான் எடுக்கப்பட்டது.

வந்தவன் :—யார் போட்டுண்டா?

வீட்டுக்காரி :—நான்தான் போட்டுண்டு எடுத்தேன்.

அந்தச் சமயம் என் உயிருக்கு அபாயமும் நேர்ந்தது. அப்பொழுது கௌசல்யா தான் என்னைக் காப்பாற்றினாள்!'' என்று ராஜா நடந்த வரலாற்றைச் சொன்னான்.

வீரவர்மனும் மகாராணிகளும் இதைக் கேட்டுச் சந்தோஷ மடைந்தனர்.

பிறகு, நகர முழுவதும் தோரணம் கட்டி அலங்காரம் செய்யப்பட்டது. அரண்மனைக் கல்யாண மண்டபத்தில் வானளாவப் பந்தல் போடப் பட்டது. பந்தல் கால்கள் வர்ண விசித்திர மலர்க்கொடிகள் சுற்றி அலங்காரம் செய்யப்பட்டன. மங்கள வாத்தியங்கள் முழங்கின. தேவசேனாபதிக்கும் ராஜகுமாரி கௌசல்யாவுக்கும் விவாகம் சிறப்பாக நடந்தது. நகரத்துப் பிரமுகர்களும், பிரபுக்களும், சாதாரண மக்களும் ஏராளமாகக் கூடியிருந்து மண மக்களை வாழ்த்தினர்.

ராஜாவின் தாய் தந்தையர் ஸ்தானத்தில் உபாத்தியாயர் நித்தியானந்தமும் அவர் மனைவி அம்புஜமும் அமர்ந்திருந்தனர். அந்த ஏழை உபாத்தியாயரையும் அவர் மனைவியையும் இப்பொழுது பார்த்தால் யாருக்கும் அடையாளம் கண்டு கொள்வது சிரமம். விலையுயர்ந்த பீதாம்பரம் புனைந்து நித்தியானந்தம் ராஜா மாதிரி சிம்மாசனத்தில் அமர்ந்திருந்தார். அவர் மனைவியும் உயர்ந்த பட்டுப்புடவை கட்டிக் கொண்டு ராணிமாதிரி உட்கார்ந்திருந்தாள். அவர்கள் இருவருக்கும் அரண்மனையில் ராஜ மரியாதை நடந்தது. ராஜாதி ராஜனான தேவசேனாபதியும் ராணி கௌசல்யாவும், உபாத்தியாயர் நித்தியானந்தத்தையும் அம்புஜத்தையும் கல்யாண மண்டபத்தில் வணங்கியபோது அவர்கள் இருவருக்கும் நடப்பதெல்லாம் கனவோ என்று தோன்றியது. அன்றே தேவசேனாபதி அரசனாக முடி சூட்டப் பட்டான்.

தேவசேனாபதியைப் பெற்றெடுத்த குடியானவத் தம்பதிகள் அப்பொழுதே, அந்தக் காலத்திலேயே, கையில் பணத்தைப் பெற்றுக் கொண்டு ஊரைவிட்டுப் போய் விட்டபடியினால் அவர்கள் கிடைக்கவில்லை. நித்தியானந்தத்துக்கும் அம்புஜத்துக்கும் தேவசேனாபதியின் பெற்றோர் என்னும் பேறு கிடைத்தது. தாம் காட்டாற்று வெள்ளத்தில் அதிர்ஷ்டவசமாகக் கண்டெடுத்த அந்த அதிர்ஷ்டக் குழந்தை இன்று மன்னர் மன்னனாகச் சிம்மாசனத்தில் வீற்று அரசு புரிவதைப் பார்த்து, நித்தியானந்தம் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை.

ராஜா தேவசேனாபதியும் ராணி கௌசல்யாவும், மலரும் மணமும் போல மனமொத்து நீடூழி வாழ்ந்து வந்தார்கள்.

(முற்றும்)

## தமிழும் இசையும்

தாய் பாஷையிடம் அன்பு கொள்வதும், அதைப் போற்றுவதும் மனித இயற்கை. ஒவ்வொரு நாட்டாரும் அவர் அவர்களுடைய தாய் பாஷையைப் போற்றத்தான் செய்வார்கள். ஆனாலும் பழந் தமிழ் நாட்டுப் பெரியார்கள் தமிழைப் போற்றியது போல் வேறு எந்த நாட்டிலும் தாய் பாஷையைப் பாராட்டி யிருக்கக் கூடும் என்று தோன்றவில்லை. "இன் தமிழ்" என்றும், "வண் தமிழ்" என்றும், "தண் தமிழ்" என்றும், "ஞானத் தமிழ்" என்றும், "தெய்வத் தமிழ்" என்றும் எத்தனை எத்தனை விதமான அடைமொழி கொடுக்கலாமோ அவ்வளவையும் கொடுத்து நமது முன்னோர்கள் தமிழைப் பாராட்டி யிருக்கிறார்கள். "பரமசிவன் தந்த தமிழ்" என்றார்கள். "தமிழைக் கேட்டுத் திருமாலின் தோள்கள் பூரித்தன" என்றார்கள்.

இப்படி யெல்லாம் தமிழைப் பாராட்டியதோடு, தமிழ் மொழிக்கும் இசைக் கலைக்கும் உள்ள பொருத்தத்தையும் பலவாறாகத் தமிழ் நாட்டுப் பெரியார்கள் எடுத்துக் காட்டி யிருக்கிறார்கள். இசையானது தமிழோடு சேரும்போது அது இறைவனுக்கே உகந்ததாகிறது என்று தமிழ் நாட்டு முன்னோர்கள் கருதியதாகத் தெரிகிறது.

"தமிழோடு இசை பாடல் மறந்தறியேன்" என்று அப்பர் சுவாமிகள் பாடியதின் கருத்து வேறு என்னவாயிருக்கக் கூடும்.

திருஞான சம்பந்தர்,

"ஏழிசையுந் தழைத்தோங்க
இன்னிசைவண் தமிழ்ப்பதிகம்
எய்தப்பாடினார்"

என்று சேக்கிழார் சொல்லுகிறார். இன்னும் சுந்தரமூர்த்தி சுவாமிகள்,

"நாளும் இன்னிசையால் தமிழ்
பரப்பும் ஞானசம்பந்தனுக்கு
உலகவர்முன் தாளம்ஈந்து......"

என்று பாடியிருக்கிறார்......

ஞான சம்பந்தரின் தமிழோடு சேர்ந்த இசையைக் கேட்டுச் சிவபெருமான் ஆனந்தித்துப் பாட்டுக் கிசையத் தாளம் போடுவதற்காகப் பொன்னாலான தாளங்களைக் கொடுத்தாராம்!



## குடும்பம் முழுவதற்குமே

## உன்னத பானம்!

சிறுவர், நடுத்தர பிராயத்தினர், முதியோர்—குடும்பத்தில் ஒவ்வொருவரும் உணவு அருந்தும்போது அல்லது இடையில் ஓவல்டின் பருகி நன்மை அடைகிறார்கள். ருசி மிகுந்த இந்த பானத்தில், அன்றாட உணவில் இருக்கும் ஜீவசத்து குறைபாடுகளை நிவர்த்திசெய்ய புஷ்டியான சத்துக்கள் இருக்கின்றன; அது நோயாளிகளுக்கும், சின்னஞ் சிறுவர்களுக்கும் சுலபமாக ஜீரணமாகக்கூடியது. ஓவல்டினில் பழுத்த பார்லி மால்ட், ஆடை நிரம்பிய சுத்தமான பசும்பால், சிறந்த கொக்கோ இயற்கையான பாஸ்பேட்டுகளும், பி & டி விடமின்களும் இருக்கின்றன. உடனே ஓவல்டின் வழங்க ஆரம்பியுங்கள். ஆனால் அது "ஓவல்டின்" தானா என்று நிச்சயப்படுத்திக் கொள்ளுங்கள். வேறெந்த உணவு பானமும் ஓவல்டின் ஆகாது!




விநியோகஸ்தர்கள்:
கிரஹாம்ஸ் டிரேடிங் கோ. (இந்தியா) லிட்.

# ஓவல்டின்

**உலகில் மிகவும் விரும்பப்படும் உணவுபானம்**

OV.394

# கள்ளிக்கோட்டை பண்ட்ஸ் லிமிடெட்

(இந்தியாவில் ஸ்தாபிக்கப்பட்டது)

தலைமை ஆபீஸ்: கள்ளிக்கோட்டை | கிளை ஆபீஸ்: 9, செம்புதாஸ் தெரு, மதராஸ்-1

Phone: 85596

## எங்கள் மாதாந்திரக் குறுகிய கால தவணைச் சீட்டுகள்

### கவர்ச்சிகரமான ஏப்ரல் மாதச் சீட்டு வரிசை

உங்கள் இருண்ட எதிர்கால வாழ்வைப் பற்றி நீங்கள் பயந்தால், எங்களுடைய மகிழ்ச்சிகரமான சீட்டுகள் உங்களை உற்சாகப்படுத்தி, நம்பிக்கையோடும் தைரியத்தோடும் அந்தப் பயத்தை விரட்டியடிக்க உதவுகிறது. நூற்றுக் கணக்கானவர் சந்தோஷமடைந்துள்ளனர். நீங்களும் ஏன் அச்சிதம் சந்தோஷம் அடையக் கூடாது?

*விரைவில் மனுச் செய்து கொண்டு ஏமாற்றத்தைத் தவிருங்கள்*

| 20 மாதங்கள் | 4-வது ஞாயிற்றுக்கிழமை ஏல வரிசை | 20 சந்தாதாரர்கள் |
|---|---|---|

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| C | ரூ. 100/- | ரூ. 2000/- |
| D | ரூ. 50/- | ரூ. 1000/- |
| E | ரூ. 25/- | ரூ. 500/- |
| F | ரூ. 20/- | ரூ. 400/- |
| G | ரூ. 15/- | ரூ. 300/- |
| H | ரூ. 10/- | ரூ. 200/- |

சந்தா செலுத்தும் கடைசி தேதி 17-4-53

முதல் ஏலத் தேதி 26-4-53

விபரத்தைத் தெளிவாக எழுதி மனுச் செய்து கொள்பவர்களுக்கு விதிகளும், நிபந்தனைகளும் இலவசமாக அனுப்பப்படும். மற்ற விதிகள் வழக்கம்போல். சீட்டுகள் சேர்த்துக் கொள்ளும் உரிமை கம்பெனியைச் சேர்ந்தது.
(போர்டார் உத்திரவுப்படி)

எம். வி. விஸ்வநாதன், மானேஜிங் டைரக்டர்

தந்தி: 'KALLIFUNDS'

---

FZY-18-TAM

# தசை நோய்கள், வலிகள் விரைவில் குணமாகும்

ஜாம்-பெக் மூலிகை களிம்பு உங்கள் தசையின் மீது தேய்த்துவிடுங்கள். அதிலுள்ள மருந்துக்கலப்புள்ள எண்ணெய்கள் உங்களது நோய்கள், வலிகள், பிடிப்பு ஆகியவற்றிற்கு இதம் அளிக்கும்போது உண்டாகும் குணத்தை நீங்கள் உணரலாம். ஜாம்-பெக்கிலுள்ள இவ்வற்புத மூலிகைகள் ஊடுருவிப்பாய்ந்து உங்கள் தசைகளை மிருதுவாகவும் வலிமையுள்ளதாகவும் செய்யும். இன்றே ஒரு டப்பி ஜாம்-பெக் வாங்குங்கள். சருமம், மண்டை நோய்களுக்கும், வெட்டுக்காயம், நெருப்புப்புண், கஞ்சிக்கொப்பளம், விஷப்புண், ரணம், சேற்றுப்புண், பூச்சிக்கடி, மூல உபத்திரவம் ஆகியவற்றிற்கும் ஜாம்-பெக் உலகப்பிரசித்தி பெற்ற நிவாரணியாகும்.



## Zam-Buk

ஜாம்-பெக் உலகத்தின் தலைசிறந்த சரும ஆயின்ட்மென்ட்

மிருகக் கொழுப்பற்றது என்பதற்கு உத்திரவாதம்

மதராஸிற்கு விநியோகஸ்தர்கள் : மெஸர்ஸ். தாதா & கம்பெனி, மதராஸ்.




நிர்மலா அன்றும் மாலையில் தன் வழக்கப்படி மாடியில் குடியிருந்த வசுமதியைப் பார்க்கச் சென்றாள். நிர்மலாவின் கணவனும் வசுமதியின் கணவனும் ஒரே ஆபீசில், ஒரே சம்பளத்தில் குமாஸ்தா உத்தியோகம் பார்த்து வந்தார்கள். சோம்பலிலும் இருவரும் ஒருவருக்கொருவர் சளைத்தவர்களில்லை என்பது அவர்கள் மனைவிமார்களுடைய அபிப்பிராயம். இரவு எட்டு மணிக்குத்தான் இருவரும் வீடு வந்து சேருவது வழக்கம். அவர்களுடைய ஒற்றுமைக்குச் சற்றும் குறைந்ததல்ல நிர்மலாவினுடையவும், வசுமதியினுடையவும் ஒற்றுமை. இவர்களிடையே நெருங்கிய நட்பு இருந்தது. மாலையில் இருவரும் 'கேரம்' ஆடிக்கொண்டோ பூ வேலை செய்து கொண்டோ பொழுதைக் கழிப்பார்கள்.

அன்று நிர்மலா அறைக்குள் நுழைந்தபோது வசுமதி கண் மூடி, சாய்வு நாற்காலியில் படுத்திருந்தாள். நிர்மலா, "எந்தக் கோட்டையைப் பிடிக்கத் திட்டமிடுகிறாய், வசு!" என்று கேலியாகக் கேட்டதற்கு, "கோட்டையைப்பிடிக்க அல்ல, நிர்மலா. இழந்த கோட்டை ஒன்றை நினைத்துக் கொண்டேன் என்று வேணுமானால் சொல்லலாம். ஆனால் அப்படியும் சொல்வதற்கில்லை. இப்பொழுது எனக்கு என்ன குறைவு இங்கே!" என்று கேட்டுக் கொண்டே எழுந்தாள் வசுமதி.

வசுமதி நிர்மலாவிடம் கேட்பதை விடத் தன்னிடமே கேள்வியைக் கேட்டுக் கொள்கிறாள் என்று எளிதில் உணர்ந்து கொண்ட நிர்மலா, மௌனமே உசிதமென்று எண்ணி அதற்கு மேல் பேசாமல் சும்மா நின்று விட்டாள்.

இன்னும் சில நிமிஷம் மௌனமாகச் சென்றது. பிறகு வசுமதி. "நிர்மலா, வா, உட்கார்ந்து பேசலாம். எனக்கு உன்னிடமிருந்து ஒன்றையும் மறைத்து வைக்க இஷ்டமில்லை. என் பூர்வ ஜன்மத்தைப் பற்றிக் கொஞ்சம் சொல்லி என் மனத்தின் பாரத்தைக் குறைத்துக் கொள்ள முடியுமா என்று பார்க்கிறேன்" என்றாள்.

"என்னிடம் சொல்லக் கூடியதானால் சொல்லு. கேட்கிறேன்" என்று கூறிக்கொண்டு ஜன்னல் கட்டையில் நிர்மலா உட்கார்ந்தாள்.

வசுமதி ரேடியோ பக்கம் பார்வையைச் செலுத்திக் கொண்டே, "இன்றைக்கு மத்தியானம் இரண்டு வீணை இசைத்தட்டுகளை ரேடியோவில் கேட்டாயோ நிர்மலா!" என்று கேட்டாள்.

"இல்லை" என்று நிர்மலா தலையசைக்கவே. வசுமதி, "புதிதாக அந்த இரண்டு ரிக்கார்டுகளும் வெளியாகி யிருக்கிறதாம். மணி என்று ஒரு வைணிகர் வாசித்திருக்கிறார். ஒரு இசைத்தட்டில் யதுகுல காம்போதி ராக ஆலாபனையும் தானமும்; இன்னொன்றில் பல்லவியும். இந்த வைணிகனும் நானும் ஒரு காலத்தில் ஒரே குருவிடம் சங்கீதம் பயின்றோம் என்று என்னால் இன்று நம்பக்கூட முடிகிறதில்லை. ஒரு தடவை மணி அத்தான் "காலைத் தூக்கி நின்றாடும் தெய்வமே" என்று வீணையுடன் வயித்துப் பாடவே அதைக் கேட்டுக் கொண்டிருந்த என் தகப்பனார், "மணி, உன் விரல்களில் சிற்றம்பலத்தான் நடனமாடுகிறார்" என்று கூறி மெய்மறந்து அனுபவித் திருக்கிறார். ஆம் நிர்மலா, அந்த வைணிகன் என் அத்தான் மணியேதான். வீணைவாசிப்பைத் தன் ஜீவனோபாயமாக அத்தான் கொள்வான் என அன்று யாரும் நினைக்கவில்லை. ஆனால் இந்த உலகத்தில் நாம் நினைப்பது போல் நடக்க வேணு மென்கிற கட்டாயமில்லையல்லவா!" என்று கேட்டு நிறுத்தினாள். கேள்விக்குப் பதில் தேவையில்லை என்று உணர்ந்து நிர்மலா மௌனமாய் உட்கார்ந்திருந்தாள்.

சற்றுப் பொறுத்து வசுமதி தொடர்ந்தாள்.

சுமார் ஒன்றரை வருஷத்துக்கு முன் மணி அத்தான் வீணைக் கச்சேரி செய்வதற்காக இந்த ஊருக்கு வந்திருந்தான். சங்கீத சபா நிர்வாகிகள் ஏற்படுத்தியிருந்த ஜாகையில்தான் தங்கி யிருந்தான். வந்த இடத்தில் என்னைப் பார்க்காமலிருக்கக் கூடாதென்றே இங்கே வந்திருந்தான். புகழேணியின் படிகளில் விரைவாய் ஏறிக் கொண்டிருந்த மணி அத்தான் பத்து வருஷங்களுக்கு முன் என் பிறந்த வீட்டுக்கு நிராதரவாய் வந்து என் தகப்பனார் தயவால் எங்களுடன் வாழ்ந்தவன். காலம் மனிதனை எப்படி யெல்லாம் மாற்றி விடுகிறது, நிர்மலா!

அன்று என்னை விழுங்கி விடுபவன்போல் சில கணம் பார்த்துக் கொண்டிருந்த பிறகு, "வசு, நீ எவ்வளவு மாறிவிட்டாய்!" என்றான் புன்முறுவலுடன். நான் அவனுக்குப் பதில் சொல்லவில்லை. என் மௌனத்தைக் கவனித்த மணி, "ஏன்! உன் கணவர் எங்கே! ஆபீசுக்குப்போயிருக்கிறாரல்லவா! இப்போது நான் வந்திருக்கலாகாது. நாளைக்குக் காலையில் அவர் இருக்கிறபோது வருகிறேன். நீதான் உன்னைச் சுற்றி வேலி போட்டுக் கொண்டு விட்டாயே!" என்று கூறிக்கொண்டு நான் தங்கச் சொல்லியும் கேட்காமல் வெளியே போய் விட்டான்.

மணி அத்தான் முதன் முதலில் என் தகப்பனாரிடம், தஞ்சம் புகுந்ததும் இதேமாதிரி திடும் பிரவேசமாகத்தான் அன்று எனக்குப் பன்னிரண்டு வயதிருக்கும். நான் மூன்றும் பாரத்தில் படித்துக் கொண்டிருந்தேன்.

ஒருநாள் மாலை நான் பள்ளியிலிருந்து வீட்டுக்கு வந்தபோது என் தகப்பனார் எங்கோ போவதற்காகப் பெட்டி ஒன்றில் துணிகளை எடுத்து வைத்துக் கொண்டிருந்தார். என் தாயாரிடம், "அம்மா. அப்பா எங்கேயாவது போகிறாரா!" என்று நான் கேட்டதற்கு, "என்னை ஒன்றும் கேட்காதே!" என்று சீறி விழுந்தாள் தாயார். அப்பா அம்மாவின் இஷ்டத்துக் கெதிராகவே புறப்படுகிறார் என்று தெரிந்து கொண்டேன். மேலே ஏதும் கேட்கவில்லை. பதினைந்து நாட்களுக்குப் பிறகு என் தகப்பனார் ஒரு சிறுவனைக்

கூட்டிக்கொண்டு வந்தார். அவன்தான் அத்தான் மணி. அத்தையும் வந்திருந்தாள். அத்தையின் கணவர் திடீரென்று காலமாகவே அத்தையும் மணியும் என் தகப்பனருடன் வந்து விட்டார்கள்.

அத்தை வருவதற்கு முன் எங்கள் வீட்டில் ஒன்றும் இருக்கவேண்டிய இடத்தில் இருக்கிற வழக்கமில்லை. என் தகப்பனருக்குப் போலீஸ் சூப்பரிண்டண்டு உத்தியோகம். அடிக்கடி வெளியே போக வேண்டியிருக்கும். அவருக்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுக்க என் தாயாருக்குச் சக்தியில்லை. தாயார் இயற்கையிலேயே பலமில்லாதவள். என்னைப் பெற்ற பின் அவள் நோயாளியாகவேதான் இருந்து வந்தாள். அத்தை வந்ததும் வீட்டுப் பொறுப்பை அவள் திறம்பட நிர்வகிக்கலானாள். ஆரம்பத்தில் என் தாயாருக்கு அத்தையை ரொம்பப் பிடித்தது. ஆனால் என் தகப்பனர் "நீயும் வீடு வைத்துக் கொண்டிருந்தாயே, மாட்டுத் தொழுவம் மாதிரி!" என்று அம்மாவை அடிக்கடி இடித்துக் கூறிக் கேலி செய்வார். இந்த மாதிரி அவர் சொல்வதன் பலன் என்னவென்று அவர் உணரவில்லை. என் தாயார் மனம் மாறிக் கடைசியில் அத்தையை வெறுக்கத் தொடங்கினாள். அப்பாவின் பிடிவாத குணத்தால்தான் அத்தையும் மணி அத்தானும் என் தாயாரின் நிராதரவிலும் எங்கள் வீட்டில் இருக்க முடிந்தது.

மணி அத்தானும் நானும் ஒரே பள்ளிக்கூடத்தில்தான் படித்துக் கொண்டிருந்தோம்.

அத்தையின் கணவர் பெரிய பணம் படைத்தவரா யிருந்தவர். ஆனால் அவர் அந்தப் பணத்தை எல்லாம் தொலைத்தார். இதையெல்லாம் ஒவ்வொரு தடவை அம்மா என்னிடம் சொல்வாள். ஒருமுறை அப்பா இதைக் கேட்டுக் கொண்டு வந்து விட்டார். அன்று அவர் என் தாயிடம், "இதோ, இந்த வீட்டில் வம்பு பேசக்கூடாது" என்று கூறிக்கொண்டு "உனக்கு வம்பு கேட்பது தான் வேலையோ!" என்று கேட்டு என் கன்னத்தில் ஒரு அறையும் வைத்தார்.

அதுவரையில் எங்கேயோ இருந்த அத்தை விரைந்து வந்து, என்னைத் தன்னிடம் இழுத்துக் கொண்டு, "அவளை ஏண்டா அடித்துக் கொல்கிறாய்!" என்று அப்பாவைக் கடிந்து கொண்டாள்.

அப்பாவுக்கு அத்தானிடம் அளவற்ற பிரியம். அவர் சங்கீத ரஸிகர். தான் நன்றாகப் பாடுகிறவர் என்ற கர்வம் கொண்டவர். அத்தானும் சங்கீத தேவதையின் அருள் பெற்றவன். ஆகவே, சில சமயம் அவன் தன்னை மறந்து பாடிக் கொண்டிருக்கும்போது கேட்போரும் தங்களை மறந்து நின்று விடுவார்கள். ஒரு ஞாயிற்றுக்கிழமை அத்தான் தன் அறையில் உட்கார்ந்து கொண்டு, "பண்ணேன், உனக்கான பூசை ஒரு வடிவிலே, பாவித்திறைஞ்ச ஆங்கே பார்க்கின்ற மலரூடு நீயே இருத்தி" என்று பாடிக் கொண்டிருந்தான். அடுத்த அடி, "அலாமல் இரு கை தான் குவிக்க வெனில் நானும் என் உளம் நிற்றி நீ" என்று பாடவே என் தகப்பனர், "ஆமாம், மணி, உன் உள்ளத்தில் தெய்வம் தாண்டவம் புரியாவிட்டால் உன்னால் அவளை நினைத்துக் கசிந்துருகி எப்படிப் பாட முடியும்!" என்று கேட்டார் வியப்புடன்.

நான் அப்பொழுது வீணை வாசிக்க அப்பியசிக்கத் தொடங்கி ஒரு வருஷ மிருக்கும். அப்பா நினைத்ததை நடத்தும் சுபாவமுடையவர். ஆகவே, அவர் மணி அத்தானிடம், "நீயும் வீணை வாசிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும்" என்றதும் அத்தான் மறு பேச்சில்லாமல் என் தகப்பனர் பேச்சைக் கேட்க வேண்டியதாயிற்று. பள்ளி விளையாட்டுக்களில் பற்றுள்ள அவன் மாலை வேளையில் சற்றும் மனமில்லாமல்தான் வீணை வாசிக்க உட்காருவான். ஆனால் சில வாரங்களில் அவன் தன் விளையாட்டுக்களை மறந்து விட்டான். வீணையின் நாதத்தில் மந்திர சக்தி இருக்கிறது என்றான். அதன் நாதத்தில் மந்திர சக்தி இருந்ததோ இல்லையோ, அத்தானுடைய விரல்களில் கான தேவதை நடனம் ஆடினாள். மூன்றே மாதங்களில் என்னைத் தாண்டிவிட்டான். எங்களுக்குச் சொல்லிக் கொடுக்கிற வைணிகர் என் தந்தையிடம், "வீணை தேவ வாத்தியம் என்பதை மணி தந்திமீட்டுவதிலிருந்தே தெரிந்து கொள்ளலாம். அவன் உள்ளத்திலிருக்கும் சங்கீத தேவதை அதை உணர்ந்துதான் இந்த இனிய நாதத்தை எழுப்புகிறான்! என்ன லயம்! என்ன சுருதி சுத்தம்!" என்று வியப்பார்.

ஒருமுறை இதைக் கேட்டுக் கொண்டிருந்த என் தாயார் இரவு சாப்பாட்டின் போது என் தகப்பனரிடம், "மணி பள்ளிக்கூடப் பாடத்தைக் கவனிக்கட்டுமே! வீணை வாசிப்பு அவன் படிப்புக்குக் குந்தகமா யிருக்கலாமோ என்று பயமா யிருக்கிறது" என்றாள். அப்பாவுக்கா அம்மாவைத் தெரியாது! "ஏன், உன் பெண்ணைவிட நன்றாக வாசிக்கிற பொறாமையாக்கும்!" என்று கேட்டு விட்டார். அம்மா பொங்கும் ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு மௌனமா யிருந்தாள். எனக்கும் தகப்பனர் சொல் 'தைத்தது.

ஒரு வருஷம் சென்றது. இந்த ஒரு வருஷத்தில் மணி அத்தானுடைய வாசிப்பில் அழுத்தமும் காம்பீர்யமும் அதிகமாகி விட்டன. ஒரு நாள் எங்கள் ஆசிரியர், "இதோ பார், அம்மா! வீணை வாசிக்கக் கையில் நல்ல பலம் வேணும். சுருதியிலே லயித்து மிதந்து கொண்டே போக முடியாது. நிறையச் சாப்பிடுகிறாயோ இல்லையோ! தானம் பல்லவி வாசிக்கிற போது தரையிலே காலை ஊன்றி நிற்பவனுடைய உறுதி வேணும். உன் அத்தான் வாசிப்பதை வேணுமானால் கவனி. வாயால் பேசினால் கூட இவ்வளவு சுத்தமாகப் பேச முடியாது" என்று என்னைக் கேலி செய்தார். என்னுடைய மனத்தில் எழுந்த ஆத்திரத்தை ஆசிரியரிடம் காட்ட முடியவில்லை.



அன்றிரவு யாருக்கும் தெரியாமல் அத்தானுடைய வீணையின் தந்திகளை அறுத்து விட்டேன். மறுநாள் விடியற்காலை நான் வழக்கம் போல வீணையை எடுத்துக் கொண்டு உட்கார்ந்தேன். அத்தானும் வழக்கப்படி என் அருகில் விளக்கின் முன் உட்கார்ந்து கொண்டு வீணையின் உறையைக் கழற்றினான். அறுந்த தந்திகளைப் பார்த்துவிட்டு என்னை ஒருமுறை ஏற இறங்கப் பார்த்தான். வீணையை உறையிலிட்டுத் தன் அறையில் கொண்டு வைத்து விட்டான்.

அன்று காலையில் காப்பி குடித்துக் கொண்டிருந்த என் தகப்பனாரிடம், "மாமா, நான் ஒன்று கேட்டால் 'சரி' என்று சொல்வீர்களா!" என்று கெஞ்சினான் மணி அத்தான். "நீ கேட்டு மறுக்கும்படி என்னதான் கேட்பாய்!" என்றார் அப்பா புதிர் போட்டது போல். "மாமா! என்னால் பள்ளிப் படிப்பையும் வீணைப் பயிற்சியையும் சேர்த்தாற்போல் கவனிக்க முடியவில்லை. என் படிப்பு முடியட்டும். வீணை வாசிக்க அப்பொழுது நிறையச் சமயம் கிட்டும்" என்றான் அத்தான்.

அப்பா மனமில்லாமல் அத்தான் வேண்டுகோளுக்கு இணங்கினார். அன்று முதல் அத்தான் வீணை வாசிப்பதை விட்டான். ஆனால் அவன் செயல் என் மனச்சாட்சியை உறுத்திற்று. அவனிடம் என் தவறுக்காக மன்னிப்புக் கேட்டுக் கொண்டபோது அவன் புன்முறுவலுடன், "பழி ஓரிடம் பாவமோரிடம், வசு. குற்றம் செய்தவன் நானிருக்க என் வீணை தண்டனை யனுபவித்தது" என்று மறுமொழி கூறிக் கொண்டு அங்கிருந்து சென்று விட்டான்.

அதற்கப்புறம் அத்தானின் கவனமும் பள்ளிப் படிப்பில் சென்றது. வகுப்பில் முதல் மாணவன் ஆகிவிட்டான் எளிதில். ஐந்து வருஷ காலம் சேர்ந்து படித்தோம். அவன் படிப்பில் மட்டுமல்ல, பள்ளி விளையாட்டுக்களிலும் நன்கு பிரகாசித்தான். அவன் நான்கு வருஷங்களிலும் வருஷாந்திரக் கொண்டாட்டங்களில் வாங்கியிருக்கும் பதக்கங்களும் கோப்பைகளும் ஏராளம்.



மணி அத்தானுடைய படிப்புத் திறனைக் கண்ட என் தகப்பனார் அவன் படித்து மிக உயர்வான பட்டம் பெற்றுப் பெரிய அதிகாரியா யிருப்பதாகவும் அந்த அத்தானுடன் இன்பமாய்த் தன் பெண் வசுமதி குடும்ப வாழ்க்கை நடத்துவதாகவும் கற்பனை செய்து கொண்டார். அத்தையிடம் அவர், "நான் பிரதி பலன் இல்லை யென்றால் ஒன்றும் செய்யமாட்டேன். மணியைக் கொஞ்சம் கவனித்துக் கொண்டால் நாளைக்கு நம் வசுவுக்கு வரன் தேட வேண்டாம், அல்லவா!" என்றார்.

"என்னமோ தெய்வ சங்கற்பம் அப்படியானால் அப்படியே நடக்கட்டுமே" என்று சொல்லி விட்டாள் என் அத்தை.

அந்த வருஷம் அத்தானும் நானும் ஆறாம் பாரத்தில் படித்துக் கொண்டிருந்தோம். ஜனவரி மாதத்தில் நடக்கவிருந்த பந்தாட்டங்களிலும் விளையாட்டுக்களிலும் பெயர் கொடுத்திருந்தான் அத்தான். நாலைந்து பரிசுகளாயினும் வாங்கி விடுவான் என்றே நாங்கள் எல்லோரும் எதிர்பார்த்தோம். பல விளையாட்டுக்களில் 'ஆப்ஸ்டகில் ரேஸ்' என்பது ஒன்று. பல தடைகளைத் தாண்டி முதலில் ஓடுகிறவனுக்குப் பரிசு கிடைக்கும். அத்தான் எட்டிக் குதிப்பதில் மிகத்திறமையுள்ளவன். பெஞ்சுகளைத் தாண்டி, பீப்பாய்களுக்குள் நுழைந்து எப்படியோ முதலில் வந்துவிடுவான் பரிசு வாங்க. ஆனால் அந்த வருஷம் அவனுக்கு மிகப் போதாத காலம். பெஞ்சியைத் தாண்டிவிட்டு மேஜைக் கடியில் நுழையும் பொழுது அவன் தலை மேஜையில் குறுக்கேயிருந்த பெரிய கம்பியில் மோதியது. ஆஸ்பத்திரிக்குச் சுய நினைவில்லாத நிலையில் தூக்கிச் செல்லப்பட்டான். தலைக்கட்டு சில வாரங்களில் அவிழ்க்கப்பட்டு விட்டது. ஆனால் மூளையின் அதிர்ச்சி நீங்கவில்லை. அவனுக்குச் சுய நினைவு வந்தபோது அவன் ஞாபகசக்தி போய்விட்டது. அவன் நினைவு தன் சுற்றத்தைத் தாண்டி அப்பால் எங்கேயோ சுழன்று கொண்டிருந்தது. சில சமயம் பத்துப் பதினைந்து தடவை கூப்பிட்ட பிறகுதான் அவனை யாரோ அழைக்கிறதாக உணர்வான். தூங்கி விழிப்பவன் போல் மிரள மிரள விழித்துக் கொண்டிருப்பான் சில சமயம். அப்பா அத்தானைப் பெரிய டாக்டர்களிடமெல்லாம் கூட்டிச் சென்றார். அவர்கள் தங்கள் திறமைக்குட்படாத நோயாளி என்று கை விட்டனர். காலம்தான் அத்தான் மூளையை நிதானத்துக்குக் கொண்டு வரக்கூடும் என்றனர் நிபுணர்கள். தன் ஒரே மகனின் நிலை இப்படியாகிவிடவே அத்தையின் மனம் இடிந்து விட்டது. ஆனால் துயரங்களை அநுபவித்து வழக்கமாயிருந்த அத்தையின் மனம் கசந்து விடவில்லை

மணி அத்தான் படிப்பை மறந்தே விட்டான். சில சமயம் நான் வீணை வாசிக்கும் போது நின்று கேட்டுக் கொண்டிருப்பான். அவன் பார்வையிலிருந்து அவன் எதையோ நினைத்துப் பார்க்க முயல்கிறான் என்பதை உணரலாம். சில சமயம் தீவிர ஒளியைக் கண்டு பயந்தது கூட உண்டு.

அன்று பௌர்ணமி. வான வீதியில் சந்திரன் உலகத்தைப் பார்த்துச் சிரித்துக் கொண் டிருந்தான். நான் எஸ். எஸ். எல். சி. பரீட்சையின் கடைசி கேள்வித் தாளை எழுதிவிட்டு அன்று 'அப்பாடா' என்று படுத்துக் கொண்டிருந்தேன். சட்டென்று என் அறையில் யாரோ நடந்து வருவது போல் காலோசை கேட்கவே கண் விழித்தேன். ஜன்னல் வழியாக வந்த நிலவின் ஒளியைக் கொண்டே, வந்தவன் மணி அத்தான் என்றும் வீணையை எடுத்துக் கொண்டிருக்கிறான்

என்றும் தெரிந்தது. அவன் செயல் என்னைத் திகைக்க வைத்ததென்றாலும் நான் ஏதாவது சத்தமேற்படுத்தி அவனைக் கலைக்கக் கூடாது என்று மௌனமாய்ப் படுத்திருந்தேன். அத்தான் வீணையை எடுத்துக் கொண்டு வெளியே சென்றான். அவன் மாடிப்படி ஏறுவதை நான் கவனித்தேன். சத்தமில்லாமல் எழுந்து நான் அவன் பின்னால் சென்றேன். மொட்டை மாடியை அடைந்த அவன் உட்கார்ந்து உறையிலிருந்து வீணையை எடுத்து வைத்துக் கொண்டு சுருதி சேர்த்தான். கண்களை மூடிக்கொண்டு சில நிமிஷம் தியான நிலைமையி லிருந்த பிறகு அவன் வீணையில் சிம்மேந்திர மத்திமத்தின் ஸ்வரங்கள் முதலில் வாசித்துப் பார்த்தான். சட்டென்று அவன் கம்பீரமான குரல், "உன்னை யல்லால் வேறே கதியுண்டோ !" என்று எழுந்தது. அவன் வாய் மட்டுமா பாடிற்று! அவன் விரல்கள் வீணைத் தந்திகளைக் கொண்டு ஆண்டவனிடம் அந்தக் கேள்வியை அனுப்பிக் கொண்டிருந்திருக்க வேண்டும். பால் நிலவில் குளித்துக் கொண்டு அத்தான் சொல் லுக்கடங்காத தேஜஸுடன் அங்கே உட்கார்ந்திருந்தான். நள்ளிரவின் அமைதியின் பெருமையை விளக்கிக்கொண்டு கானப் பிரவாகம் பொங்கிற்று. பிரமை பிடித்தவன் போல் நின்று கேட்டேன். ஒரு வாரத்துக்கு முன் வைணிகர் எனக்குக் கற்றுக் கொடுத்ததை அத்தான் கேட்டுக் கொண்டிருந்தான். எவ்வளவு சங்கீத ஞானம் இருந்திருந்தால் அவன் இப்படி வாசித்திருக்க முடியும்!

என் பின்னால் என் பெற்றோரும் நின்றிருந்தனர் என்பதை அத்தான் பாடி முடித்த பின்தான் நான் அறிந்தேன். என் தகப்பனார், "இதுதான் பூர்வ ஜன்ம வாசனை, வசு!" என்றார் கண்களில் ஆனந்த பாஷ்பம் வழிய. அத்தான் எங்களைத் திரும்பிப் பார்த்தான். என் அனுமதியில்லாமல் என் வீணையை எடுத்திருக்கிறான் என்ற அளவு ஞாபகம் வந்துவிட்டது அவனுக்கு. வீணையை உறையில் போட்டு எடுத்துக் கொண்டு எங்கள் பக்கம் வந்தான். "உன் வீணையை ஒன்றும் செய்யவில்லை" என்று சொல்லிவிட்டு என்னிடம் கொடுத்தான். "வீணை ஒன்றுக்குப் பத்தாக வரும், மணி! உனக்கு இவ்வளவு ஞாபகம் வந்ததே, அதே எங்களுக்குப் பெரு நிதி கிடைத்த மாதிரி!" என்றார் என் தகப்பனார்.

மறுநாள் அப்பா அத்தானுடைய வீணையை எடுத்துக் கொண்டு வைணிகர் வீடு சென்றதுதான் முதல் காரியம். அதைக் கொடுத்துவிட்டு இன்னொரு வீணையுடன் அப்பா வந்தார். அவர் "மணி, வீணை ஆசிரியர் வருவார். வாசி, என்ன!" என்று கேட்டபோது அத்தான், "ஆகட்டும், மாமா" என்று மறுமொழி கூறி எங்களை ஏகமாகத் திகைக்க வைத்து விட்டான்.

அத்தான் வீணை அப்பியசிக்கலானான். சில வாரங்களில் என் வீணை வாசிப்புத் தடைப்பட்டு விட்டது. எனக்கு விவாகமாகி விட்டது. மணி அத்தானுடைய மூளை தகாரான பின் புது இடத்தில் வரன் தேடுவதில் முனைந்திருந்தனர் என் பெற்றோர். அத்தானிடம் எனக்குப் பற்றுதலில்லாமல் போய்விட்டது. ஆனால் விவாகம் நடக்கும் சமயம் அத்தான் மூளை மறுபடியும் நல்ல ஸ்தானத்துக்கு வந்துவிட்டது. அத்தான் அன்றைக்குத் தன் அறையில் உட்கார்ந்து கொண்டிருந்தான். அவன் வயதில் எனக்குப் பெரியவன், அவனை நமஸ்கரிக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டு நான் அவன் அறைக்குள் சென்றேன். நமஸ்கரித்து விட்டு நிமிர்ந்து பார்த்த போது அத்தான் இதழ்களில் முறுவலைக் கண்டேன். அவன், "முழுக்க முழுக்க சந்தோஷமாய் இருக்க வேண்டும் உன் வாழ்க்கை, வசு" என்று கூறிச் சற்றுத் தயங்கி விட்டு, "ஒரு துறையில் ஏமாற்றமடைந்தால் மற்றத்துறை எதிலாவது பிரகாசிப்பார்கள் என்று யார் யாரோ சொல்லி யிருக்கிறார்கள். அது உண்மை. 'ஒரு நாள் மணி அத்தானின் பெயர் சங்கீத உலகில் பிரகாசிக்க வேண்டும்' என்று எனக்காகப் பகவானைப் பிரார்த்தித்துக் கொள்" என்று சொன்னான். அப்பொழுது அவனுடைய கண்களில் நீர் நிறைந்து விட்டது.

"மணி அத்தான் வெற்றி பெற்று விட்டான். அவனுடைய துறையில். ஆனால் ...... எனக்கு!

## இன்னிசை எது?

தமிழ்ப் பாட்டுக்கள் பாட வேண்டும் என்கிற கட்சியைச் சேர்ந்த பாமரர்களில் நான் ஒருவன். மானிடக் குரலின் வழியாக இசையுடன் கிளம்பும் மொழியில் உள்ள அமுதத்தை வீணாக்கி, பாட்டில் உள்ள நாதக் கோவையை மட்டில் ஜனங்களுக்குத் தந்து சங்கீதத்தின் பயன் முடிந்தது என்று சொல்வது பெருந்தவறு என்பது என்னுடைய அபிப்பிராயம்.

* *

குழல் இனிது யாழ் இனிது என்ப தம் மக்கள் மழலைச் சொல் கேளாதவர்.

தம் மக்கள் மழலைச்சொல்தான் தாய்மொழியாகிறது. தாயின் மொழியே முன் மழலையாகிப் பின் தமிழாகிறது. தாய் மொழியைத் தள்ளிவிட்டு வேறு மொழியே இனிது என்று எவ்வாறு சாதிக்க முடியும்? குழலும் யாழும் கூடத் தாய் மொழிக்கு ஈடாகாதே! நமக்கு நன்றாகப் பொருள்படாத அயல் மொழி எவ்வாறு ஈடாகும்?

* *

நாதமும் உணர்ச்சியும் கலந்து உண்டாகும் அமுதத்திற்கு இசை என்று பெயர். நாம் அறியாத பாஷையில் நமக்குப் பொருளற்ற சப்தத்தைக் கொண்டு சம்பாதிக்கும் ஸ்வர இன்பம் குறைவுபட்ட இன்பமே யாகும். அதைவிட வெறும் வீணை, பிடில், புல்லாங்குழல், மிருதங்கம் இவைகளை வைத்துக் கொஞ்ச நேரம் கச்சேரி நடத்தி விட்டு முடிப்பது நலம். வாய்ப் பாட்டு வித்வான்களை நீண்ட நேரம் பாடச் சொல்லித் தொண்டையைச் சிரமப்படுத்திக் கொள்ளச் செய்வானேன்? மொழியும் பொருளும் இருந்தால்தான் மானிடக் குரல் இசையாகும்; இல்லாவிடில் வெறும் ஓசைதான்.

—சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்.

...எனக்கு என்ன குறை நிர்மலா! செல்வமும் பெருமையும் கொண்ட குடும்பத்தில் பிறந்த கண் நிறைந்த கணவனை அடைந்த எனக்கு என்ன குறை, நிர்மலா!'' என்று தழுதழுத்த குரலில் கேட்டு முடித்தாள் வசுமதி.

நிர்மலா மறுமொழி என்ன கூற முடியும்! "உன் வாழ்க்கை வீணையில் ஒரு சிறு அபசுரம் பேசுகிறது, வசு. அது தெய்வ கிருபையால் சுஸ்வரமாகப் பரிணமிக்க வேண்டும்'' என்று நிர்மலா மனத்தில் எண்ணிக் கொண்டாள்.

# படித்துப் பாருங்கள்!

## அலை ஓசை

ராஜம்பேட்டை பட்டாமணியம் கிட்டாவய்யரின் செல்வக் குமாரி லலிதாவைக் கலியாணத்துக்காகப் பார்க்க வந்தான், சௌந்தர ராகவன். அப்பொழுது அங்கே கிட்டாவய்யரின் தங்கை பெண் சீதா இருந்தாள். சௌந்தர ராகவனுக்குச் சீதாவைப் பிடித்துப் போய் விட்டது. அவளை மணந்து கொண்டான். அழகும் படிப்பும், அந்தஸ்தும் உள்ள ராகவனை மணந்து கொள்ளச் சீதா இணங்கியதில் அதிசயம் ஒன்றும் இல்லை. காதல் மணம் புரிந்து கொண்ட ராகவன் பிற்பாடு சீதாவிடம் வெறுப்போடு நடந்து கொள்ள ஆரம்பித்ததுதான் அதிசயம். மனம் ஒத்த தம்பதிகளுக்குள் போராட்டம் ஏற்படுவானேன்! சீதா கணவனால் திரஸ்கரிக்கப்படும் அளவுக்கு அந்த மனக் கசப்பு வளரக் காரணம் என்ன! கணவனை விட்டுப் பிரிந்த சீதா, எத்தகைய மன வேதனைகளுக்கு உள்ளானாள்! அவள் தன் அருமைத் தோழி லலிதாவின் அமைதியான இல்வாழ்க்கையிலும், அவள் கணவன் பட்டாபிராமனின் மனத்திலும் பெரும் புயல் தோன்ற ஏன் காரணமாயிருந்தாள்!

விவாகம் ஆகுமுன்பே விமான நிலையத்தில் தாரிணியைக் கண்டு தன் மனத்தைப் பறி கொடுத்திருந்தான், சௌந்தரராகவன். தாரிணியும் ராகவனிடம் அன்பு கொண்டதாகத் தோன்றியது. தாரிணியிடமிருந்து திடீரென்று கடிதம் வந்தது. "என்னை மறந்து விடவும்'' என்று எழுதியிருந்தது. பீஹார் பூகம்பத்தில் தொண்டு செய்யப்போன இடத்தில் அவள் மறைந்தே போய்விட்டாள். பல வருஷங்களுக்குப் பிறகு ஆக்ராவிலுள்ள அக்பரின் சலவைக்கல் மாளிகையை ராகவனும் சீதாவும் சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தபோது, திடீரென்று தாரிணி எதிரில் வந்து தோன்றினால், ராகவன் உள்ளம் குழம்பாமல் என்ன செய்யும்!

சீதாவின் அம்மாஞ்சி, கிட்டாவய்யரின் பிள்ளை சூரியா தேசத் தொண்டில் ஆர்வம் கொண்டு ஊர் ஊராகச் சென்றபோது புதுடில்லிக்கும் சென்றான். தாரிணியின் கம்பீரமான அழகும் குணமும் முதல் எடுப்பிலேயே அவன் மனதில் பதிந்து விட்டன.

சீதாவின் மண வாழ்க்கையில் ஏற்பட்ட கசப்பையும், வெறுப்பையும் போக்குவதற்குச் சூரியா எடுத்துக்கொண்ட முயற்சி பலன் தரவில்லை. ராகவனின் விரோதம்தான் அவனுக்குக் கிடைத்தது.

தாரிணியின் பிறப்பு, வளர்ப்பு, எல்லாமே மர்மம் நிறைந்தவை. அவள் சமூக சேவையில் காட்டிய ஆர்வம் அவளிடம் குடி கொண்டிருந்த அறிவு, அன்பு, அடக்கம், எளிமை முதலிய பண்புகளால் அவள் உயர்ந்து விளங்கினாள். கடைசியில் அவள் யாரை மணந்து கொண்டாள்!

வறுமையால் வாடி, தவறான மார்க்கத்தில் இறங்கி, தம்மையும் தம் குடும்பத்தையும் சொல்லொணாக் கஷ்டங்களுக்கு உள்ளாக்கிக் கொண்ட துரைசாமி ஐயர்—சீதாவின் தந்தை ஏன் சீதாவை ராகவனுக்குக் கொடுப்பதை நிறுத்த முயன்றார்! அவர் எப்படி மௌல்வி சாகிப்பாக மாறினார்! சிந்தித்துப் பார்க்கக் கூட முடியாத அளவுக்கு வட நாட்டில் வகுப்பு மாற்சரியம் காரணமாக நிகழ்ந்த கொடுமைகளை எங்ஙனம் தீரத்துடன் எதிர்த்துப் போராடினார்! கடைசியில் அவருக்கு எப்படி மரணம் சம்பவித்தது!

சூரியா கடைசியில் யாரை மணந்தான்! அவன் மனசில் சதா பூஜித்துப் போற்றிவந்த தாரிணியை ஏன் மணந்துகொள்ள வில்லை!

சீதா பலவிதக் கொடுமைகளுக்கும் மன வேதனைகளுக்கும் ஆளாகி, கடைசியில் மீண்டும் எப்படிக் கணவனுடைய அன்புக்குப் பாத்திரமானாள்! அந்த உத்தமி, இவிப் பிறவா நெறியை அடைந்த பின்பு, ராகவன் யாரை மணந்து கொண்டான்!

சீதாவும் தாரிணியும் சகோதரிகள் என்னும் மர்மம் எப்படி வெளிப்பட்டது!.

மேலே காணும் கேள்விகளுக்கெல்லாம் இப்புத்தகத்தைப் படிக்கும் நேயர்களுக்குப் பதில் கிடைக்கத்தான் செய்கிறது. ஆனால் சம்பவங்கள் ஒன்றும் நாம் எதிர்பார்க்கிறபடி நடக்காமல், எதிர்பார்ப்பதற்கு மாறாகவே நடப்பதால் அடிக்கடி நம்மைத் தூக்கி வாரிப் போடுகின்றன.

மனித வாழ்க்கையில் ஏற்படும் துன்பத்துக்கும் இன்பத்துக்கும், வறுமைக்கும் சுக வாழ்வுக்கும், வெற்றிக்கும் தோல்விக்கும், பிறப்புக்கும் இறப்புக்கும் யார் பொறுப்பு! மனிதன் இவற்றையெல்லாம் தன் விருப்பப்படி தானே ஏற்படுத்திக் கொள்கிறான்! மனித இனம் எப்போதும் சுகம் எங்கே என்றுதானே தேடியலைகிறது! பின் ஏன் சுகத்தைத் தேடும் மானிடனுக்குத் துக்கம் வந்து சம்பவிக்கிறது! மேற் கூறிய கேள்விகளுக்கெல்லாம் இந்தப் பெருங்கதையில் வரும் பாத்திரங்கள் தகுந்த பதில் அளிக்கிறார்கள்.

சீதா, தாரிணி, சூரியா, ராகவன், லலிதா, பட்டாபிராமன், துரைசாமி ஐயர், ரஸியா பேகம், கிட்டாவய்யர், ராஜம்—முதலிய பாத்திரங்கள் எல்லோரும் கதை ஆரம்பத்திலிருந்து சுழன்று சுழன்று வருகிறார்கள்; தங்கள் ஆசாபாசங்களையும், இன்ப துன்பங்களையும், சோக மோகங்களையும், கோபதாபங்களையும் நம்மையும் பகிர்ந்து அநுபவிக்கும்படி செய்து விடுகிறார்கள். இந்த மாபெருங் கதையில் வரும் சிக்கல்களும் மர்மங்களும் புத்தகத்தின் கடைசி அத்தியாயம் வரையில் வந்து பிறகு முடிச்சுக்கள் அவிழ்ந்து தெளிவு பெறுகின்றன.

அகண்ட காவேரிக் கரையில் உள்ள ராஜம்பேட்டைக் கிராமத்திலிருந்து மேற்குப் பஞ்சாப் எல்லையிலுள்ள ஹொஸங்காபாட் வரையில் "அலை ஓசை'' நிகழ்ச்சிகள் பரவி யிருக்கின்றன. முக்கிய சம்பவங்கள் தேவ பட்டணத்திலும், சென்னைப் பட்டினத்திலும், கல்கத்தாவிலும், கராச்சியிலும், பம்பாயிலும், ஆக்ராவிலும், டில்லியிலும், லாகூரிலும், பாளிப்பத்திலும், ரஜனிபூரிலும் நடைபெறுகின்றன.

புத்தகத்தின் அமைப்பைக் கண்ணைக் கவரும் வண்ணம் அமைத்திருக்கிறார் சைத்திரிகர் சந்திரா.

பிரசுரம்: பாரதி பதிப்பகம், தியாகராய நகர், சென்னை—17; விலை: ரூ. 12—8—0.



CSG/12A
அருணோதயம் முதல்
நட்சத்திரம் உதிக்கும்
வரையில் - நாள்முழுவதும்
இனிய வாசனையோடிருப்பீர்கள்
டால்கம் பவுடர்
பள பளவென்று ஜொலிக்கும் புதுமைக்கு காஷ்மீர் புக்கே டால்கம் பவுடரை உங்கள் மேல் தாராளமாகத் தூவுங்கள். அது அதிகக்கசிவை உறிஞ்சுகிறது . . . எரிச்சலையும் அரிப்பையும் அடங்கச் செய்கிறது . . . உங்களைக் குளிமையுடனும் இனிய வாசனையுடனும், நாள்முழுவதும் புதுமையுடனும் இருக்கச் செய்கிறது.
காஷ்மீர் புக்கே
மாணிடர்கள் விரும்பும் பரிமளத்துடன்
1806லிருந்து கோல்கேட் உயர்ந்த தரத்திற்குப் பெயர்போனது.

# செல்லஞ்சேரி கும்பாபிஷேகம்





1. செல்லஞ்சேரி கிராமத்தில் கும்பாபிஷேக வைபவம். 2. இரவில் நடந்த சுவாமி ஊர்வலம். மின்சார தீபங்களினால் ரதம் ஜொலிப்பதைப் பாருங்கள். 3. கும்பாபிஷேகத்தன்று இரவு பக்தி மயமான இன்னிசையைப் பொழிந்து பஜனை செய்த ஸ்ரீ முருகதாஸர், கோவில் திருப்பணி செய்த ஸ்ரீ சங்கர ரெட்டியார், அவருடைய குமாரர் திரு எஸ். சுப்பிரமணியம், தென்னாற்காடு ஜில்லாவில் பதினெட்டு ஆண்டு ஜில்லா போர்டு தலைவரா யிருந்த ஸ்ரீ சீதாராம ரெட்டியார் ஆகியவர்கள். 4. ஸ்ரீ சுப்பிரமணியமும், அவருடைய வாழ்க்கைத் துணைவியும், அருமைக் குமாரியும். 5. ஸ்ரீ முருகதாஸரின் பஜனையைக் கேட்ட பக்தர்கள்.









# லட்சியக் கனவு

கட்டிலில் படுத்துக் கொண்டிருந்தார் அவர். இரண்டு மூன்று நாட்களாக அவருக்கும் ஓய்வு ஒழிவு என்பதே இல்லை. எங்கள் வித்தியாலயக் கட்டிடத் திறப்பு விழா மும்முரத்தில் ஈடுபட்டிருந்த எங்களுக்கு நான் போனதே தெரியவில்லை. என் வேலையையும் பிடிவாதமாக இழுத்துப் போட்டுக் கொண்டு அவர் செய்தார். அது தான் பாவம், இப்பொழுது அவர் அலுத்துப் படுத்துக் கொண்டிருப்பதற்குக் காரணம்.

இரவு எட்டு மணி இருக்கும். நான் கட்டிலில் அவர் கால் மாட்டுப் பக்கமாக உட்கார்ந்திருந்தேன். எங்கள் அறையிலிருந்து வித்தியாலயத்தின் கம்பீரமான புதிய கட்டிடம் நில வொளியில் நன்றாய்த் தெரிந்தது. அந்தக் கட்டிடத்தைப் பார்த்துக் கொண்டிருப்பதில் என் மனத்தில் அளவு கடந்த சாந்தியும் இனந்தெரியாத இன்பமும் தோன்றி ஒரு இதத்தைக் கொடுத்தன.

வித்தியாலயம் நான் நீண்ட காலமாக என் இதய அந்தரங்கத்தில் போற்றிப் பூஜித்து வந்த ஒரு கனவு; அந்தக் கனவின் ஸ்தூல வடிவம் அவ்வழகிய கட்டிடம்; என் கனவை நினைவாக்கியவர் தான் – இதோ படுத்து உறங்கும் என் கணவர். அவர் மட்டும் சமயத்தில் என் வாழ்க்கைப் பாதையில் ஒரு துணையாக வந்து என் கரம் பற்றியிராவிட்டால், நான் திசை தப்பிப் போயிருப்பேன். கம்பீரமான தோற்றத்துக்கு ஏற்ற கம்பீரமான குணம் அவரிடம் இருந்தது. அவர் காலடியில் அமர்ந்திருப்பது என் மனசுக்கு எவ்வளவு பெரிய அமைதியை அளித்தது என்பதை வெறும் வார்த்தைகளால் விவரிக்க முடியாது.

'ஒரு பெண் தன்னந்தனியாக வாழ முடியாதா? விவாகம் என்ற பந்தம் அவளுக்கு அவசியந்தானா? பெண்மையின் சக்தியையும் உயர்வையும் மேன்மையையும் புகழ்ந்து எழுதிய கவிஞர்கள் கடைசியில் அந்தச் சக்தியை ஆண்மையிடம் அடைக்கலமாக ஒப்படைத்து விட்டார்களே!' என்றெல்லாம் நினைத்து என் மனம் வேதனைத் தீயில் வெந்து புழுங்கிக் கொண்டிருந்தது.

என்னைப் பொறுத்தவரையில் நான் விவாகமே செய்து கொள்வதில்லை என்ற தீவிரமான முடிவுக்கு வந்து விட்டேன். ஆண்மைக்கு அடி பணிந்து அதன் அடைக்கலப் பொருளாக வாழுவதில்லை என்று என் மனசைத் திட்டமாக உறுதிப் படுத்திக் கொண்டேன்.

அந்த என் தீவிரமான முடிவுக்கு ஒரு பெரிய சோதனையாக மிஸ்டர் சந்திரன் வந்து சேர்ந்தார்.

மிஸ்டர் சந்திரனின் அழகான தோற்றமும் சாந்தமான சுபாவமும், சாதுரியமான சம்பாஷணையும் என்னை முதல் எடுப்பிலேயே வசீகரித்து விட்டன என்பதை என்னால் சொல்லாமல் இருக்க முடியவில்லை.

"மிஸ் ரோகிணியைப் பார்க்க வந்தேன். அவர்கள் எங்கே இருக்கிறார்கள்?" என்று கேட்டார் அவர், என் இல்லத்தில் நுழைந்ததும் நுழையாததுமாக, ஏனோ என் மனம் அவர் தோற்றத்தில் லயித்து விட்டது. நான் எத்தனையோ ஆண்களைப் பார்த்துப் பேசியிருக்கிறேன். அவர்கள் யாருமே என்னைக் கவர்ந்ததில்லை.

"வாருங்கள், உட்காருங்கள்!" என்று அன்போடு அவரை வரவேற்று என் அறையில் ஒரு நாற்காலியில் உட்காரச் சொன்னேன்.

"நான்தான் ரோகிணி, நீங்கள்......!"

"......மிஸ்டர் சந்திரன். நான் எழுதிய கடிதம் உங்களுக்குக் கிடைத்திருக்குமே! அது சம்பந்தமாகப் பார்த்துப் பேசத்தான் வந்தேன். உங்கள் வித்தியாலயத் தொண்டுக்கு நீங்கள் ஒரு பெண்மணியையே தேர்ந்தெடுக்க விரும்பினீர்கள். இல்லையா! உங்கள் விளம்பரம் பத்திரிகையில் அடுத் தடுத்து வந்ததைப் பார்த்ததும் உங்களுக்குத் தகுந்த பெண்மணி யாரும் கிடைக்கவில்லை என்று அறிந்து கொண்டேன். ஆகவே, நான் மனுச் செய்து கொண்டேன். இது தவறு என்று உங்களுக்குத் தோன்றினால் என்னை மன்





னித்து விடுங்கள் ! ஆனால் ஒரு வேண்டுகோள். உங்கள் சேவையில் பங்கெடுத்துக் கொள்பவர் பெண்மணியாகத்தான் இருக்க வேண்டும் என்னும் உங்கள் அபிப்பிராயத்தின் பொருள் என்ன! உங்களுக்கு ஆட்சேபம் இல்லை என்றால் தயவு செய்து தெரிவிக்க வேண்டும் !'' என்று அவர் மிகவும் அமைதியாகவும் கம்பீரமாகவும் என்னிடம் கேட்டார்.

நான் ஒரு விநாடி ஒன்றும் தோன்றாமல் திகைத்தேன். நான் இத்தனை நாளாக என் லட்சியத்துக்கு எதிராக இப்படி ஒரு கேள்வி வரும் என்று கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை. 'என் அபிப்பிராயத்துக்கு விளக்கம் கூறத் தயாராயில்லை' என்று அவர் முகத்தில் அடித்தாற்போல் பதில் சொல்லி அனுப்பி விடலாம் என்றால் அதற்கும் என் மனம் ஏனோ துணியவில்லை.

''ரோகிணி, உங்களுக்குச் சம்மதமில்லையென்றால் சிரமப்பட வேண்டாம். நான் வருகிறேன்....!'' என்று அவர் கூறி எழுந்திருக்க யத்தனித்தார்.

என் பெயரைச் சொல்லி எத்தனையோ பேர்கள் அழைத்திருக்கிறார்கள். ஆனால் முன்பின் அறிமுகமில்லாத இந்த மனிதர் அழைத்ததில் மட்டும் ஏன் என் தேகம் முழுவதும் புல்லரித்தது ! எனக்கு எங்கிருந்துதான் அத்தனை துணிச்சல் வந்ததோ, தெரியவில்லை!

''தயவு செய்து தாங்கள் கொஞ்சம் தாமதிக்க வேண்டும். இது விஷயமாகத் தங்களிடம் கொஞ்சம் பேச விரும்புகிறேன் !'' என்று எப்படியோ துணிந்து கூறிவிட்டேன். அவர் மீண்டும் நாற்காலியில் அமர்ந்தார். நான் முதலில் விவாதத்தை ஆரம்பித்து வைத்தேன்.

''என்னுடைய வித்தியா சேவைக்குத் துணையாக நான் பெண்மணியைத் தேர்ந்தெடுக்க விரும்பியதற்குக் காரணம் எனக்குப் புருஷர்களிடம் உள்ள வெறுப்பல்ல...... !''

''அப்படியானால் அதன் காரணம்தான் என்ன ! புருஷர்கள் சிரத்தையாக இத்தகைய தொண்டுகளில் பங்கெடுத்துக் கொண்டு உழைக்க மாட்டார்கள் என்று நினைக்கிறீர்களா !'' இந்தக் கேள்வியைப் பளிச்சென்று கேட்டார் அவர்.

'' இல்லை, இல்லை. ஒரு பெண் தனித்து வாழ்க்கையை நடத்திக்கொண்டு ஏதேனும் தொண்டும் புரிய விரும்பினால், அவள் இன்னொரு பெண்ணின் துணையை நாடுவதுதான் நியாயம் என்று என் மனசில் பட்டது. மேலும் நான் விவாகம் செய்து கொள்ளவில்லை. இந்த நிலையில் ஒரு பெண்மணியின் துணை என் கொள்கைக்கு ஏற்றதாக இருக்கும் என்று கருதினேன் !''

'' ...... விவாகம் செய்து கொள்ளுவது இல்லை என்பது உங்கள் கொள்கையா !''

'' இல்லை, மிஸ்டர் சந்திரன்! விவாக விஷயமாக என் மனம் கசந்து விட்டது....''

'' மன்னிக்க வேண்டும். அந்த மனக் கசப்பை அதிகரிக்கும் விதத்தில் நான் ஒரு போதும் நடந்து கொள்ள மாட்டேன். இது உறுதி. சரிதானே ! ஏன் வார்த்தைகளில் நம்பிக்கையில்லையா !''

'' அப்படி யொன்றும் இல்லை. மிஸ்டர் சந்திரன், நீங்கள் அடுத்த வாரம் ஞாயிற்றுக்கிழமை என்னை அவசியம் சந்தியுங்கள். அதற்குள் தீர்மானமான முடிவைத் தெரிவிக்கிறேன். சிரமம் கொடுப்பதற்கு மன்னிக்க வேண்டும் !'' என்றேன்.

அதற்கு அவர், '' ஆகா ! தாராளமாக வருகிறேன். இதில் எனக்குச் சிரமம் ஒன்றுமில்லை. இந்த அளவுக்கு உங்கள் மனசு மாறியதே எனக்குப் பெரிய திருப்தி !'' என்றார்.

அந்தச் சமயம் சமையற்காரி எங்கள் இருவருக்கும் சிற்றுண்டியும் காப்பியும் கொண்டு வந்து வைத்தாள். நான் அவரைச் சிற்றுண்டி சாப்பிடும்படி கேட்டுக் கொண்டேன். அவரும் அநாவசியமாக 'பிகு' செய்து கொள்ளாமல் சிற்றுண்டி சாப்பிட்டுக் காப்பியையும் சாப்பிட்டார். பிறகு அவர் என்னிடம் விடை பெற்றுக் கொண்டு சென்று விட்டார்.

அவர் போய் விட்டார்; ஆனால் அவர் உருவம் என் மனத் திரையில் அப்படியே நின்றது. ஏற்கெனவே பல வருஷங்களாக அவருடன் நான் பழகிப் பேசி யிருப்பது போன்ற ஒரு அர்த்தமற்ற பிரமை என் இதயத்தின் அடிவாரத்தில் எழுந்தது. சை, இது என்ன அசட்டுப் பிரமை!

—அன்று இரவு எனக்குத் தூக்கமே பிடிக்கவில்லை. அவரைத் துணையாகக் கொண்டு வித்தியாலய வேலைகளைத் துவங்குவதா! அப்படியானால் கன்னிகையாகவே காலங் கழிப்பதாக நான் பூண்டிருக்கும் விரதம் என்ன ஆவது! இவருடைய துணை என் விரதத்துக்குப் பங்கமாக ஏன் அமைய வேண்டும்! அவ்வளவு மனோதிடம் இல்லாதவளா நான்! இந்தக் கேள்விகளுக் கெல்லாம் என்னால் பதில் அளிக்க முடியவில்லை. இன்னும் ஒரு வாரம் கழிந்து நான் அவருக்கு என்ன பதில் கொடுக்கப் போகிறேன்! என்னது இது! இந்தக் கேள்விக்கும் என்னால் பதில் சொல்ல முடியவில்லையே! தோன்றினால் அல்லவா சொல்லுவதற்கு!

இரவு மணி பன்னிரண்டு அடித்தது! ஆழ்ந்த சிந்தனையின் அலுப்பில் என்னுடைய கண்கள் இரண்டும் தாமாகவே மூடிக் கொண்டன.

நான், முன்பின் சென்று பழக்க மில்லாத ஒரு காட்டு மார்க்கமாகச் சென்றுகொண்டிருக்கிறேன். எங்கே போய்க் கொண்டிருக்கிறேன் என்பது எனக்கே தெரியவில்லை. ஏதோ உருவற்ற லட்சியம் ஒன்று என் மனசில் இருக்கிறது. அதை அடையத்தான் நான் போய்க்கொண்டிருப்பதாக என் உள் மனம் கூறுகிறது. ஆனால் அந்த லட்சியம் என்ன என்பது மட்டும் எனக்குப் புலனாகவில்லை. திடீரென்று ஐந்தாறு முரடர்கள் அந்தக் காட்டு வழியில் தோன்றி, என்னை இம்சிக்கத் தொடங்கினார்கள்! அச்சமயம் எங்கிருந்தோ வந்து குதித்தார் ஒருவர். அந்த முரட்டு மனிதர்களையெல்லாம் அடித்து விரட்டினார். பிறகு என் கையைப் பிடித்துக் கொண்டு துணை வந்தார். இருவரும் வெகு தூரம் சென்றோம். ஒரு இடத்தில் பாதை முடிந்து விட்டது. அவர் நின்றார். அடுத்த கணம், "ரோகிணி, நில். உன் லட்சியத்தை அடைந்த பின்பும் நீ இன்னும் எங்கே போகிறாய்!" என்று கேட்டார்.'



நான் பதில் சொல்லத் தெரியாமல் பேசாமல் நின்றேன். பிறகு நிமிர்ந்து அவர் முகத்தைப் பார்த்தேன். என்ன இது! மிஸ்டர் சந்திரன் அல்லவா இவர்! இவர் எங்கே இங்கே வந்தார்!

நான் இப்படிச் சிந்தித்துக் கொண்டிருந்த போதே அவர் என் இரண்டு கைகளையும் பிடித்துக் கொண்டார். நான் என்ன காரணத்தினாலோ என் கைகளை அவர் பிடியிலிருந்து விடுவித்துக் கொள்ள முயலவில்லை.

"ரோகிணி, என்ன யோசிக்கிறாய்! ரோகிணி சந்திரனை அடைந்து விட்டாள். அதுதானே அவள் லட்சியம்!" என்று கேட்டுக் கொண்டே குறும்புத்தனமாக என் கன்னத்தை இலேசாகத் தட்டிவிட்டு, என்னைப் பார்த்துச் சிரித்தார்.

நான் திடுக்கிட்டு விழித்துக் கொண்டேன். நான் கண்ட கனவை நினைத்துப் பார்க்கப் பார்க்க எனக்கே வெட்கமா யிருந்தது.

ஒரு வாரம் சென்றது. குறிப்பிட்ட தினத்தில் அவர், அதுதான் மிஸ்டர் சந்திரன் வந்தார். எனக்குத்தான் அவருக்கு என்ன பதில் சொல்லுவதென்று தெரியவில்லை.

"உங்கள் பதில் இன்னும் தயாராகவில்லையா!" என்று கேட்டு விட்டுக் கலீர் என்று சிரித்தார் மிஸ்டர் சந்திரன்.

நான் அவரை வரவேற்று உபசரித்தேன். பிறகு மிகவும் துணிச்சலாக, "மிஸ்டர் சந்திரன், நீங்கள் தான் பந்தயத்தில் ஜயித்தீர்கள். நீங்கள் நம் வித்தியாலய வேலைப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளலாம்!" என்றேன்.

"மிகவும் சந்தோஷம். ஆனால் இது என்னுடைய பூரண வெற்றியாகாது!" என்றார் அவர். மிகவும் அமைதியாகவும் கம்பீரமாகவும்.

நான் பதில் சொல்லத் தெரியாமல் தயங்கினேன். பிறகு ஒருவாறு சமாளித்துக் கொண்டு வித்தியாலயத்தின் திட்டங்களை யெல்லாம் அவரிடம் படித்துக் காட்டினேன். அவர் மிகவும் பொறுமையோடு அதைக் கேட்டுக்கொண்டிருந்தார்.

வித்தியாலயக் கட்டிடம் நாங்கள் போட்ட திட்டப்படி பிரமாதமாக உருவாகி விட்டது. அதன் பெருமை முழுவதும் அவரையே சாரும். ஏராளமான மாணவ மாணவிகள் சேர்ந்து கல்வி பயிலத் தொடங்கினார்கள். என மனசுக்கு இப்போது தான் நிம்மதியா யிருந்தது. வித்தியாலயத்துக்குப் பக்கத்தில் என் வாசஸ்தலத்தையும் அமைத்துக் கொண்டேன். அவர் மட்டும் ஹாஸ்டலிலேயே தங்கி யிருந்தார். தினந்தோறும் வித்தியாலய நடவடிக்கைகளைப் பற்றியெல்லாம் என்னிடம் வந்து சொல்லி யோசனை கேட்பார்.

அன்று காலையில் எழுந்ததும் அவருக்காக நான் காத்திருந்தேன். அவர் என் வீட்டுக்கு வந்துதான் காப்பி சாப்பிடுவது வழக்கம். வெகு நேரமாகியும் அவர் வரவில்லை.

அவரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. வேலைக்காரப் பையன் கொண்டு வந்து கொடுத்தான். வியப்போடு கடிதத்தை வாங்கிப் படித்தேன்.

'' மிஸ் ரோகிணி அவர்களுக்கு,

எனக்குப் பதிலாக இந்தக் கடிதத்தைப் பார்க்கும்போது உங்களுக்குச் சற்று வியப்பாக இருக்கும். நான் வட நாடு போவதாகத் தீர்மானித்து விட்டேன். என் நண்பன் ஒருவன் அங்கே தன்னுடன் சேர்ந்து தொண்டாற்ற அழைக்கிறான். நம் வித்தியாலய வேலைதான் பூர்த்தியாகி விட்டதே! என்னைத் தாங்கள் எதற்காக அழைத்திர்களோ, அந்த வேலை முடிந்து விட்டது. இந்த ஒரு வருஷ காலம் உங்களோடு சேர்ந்து இந்த வித்தியாலய வேலைகளில் ஈடுபட்டிருந்தது என் வாழ்நாளிலேயே மறக்க முடியாத நாளாகும். இனியும் நான் இங்கிருந்து உங்கள் கொள்கைக்குக் குறுக்கே நிற்க விரும்பவில்லை. நான் முதன் முதலில் உங்களுக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்ற வேண்டுமானால், அதாவது விவாக விஷயமாக உங்கள் மனம் அடைந்திருக்கும் விரக்தி உணர்ச்சிக்குக் குந்தகமாக நான் இருப்பது சரியல்ல என்று என் அந்தராத்மா அடிக்கடி கூறுகிறது. உங்கள் மனவுறுதியில் எனக்கு அபார நம்பிக்கை யிருக்கிறது. ஆனால்......என் மனவுறுதி தளர்ந்து ஆட்டங் காணாமல் இருக்க வேண்டுமானால் நான் உடனே புறப்பட்டு விட வேண்டும். என்னை இன்னமும் சோதனை செய்யமாட்டீர்கள் என்று நம்புகிறேன். இன்னும் சிறிது நேரத்தில் வித்தியாலயச் சாவி, மற்றும் ரிக்கார்டுகள் எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு வந்து தங்களிடம் ஒப்புவித்து விட்டுப் புறப்படுகிறேன்.

தங்கள்

சந்திரன்



நம் தமிழ் நாட்டின் தாய்ப் பாஷையாகிய அமிழ்தினுமினிய தமிழ் மொழியில் நம் முன்னோர்களான ஸ்ரீ சமயாசாரியார்கள், ஸ்ரீ முத்துத் தாண்டவர், ஸ்ரீ அருணாசலக் கவி, திருவிளையாடல் ஸ்ரீ சுப்ரமணிய பாரதிகள், ஸ்ரீ கவி குஞ்சரபாரதிகள், ஸ்ரீ சிதம்பர பாரதிகள், ஸ்ரீ கோபால கிருஷ்ண பாரதிகள் ஆகியோர் பக்தி பரவசத்தோடு ஆயிரக்கணக்கான பண்களும் கீர்த்தனங்களும், பதங்களும் தேனொழுகப் பாடியுள்ளார்கள். அவற்றில் தெலுங்கு முதலான பாஷைகளிலுள்ள பெரியவாளின் கீர்த்தனங்களைப் போலவே அந்தந்த சந்தர்ப்பங்களுக்கு உகந்தவாறு ராகம், பாவம், தாளம் ஆகிய சிறந்த அம்சங்கள் விசேஷமாய்ப் பொருந்தி யிருப்பதைக் காணலாம்.

ஆகையால் தமிழ்ப் பெரியாரின் கீர்த்தனங்களையும் ஸங்கீத வித்வான்கள் கையாள வேண்டும் என்பது என் அபிப்பிராயம்.

**ஸ்ரீ சுப்பராம பாகவதர்**
**(மழவராயனேந்தல்)**

கொள்ள வேண்டும்' என்று சொல்லி அப்பா சந்தோஷப்படுவாராம். அம்மா சொல்லியிருக்கிறாள். அப்பா சொன்னதற்கு ஏற்ப, நானும் உருக்கி வார்த்த தங்கச் சிலையைப் போல் இருப்பேன்.

ரோகிணி என்று என் தகப்பனார்தான் எனக்குப் பெயர் வைத்தாராம். சந்திரன் இருபத்தேழு மனைவியர்களை மணந்தும் தன் அந்தரங்க ஆசையை ரோகிணியிடம் தான் வைத்திருந்தான். ரோகிணி அவன் பக்கத்திலிருந்தால் போதும். சந்திரனின் முகம் மலர்ந்து விடும். அன்றைக்கு அவன் வீசும் நிலவிலே அபரிமிதமான தண்மை நிலவியிருக்கும். அன்று அவன் காடு நகரங்களையும் மாடகூடங்களையும் தன் மோகன நிலவில் மூழ்கடித்துக் காதலர்கள் உள்ளத்திலும் ஓர் இன்ப வேதனையை எழுப்புவான். இதையெல்லாம் என் தகப்பனார் ஒரு கவியின் கற்பனையோடு அழகாகச் சொல்லிக் கொண்டு போவார்.

ரோகிணியிடம் சந்திரன் தன் மனத்தைப் பறிகொடுத்தது போல, என்னிடமும் ஒரு பூலோக சந்திரன் தன் உள்ளத்தைப் பறிகொடுத்து விடுவானாம். இது என் அப்பாவின் கற்பனை.

ஆனால் என் அழகைப்பற்றி அப்பா பிரமாதமாக நினைத்துக்கொண்டிருந்தது வெறும் கற்பனையல்ல. நான் உண்மையிலேயே நல்ல அழகி. பட்டுப் பாவாடையும் சட்டையுமாக நான் பள்ளிக்கூடம் போகும் அழகை எங்கள் தெருவில் உள்ளவர்கள் பார்த்துப் பிரமிக்காத நாளில்லை.

"அம்மா, கனகம்! உன் பெண் ரோகிணிக்குத் தினம் ஒரு தடவை சுற்றிப் போட்டுத் திருஷ்டி கழிக்கத் தவறாதே. அவள் உடம்பில் தினம் ஒரு மெருகு எப்படித்தான் ஏறுகிறதோ, தெரியவில்லை!" என்று எங்கள் பக்கத்து வீட்டுப் பார்வதி மாமி தினம் ஒரு தடவை சொல்லுவாள்.

மற்றவர்கள் சொல்லுவது என்ன! எனக்கே என் அழகு தெரிந்துதான் இருந்தது. எத்தனையோ தடவை நிலைக் கண்ணாடியின் முன்னால் நின்று என் மோகன உருவத்தைப் பார்த்து நானே பிரமித்துப் போயிருக்கிறேன்.

வயது வளர வளர, என் அழகும் போட்டி போட்டுக் கொண்டு வளர்ந்து வந்தது. எஸ். எஸ். எல். ஸி. பரீட்சையில் தேறினேன் அப்பொழுது என் தாயார் ஒரே பிடிவாதமாக அப்பாவோடு சண்டை போட்டு என் மேல் படிப்புக்கு ஒரு முற்றுப் புள்ளி வைத்து விட்டாள். அவளுக்கு ஒரே பயம். ஆற்றங்கரைப் படுகைப் பிரதேசத்தில் தளதள வென்று வளர்ந்திருக்கும் பூங்கொடியின் பசுமையும் பூரிப்பும் என் இளமை வளர்ச்சியில் இருந்ததுதான் காரணம்.

அம்மா சொன்னதற்காக அப்பா என் படிப்பை நிறுத்தினாரே தவிர, எனக்கு அலைந்து திரிந்து வரன் தேடும் சிரமத்தை அவர் துளிக்கூட எடுத்துக் கொள்ளவில்லை.

"இப்படிப் பேசாமல் வயசு வந்த பெண்ணை வீட்டில் வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தால் மாப்பிள்ளை தானாக வந்து விடுவானா?" என்று அம்மா கடிந்து கொள்ள ஆரம்பிக்கவே, அப்பா ஒரு நல்ல நாளில் என் விவாக முயற்சியைத் தொடங்கினார். பல ஊர்களுக்கு என் ஜாதகத்தை அனுப்பினார். பதில் கடிதங்களும் ஜாதகங்களும் வந்து குவிந்தன. அப்பா மிகுந்த அக்கறையோடு அந்த ஜாதகங்களை அலசி ஆராய்ந்து பார்த்தார்.

"ரோகிணியைப் பார்க்க நாளைக்கு ஈரோட்டிலிருந்து பையனும் அவன் தாயாரும் தகப்பனாரும் வருகிறார்கள். அவர்கள் நல்ல சௌகரிய முள்ளவர்கள், தகுந்தபடி ஏற்பாடு செய்து கொள்!" என்றார் அப்பா.

அவ்வளவுதான். அம்மாவுக்கு இது போதாதா! ஓடி ஓடிப் பெண் பார்க்க வருகிறவர்களை வரவேற்று உபசரிக்க ஏற்பாடுகள் செய்ய ஆரம்பித்து விட்டாள்.

அவர்கள் வந்து விட்டார்கள். இனிப்பு, காரச் சிற்றுண்டிகள் முதலில் அவர்களுக்கு வழங்கப்பட்டன. பிறகு பெண் பார்க்கும் உண்மையான கட்டம் வந்தது.

"அம்மா, ரோகிணி! இங்கே வா!" என்று அப்பா அன்பு கனியும் குரலில் அழைத்தார். உடனே நான் வேகமாகக் கூடத்துக்கு வந்தேன். ஒரே பார்வையில் என் கணவராக வரப்போகிறவரைக் கண்டு கொண்டேன். அழகாய்த்தான் இருந்தார். நான் எல்லோருக்கும் நமஸ்காரம் செய்து விட்டு எழுந்து நின்றேன்.

"ஒரு பாட்டுப் பாடு, அம்மா!" என்றார் அப்பா.

நான் வயலினை எடுத்து வந்து பாடிக்கொண்டே வாசித்தேன். அப்படியே கடைக்கண்ணால் அவரையும் கவனித்தேன். ஒருவரும் என் பாட்டைக் கவனித்ததாகத் தெரியவில்லை. இரண்டு மூன்று பாட்டுகள் ஆனதும் நானாக நிறுத்தி விட்டேன்.

வந்திருந்தவர்களில் பெரியவர், எனக்கு மாமனாராக வரப்போகிறவர், அப்பாவைப் பார்த்து, "ஊருக்குப் போய் இரண்டு நாளில் கடிதம் எழுதுகிறேன். அப்புறம் முகூர்த்தம் வைத்துக் கொள்ளலாம்!" என்றார்.

இரண்டு நாட்கள் சென்றன. அம்மா ஓயாமல் அந்த வரனைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தாள். அவர்களிடமிருந்து நல்லபடியாகப் பதில் வரவேண்டுமே என்று மிகவும் கவலைப்பட்டாள்.

அவர்களிடமிருந்து கடிதம் வந்தது. அப்பா மிகவும் ஆவலோடு கடிதத்தை எடுத்துக் கொண்டு அம்மாவிடம் ஓடி வந்தார்.



எல்லாவித பல்வலிகளுக்கும்
பல் வெண்மை தரும்.....
ஈர்களுக்கு வலு தரும்
உபயோகியுங்கள்
குரங்கு மார்க்
கருப்பு பல்பொடி
(REGD)
எங்கும் கிடைக்கும்
3 விதமான சைசுகள்
NOGI & CO.,
87, CHINA BAZAAR Rd, MADRAS-1




டன்லப்
மீது
சுக
பிரயாணம்
செய்யுங்கள்
TRADE MARK
DCX-27




3 வாசனைக்
கலாரத்னங்கள்
கம் கம் ஜவாஜ் ★ கம்பால்
★ கமகர் அகர்பத்திகள்.
டி. எஸ். சுகந்தாலயா,
வாசனைதிரவிய வியாபாரிகள், பெங்களூர்-2

"பதில் வந்து விட்டதா! என்ன எழுதியிருக்கிறார்கள்! ரோகிணியைப் பண்ணிக் கொள்ளக் கசக்கிறதா என்ன, அவர்களுக்கு!" என்று அம்மா கேள்விக்கு மேல் கேள்விகளாக அடுக்கினாள்.

அப்பா கடிதத்தைப் படித்தார்:

"நமஸ்காரம். என் பையனுக்குச் சங்கீதத்தில் அளவு கடந்த ஆசை. நீங்கள் வருத்தப்பட்டுக் கொள்ளக் கூடாது. உங்கள் பெண்ணுக்கு வாய்ப் பாட்டு பாதகம் இல்லையாம். அந்த அளவுக்கு வயலின் வாசிக்கும் ஞானம் போதவில்லையாம். எனக்கு இதெல்லாம் ஒன்றும் தெரியாது. சங்கீத விஷயத்தில் நான் நிரபராதி! பையன் பிடிவாதமாக இருக்கிறான். இந்த விஷயம் திருப்திகரமாயிருந்தால்தான் 'லௌகிக விஷயம்' பேசி ஒரு முடிவுக்கு வர முடியும். அவன் மனசுக்குப் பிடிக்காத விஷயத்தில் வற்புறுத்த மனம் இடந்தர மாட்டேன் என்கிறது. மன்னிக்க வேண்டும்.

தங்கள், சுந்தரேசன்."

இந்தக் கடிதத்தைப் பார்த்து அப்பா மனம் தளரவில்லை. அம்மாதான் தவியாய்த் தவித்தாள்.

"ரோகிணி, தினம் விடாமல் வயலின் சாதகம் பண்ணு, அம்மா! அவர்கள் எழுதி விட்டார்கள் என்பதற்காக நாம் கோபித்துக் கொள்ளுவதில் பிரயோஜனம் ஒன்றும் இல்லை. நம்மிடம் உள்ள குறையை நாம் முதலில் சரிப்படுத்திக் கொள்ள வேண்டும்" என்று அம்மா உபதேசம் செய்ய ஆரம்பித்து விட்டாள். அப்பா அம்மாவோடு சேர்ந்து கொள்ளாவிட்டாலும், அம்மாவின் கட்சியை எதிர்க்கவில்லை.

வயலினிலும் வாய்ப்பாட்டிலும் அசுர சாதகம் செய்ய ஆரம்பித்தேன். நான் சாதகம் செய்ய ஆரம்பித்தது எவ்வளவு பலமாயிருந்தது என்பதற்கு இரண்டு பக்கத்து வீட்டுக்காரர்களும் காலி செய்து விட்டதிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

அதற்குப் பிறகு, என்னைப் பார்க்க வந்த வரன்களுக்குக் கணக்கே யில்லை. ஒரு வரனின் தகப்பனார், முகத்தில் அடித்தாற் போல், "எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்த பெண் என்றால் குடும்பத்துக்குச் சரிப்பட்டு வராது. சாதாரணப் படிப்பு இருந்தால்போதும். உங்கள் பெண்ணுக்குச் சங்கீதமும் அதிகம்!" என்று சொல்லிவிட்டுப் போனார்.

இன்னொரு வரனின் தகப்பனார் என்னைப் பார்த்துவிட்டுப் போனதும் பின்வருமாறு கடிதம் எழுதினார்:

"பையன் உங்கள் பெண்ணுக்குப் படிப்பு போதாது என்கிறான். அவன் எம். ஏ. பட்டதாரி. குறைந்த பட்சம் தன் மனைவி பி. ஏ., யாவது பாஸ் செய்திருக்க வேண்டும் என்கிறான். இல்லாவிட்டால் தன் நண்பர்களோடெல்லாம் பழகச் சரிப்பட்டு வராது என்கிறான். ஆகையினால் மன்னிக்க வேண்டும்!"

இன்னொரு வரன் வந்து என்னைப் பார்த்தார். அவருக்குத் தாய் தகப்பனார் யாரும் இல்லை. தம்முடைய ஜாதகத்தைக் கொடுத்துப் பெண் ஜாதகத்தைக் கேட்டு வாங்கிக்கொண்டு போனார். "ஜாதகம் பொருந்தினால் போதும்; உடனே முகூர்த்தத்துக்கு நாள் குறிக்க வேண்டியதுதான். 'கையிலே காலிலே' ஒன்றும் கொடுக்க வேண்டாம்" என்று சொன்னார்.

அவருக்கு முப்பத்தைந்து வயது இருக்கும். முதல் தாரம் கல்யாணமான மறு வருஷமே இறந்து விட்டாள். ஆறேழு வருஷங்களாக விவாகத்தை ஒத்திப் போட்டுக்கொண்டே வந்தவர், இப்பொழுது புனர் விவாகத்தில் நாட்டங் கொண்டாராம். ஒரு ஆடிட்டரிடம் வேலை பார்த்து வந்தார். சம்பளம் சொற்பம்தான்.

என்னைப்பற்றியும் எனக்கு வரப் போகும் கணவனைப்பற்றியும் எவ்வளவோ மனக்கோட்டை கட்டி வந்த என் தகப்பனார் குடும்ப நிலைமை காரணமாக இந்த இரண்டாந் தார வரனுக்கு என்னைப் பிணைத்துப் போட இசைந்தார். அவர் கனவு கண்டது போல, எந்தச் சந்திரனும் இந்த ரோகிணியைத் தேடிக்கொண்டு வரவில்லை.

நான் ஒரே பெண்தான் என்றாலும் எங்கள் குடும்பம் அப்பா ஒருவர் வருவாயைக் கொண்டு காலந் தள்ள வேண்டியிருந்ததால், எனக்கு வரதக்ஷிணை கொடுத்துக் கல்யாணம் செய்ய அப்பாவின் நிதி நிலைமை வசதியாயில்லை.

அம்மாவுக்கு இந்த வரன் பிடித்து விட்டது. அப்பாவை அவசரப்படுத்தி அவர் ஜாதகத்தையும் என் ஜாதகத்தையும் ஒரு ஜோஸ்யரிடம் காட்டச் சொன்னாள். அவர் ஜாதகங்கள் பொருந்தி யிருப்பதாகச் சொன்னார்.

அதே சமயத்தில் அவரிடமிருந்து கடிதம் வந்தது. ஜாதகம் பொருந்துவதாகவும் மேற்கொண்டு பேசத் தம்முடைய ஒன்றுவிட்ட சகோதரர் வருவார் என்றும், அவரிடம் பேசி முகூர்த்தம் நிச்சயிக்கலாம் என்று எழுதி யிருந்தார். அவர் குறிப்பிட்டபடி அவர் சகோதரர் வந்தார். ஆனால் கல்யாணம் நிச்சயம் செய்ய வரவில்லை. எல்லோரையும் திடுக்கிடச் செய்யவே வந்தார்.

"உங்கள் பெண்ணுக்கு மொத்தம் எத்தனை பவுனுக்கு நகை போட்டிருக்கிறீர்கள்!" என்று எடுத்த எடுப்பில் ஒரு கேள்வியைப் போட்டார்.

"ஏன்! எல்லாமாகச் சேர்த்து பதினைந்து பவுனுக்குக் குறையாது!" என்றார் அப்பா.

"பதினைந்து பவுனுக்குக் குறையாது என்றால் என்ன அர்த்தம்! உங்கள் பெண்ணுக்கு நீங்கள் செய்து போட்ட நகை எத்தனை பெறும்! உங்களுக்குத் தெரியாதா! சரியாகச் சொல்ல வேண்டும்.—இருக்கட்டும். கல்யாணம் செய்த பிறகு பெண்ணைக் கொண்டு வந்து புக்ககத்தில் விடும்போது எத்தனை பவுனுக்கு நகை போடுவீர்கள்!"

"நாலு பவுனுக்குச் சங்கிலி பண்ணிப் போட்டுப் பெண்ணைப் புக்ககத்தில் கொண்டு வந்து விடுவோம்!" என்றார் அப்பா.

"என்ன ஸார், இது! விளையாடுகிறீர்களா, என்ன! முதலில் பதினைந்து பவுனுக்கு நகை போட்டிருப்பதாகச் சொன்னீர்கள். பெண்ணைக் கொண்டு வந்து விடும்போது நாலு பவுனுக்குச் சங்கிலி போடுவோம் என்கிறீர்கள். எல்லாமாகச் சேர்த்து இருபத்தைந்து பவுனுக்குக் குறைந்தால் இந்தக் கல்யாணம் நடக்காது. சரி, இருக்கட்டும். வெள்ளிப் பாத்திரம் மொத்தம் எவ்வளவு ரூபாய் எடை!" என்று கேட்டார் வந்தவர்.

சாந்த சொரூபியான என் தகப்பனாருக்குப் பளிச் சென்று கோபம் வந்துவிட்டது.

"உங்களுக்கும் நமக்கும் சரிப்பட்டு வராது. நமஸ்காரம். நீங்கள் போய் வாருங்கள்!" என்று முகத்தில் அடித்தாற் போலக் கூறி எழுந்து விட்டார். வந்தவர் என்ன செய்வார், பாவம்! பேசாமல் வந்த வழியைப்பார்த்து நடையைக் கட்டினார்.

எனக்கு இந்தப் பெண் பார்க்கும் தொல்லையே பிடிக்கவில்லை. அப்பாவிடம் கண்டிப்பாக எனக்கு விவாகமே வேண்டாம் என்று சொல்லிவிட்டேன்.

நான் சோகத்தோடு சதா வீட்டில் அடைபட்டுக் கிடப்பது அப்பாவுக்குச் சகிக்கவில்லை. என்னை மேல் படிப்புக்காகப் பெண்கள் கலாசாலையில் சேர்த்தார். என் மனசுக்கும் அது மிகவும் ஆறுதலான காரியமாகப் பட்டது.

நான் இப்போது ஒரு பி. ஏ., பட்டதாரி. கூடவே உபாத்தியாயினி வேலைக்கும் பாஸ் செய்து விட்டேன். அதற்கு ஏற்றாற் போல நான் பாஸ் செய்த கையோடு உள்ளூரிலேயே உயர்நிலைப் பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயினி உத்தியோகம் கிடைத்தது. அம்மா எவ்வளவோ தடுத்துச் சொல்லியும் நான் கேட்கவில்லை. பிடிவாதமாக அந்த உத்தியோகத்தை ஏற்றுக் கொண்டேன். அப்பா இது விஷயமாக என் போக்கிலேயே விட்டு விட்டார்.

"பதினைந்து பதினாறு வயதிலேயே வரன் கிடைக்கவில்லை. இனிமேல் எப்படிக் கிடைக்கும்! வயது இருபதுக்குமேல் ஆகிவிட்டதே! போதாக் குறைக்கு உபாத்தியாயினி உத்தியோகம் வேறு. இனிமேல் வாழ்ந்தாற் போலத்தான்!" என்று அம்மா வாய் ஓயாமல் புலம்பிக் கொண்டிருந்தாள்.

ஊரிலும் பலபேர் பலவிதமாக என்னைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். அதையெல்லாம் கேட்டுக் கேட்டு என் மனம் அடைந்த வேதனையைச் சொல்லி முடியாது. பிறகு என் விவாகத்தைப் பொறுத்தவரையில் என் மனம் கல்லாகிவிட்டது. பெண் குலத்தை அடிமை கொள்ள ஆண் குலம் ஏற்படுத்திய சூழ்ச்சிதான் விவாகம் என்று தீர்மானமாய்க் கருத ஆரம்பித்தேன்.

எனக்கு விவாகம் நடக்கவில்லை என்கிற மனக்குறை அம்மாவை அப்படியே அரித்துத் தின்று படுத்த படுக்கையாக்கிவிட்டது. அந்த நிலையிலும் அவள் அதிக நாள் இருக்கவில்லை. என்னையும் அப்பாவையும் தவிக்க விட்டு ஒருநாள் அவள் போய் விட்டாள். அம்மா போனது என்னைவிட அப்பாவைத்தான் மிகவும் பாதித்து விட்டது. ஐயோ! அவரும் என்னை விட்டுப் பிரிந்துவிட்டார்.

நான் இப்போது தன்னந்தனியளாகி விட்டேன். எனக்கு அந்த ஊரில் இருக்கவே பிடிக்கவில்லை. எங்கள் பூர்வீக வீட்டை விற்றுப் பணமாக்கிக் கொண்டேன். ஊரை விட்டே புறப்பட்டு இந்தக் கிராமத்துக்கு வந்து சேர்ந்தேன். ஒரு வித்யாலயம் நிறுவும் நோக்கத்தோடு நிறைய மனைவாங்கினேன். பல பிரபல பிரமுகர்களை அணுகி நிதி வசூலித்து என் தொண்டைத் துவக்கத் தீர்மானித்தேன். இந்த வேலைகளுக்காகத்தான் என்னோடு சேர்ந்து தொண்டாற்ற அநுபவமுள்ள பெண்மணி தேவை என்று விளம்பரம் செய்தேன். அதன் பலன் இவர் வந்து என் வாழ்க்கைக்கே துணையானார்.

பாதிமதி வானவீதியில் பவனி வந்து கொண்டிருந்ததைப் பார்க்க நீலக் கடலில் வெள்ளித் தோணி மிதப்பதுபோல் இருந்தது. மங்கிய ஒளியுடன் விண் மீன்கள் அங்கொன்றும் இங்கொன்றுமாகப் பளிச்சிட்டன. வெண்மதிக்குச் சமீபமாக ஒரு நக்ஷத்திரம் கண் சிமிட்டிக் கொண்டு நின்றது. அதுதான் ரோகிணியோ! நான் உடனே என் கணவர் முகத்தைப் பார்த்தேன். ஜன்னல் வழியாக நிலவின் ஒளி வீசித் தூங்கிக் கொண்டிருந்த அவர் முகத்துக்குத் தனிச்சோபை தந்தது. எனக்கு உடம்பு முழுவதும் சிலிர்த்தது.

என் கணவர் திடுக்கிட்டு விழித்துக் கொண்டார். எழுந்து சுற்றும் முற்றும் பார்த்தார்.

"ஏன், யாரைத் தேடுகிறீர்கள்?" என்று கேட்டேன்.

"என் ரோகிணியைத்தான். இருவரும் சேர்ந்து வானத்தில் பறப்பது போல் கனவு கண்டேன். சட்டென்று விழித்துக் கொண்டேன். உன்னைத் தேடினேன்!" என்றார் என் கணவர்.

"ஆமாம், நாம் இருவரும் வானத்தில்தான் இருக்கிறோம். அதோ பாருங்கள், ரோகிணியையும் சந்திரனையும்!" என்றேன். அவர் உடனே என் கைகள் இரண்டையும் பிடித்துக் கொண்டு புன்முறுவல் பூத்தார். நான் மெய்மறந்து போனேன்.

★ ★ ★ ★ ★ ★

# தமிழிசையும் பரமசிவனும்

முதன் முதலாக நம் செந்தமிழ் நாட்டில் பணம் கொடுத்துப் பாட்டுக் கேட்டவர் யார் தெரியுமா?

சாட்சாத் பரமசிவனேதான்!

அதிலும் அவர் காசு கொடுத்துக் கேட்டது தமிழிசைதானும்!

"தெரிந்த நான்மறையோர்க்
கிடமாய திருமிழலை
இருந்துநீர் தமிழோ டிசைகேட்கும்
இச்சையாற் காசுநித்தம் நல்கினீர்!"

என்று திருவீழிமிழலைப் பதிகம் எட்டாவது பாசுரத்தில் ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனார் அருளியிருக்கிறார்.

அந்தக் காலத்தில் சிவபெருமான் தமிழிசை கேட்டதற்காகக் கொடுத்த காசு, பொற்காசு! இந்த நாளில் நாம் கொடுக்கும் காசு, கடிதாசு! அவ்வளவுதான் வித்தியாசம்.

தமிழிசை ஒரு நாள் கேட்டதோடு சிவபெருமான் திருப்தி அடைந்துவிட்டாரா? இல்லை. நித்தம் நித்தம் காசுகொடுத்து டிக்கெட் வாங்கிக் கொண்டு போய்க் கேட்டார்! தமிழோடு சேர்ந்த இசை அவ்வளவாக அவரைக் கவர்ந்திருந்தது!

சிவபெருமான் அவ்விதம் காசு கொடுத்துத் தமிழிசையைக் கேட்ட இடம் எது? நாலு வேதங்களையும் ஓதி உணர்ந்த மறையோருக்கு இருப்பிடமான திருவீழிமிழலை என்னும் ஊர். வேதகோஷங்களுக்கு மத்தியில் தமிழிசையையும் பெருமான் கேட்டு அனுபவித்திருக்கிறார்!

இப்படி எல்லாம் ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனார் சொல்லியிருப்பதிலிருந்து அந்த நாளில் நமது முன்னோர்கள் தமிழிசையை எவ்வளவாக மதித்துப் போற்றி வந்தார்கள் என்பது நன்கு தெரிகிறது.




ஆம், அவன் ஒரு வழிப்போக்கன். காலில் கந்தல் செருப்புகள் இரண்டும் அவன் பாதங்களை விடாப்பிடியாகத் தழுவிக் கொண்டிருக்கின்றன. இல்லை, அவன்தான் அவைகளை அப்படி அழுத்திக் கட்டிப் போட்டிருக்கிறான்.

கால் சட்டைகள் இரண்டையும் ஒழுங்காகச் சுருட்டி விட்டிருக்கிறான். அவன் உடம்பில் போட்டுக் கொண்டிருப்பது சட்டைதான் என்று நிச்சயமாகச் சொல்ல முடியாது. ஏனென்றால் முன்னும் திறந்துதான் இருக்கிறது; பின்னும் திறந்து தான் இருக்கிறது. ஆனால், சட்டையின் கைகள் இரண்டு மட்டும் ஒரு குற்றம் குறையின்றிப் புத்தம் புதியது மாதிரி இருக்கின்றன. அழுக்குப் படிந்திருக்கிறது. முதுகில் பெரிய மூட்டை ஏறி யிருக்கிறது. மூட்டை என்று சொல்லுவது தவறுதான்! ஏதோ ஒரு பை; அதில் ஏதேதோ திணித்து வைத்திருப்பதினாலே மூட்டை மாதிரி தோன்றுகிறது.

வழிப்போக்கன் போய்க் கொண்டேஇருந்தவன் கொஞ்சம் நின்று, வழுக்கிக் கொண்டிருக்கும் அந்த மூட்டையைக் கொஞ்சம் மேலே நகர்த்திக் கொண்டு நடக்கிறான்.

சூரியன் மேற்குத் திசையில் கரகர வென்று இறங்கிக் கொண்டிருக்கிறான். பறவைகள் கீச்சுக் கீச்சென்று கத்திக் கொண்டு தங்கள் கூட்டைத் தேடி விரைந்து செல்லுகின்றன.

"சரி, இன்னும் கொஞ்ச நேரத்தில் இருட்டி விடும். இன்று இங்கு எங்கேயாவது தங்கிவிட்டு நாளைக் காலைதான் புறப்பட வேண்டும். இதற்குள் உடம்பு களைப்பு நீங்கிச் சுறுசுறுப்பாக இருக்கும்!" என்று நினைத்து நாலாபுறமும் சுற்றிச் சுற்றிப் பார்த்தான். செருப்புகளைச் சறுக் சறுக்கென்று தேய்த்துக் கொண்டு போனான்.

"அதோ! அந்த மாடி வீட்டுக்குக் கீழே தாழ்வாரம் தளம் போட்டிருக்கிறது. இடமும் அழகாக இருக்கிறது. இன்றிரவு அங்கே தங்கி விட்டால் என்ன!" என்று தளர்நடை போட்ட வண்ணமாய் அந்த மாடி வீட்டண்டை போய் நின்றான். பின்பு நெற்றியில் வழிந்து கொண்டிருக்கும் வியர்வையைத் துடைத்து விட்டுக் கொண்டு மூட்டையை இன்னும் கொஞ்சம் மேலே தூக்கிக் கொண்டு அண்ணாந்து பார்த்தான்.

யாரோ ஒரு வனிதை மாடியில் நின்று கொண்டிருப்பது தெரிந்தது. அவள் முகம் முழுவதிலும், தங்க முலாம் பூசுவது போல் சூரியனின் கிரணம் தென்னங் கீற்றினிடையே புகுந்து பாய்ந்து கொண்டிருந்தது. அடுத்த கணம் தான் குறிப்பிட்ட இடத்தை நோக்கிச் சென்றான்.

முதலில் தன் முதுகின் மேல் இருக்கும் மூட்டையை இறக்கிக் கீழே வைத்தான். பின்பு தன் உறவினர்களான செருப்பு இரண்டையும் கழற்றிச் சுத்தம் செய்து, மூலையில் வைத்தான்.

இதற்குள் பின்புறமிருந்து "ஏய்ய்ய்!" என்ற பயங்கரமான குரல் வரவே நடுநடுங்கித் திரும்பிப் பார்த்தான். எதிரே மாடியில் பார்த்த அந்தப் பெண் கண்களில் கனல் பறக்கக் கடுங் கோபத்துடன் நின்று கொண்டிருந்தாள்.

"ஏய் சோம்பேறி! இதென்ன சத்திரமா! சாவடியா! உம்; எழு!" என்று வார்த்தைகளில் அனல் தெறிக்க ஆவேசம் வந்தவள் போல் மூட்டையைத் தாறுமாறாகத் தள்ளினாள். வழிப்போக்கன் "ஹா!" என்று கூக்குர லிட்டுக்

1953-ம் வருஷத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் சிங்கப்பூர் நாட்டுக் கோட்டை செட்டியார் வர்த்தக சங்கத்தின் நிர்வாகிகள்.



உட்கார்ந்திருப்பவர்கள் : (இடமிருந்துவலம்) திருவாளர்கள் அரு. பழ. சுப்பைய செட்டியார், சொ. நா. சொ. சொக்கலிங்கம் செட்டியார், பழ. சு. நா. கருப்பஞ் செட்டியார் (உப தலைவர்) ராம. ராம. ராமநாதன் செட்டியார், பெரி. அ. மு. வெள்ளையப்ப செட்டியார் (தலைவர்) வ. சுப. நாச்சியப்ப செட்டியார், மூத்து. கரு. அரு. பழ. வெ. செல்லப்ப செட்டியார், பெரி. பெ. வயி. ஷண்முகம் செட்டியார் (சமாதான நீதிபதி). நின்று கொண்டிருப்பவர்கள் : (இடமிருந்துவலம்) திருவாளர்கள் சுப. சு. அ. அண்ணாமலை செட்டியார், மு. சிவ. மெ. லெ. வினைதீர்த்தான் செட்டியார் (காரியதரிசி), ந. பழ. சித. மு. வ. நடராஜன் செட்டியார், கலி. அழ. ராம. ராம. கண்ணப்ப செட்டியார், காசி (சங்க சிப்பந்தி).

---

கொண்டு அந்த மூட்டையைத் தன் மார்போடு சேர்த்து அணைத்துக் கொண்டான். காரணம்; அவன் உயிர், உள்ளம், உலகம் எல்லாம் அந்த மூட்டைக்குள் அல்லவா அடங்கி இருக்கிறது! வழிப்போக்கன் பெருமூச்சு வாங்க, ஆச்சரியத்தால் கண்கள் விரிய, அவளையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான்.

இதற்குள் அவள் தாய் தந்தையர் இருவரும் ஓடி வந்து, "கமலா! என்ன காரியம் செய்கிறாய்!" என்று கடிந்து கொண்டனர்.

இதற்குள் வழிப்போக்கன் உள்ளம் சோர, உடல் குன்றி மூட்டையைத் தூக்கிக் கொண்டு செருப்புகளைக் கையில் பிடித்துக் கொண்டு கால்கள் பின்னத் தள்ளாடினான்.

"தம்பி! நீ யார்!" என்று கேட்டுக் கொண்டே கமலாவின் தந்தை வழிப்போக்கனிடம் போனார்.

"நான் ஒரு வழிப்போக்கன்" என்று மிகவும் கம்மிய குரலில் மொழிந்தான்.

"தம்பி! ஒன்றும் வருத்தப்படாதே. அவள் குழந்தை. தெரியாத்தனமாக உன்னைத் திட்டி விட்டாள். இன்றிரவு இங்கு தங்கிவிட்டுப் போ!" என்று கனிவுடன் சொல்லிவிட்டுக் கமலாவை அழைத்துக் கொண்டு திரும்பினார்.

*   *   *

வழிப்போக்கன் தன் மூட்டையின் மீது சாய்ந்து படுத்துக் கொண்டிருந்தான். செருப்புகள் இரண்டும் பக்கத்தில் இருந்தன. வெண்ணிலவின் வீசும் கதிர்கள் அவன் முகத்தில் விழுவதும் மறைவதுமாக இருந்தது.

அவன் சிந்தனை சிலிர்த்து எழுந்தது. அதன் காரணமாக என்ன அலைகள் எழும்பி மேலே மேலே போய்க் கொண்டிருந்தன. திடீரென்று அவன் சிந்தனை தடைப்பட்டது. சிரீச் சிரீச் என்ற சத்தத்தைக் கேட்டு விழித்து பார்த்தான். எதிரே கமலா நின்று கொண்டிருந்தாள்.

வழிப்போக்கனின் உடலெல்லாம் ஒரு தரம் நடுங்க ஆரம்பித்து விட்டது.

"ஐயா! நான் உம்மை இப்பொழுது போகச் சொல்ல வரவில்லை" என்றாள் கமலா.

வழிப்போக்கனின் இளம் மீசையில் வியர்வை அரும்பிக் கொண்டிருந்தது.

வாய் திறந்தபடியே அவளை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான்.

"ஏன் உமக்குப் பசிக்கிறதா! ஏதாவது கொண்டு வரட்டுமா!" என்று கேட்டாள் கமலா.

ஆமாம் என்பதற்கு அறிகுறியாக அந்த வழிப்போக்கன் தலையை ஆட்டினான்.

கமலா ஒரு தட்டு நிறையச் சாதம் கொண்டு வந்தாள். அவன் எதிரில் வைத்துச் சாப்பிடும்படி சொன்னாள்.

அடுத்த கணத்தில் அந்த ஏழை வழிப்போக்கனின் கையும் வாயும் மட மடவென்று வேலையைச் செய்து கொண்டிருந்தன. கமலா வைத்த கண் வாங்காமல் தலையை ஒருபுறமாகச் சாய்த்து வைத்துக்கொண்டு அவனையே வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

வழிப்போக்கன் சாப்பிட்டு முடித்ததும் நன்றியுணர்ச்சியுடன் ஒருதரம் கமலாவைப் பார்த்தான். கைகூப்பி வணங்கினான்.

"நாளைக்கு எங்கு போகப் போகிறீர்!" என்று கேட்டாள் கமலா.

"எங்கேயாவது!"

"அப்படி யென்றால்!"

"வழிப்போக்கனுக்கு ஒரு குறித்த இடம் இருக்கிறதா என்ன! எங்கேயாவது போய்க்கொண்டே

இருப்பது; எதையாவது கிடைப்பதைச் சாப்பிட்டுக் கொண்டே இருப்பது!" என்றான்.

இந்தப் பதில் கமலாவின் உள்ளத்தை நெகிழ வைத்தது. ஒரு கணம் அந்த ஏழையின் முகத்தைப் பார்த்துக் கொண்டே நின்றாள். பிறகு என்ன நினைத்தாளோ தெரியவில்லை.

"இங்கேயே தங்கிவிடும். அப்பாவிடம் சொல்லி ஏதாவது வேலை வாங்கித் தருகிறேன்!" என்றாள்.

வழிப்போக்கனின் கருவிழிக் கண்கள் ஆச்சரியத்தால் அகல விரிந்து மின்னின.

கமலா "சரி, நான் வருகிறேன்!" என்றுகூறி எழுந்தாள். வழிப்போக்கனும் எழுந்து நின்றான்.

ஏனோ இன்று கமலாவுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. ஏதோ ஒரு உணர்ச்சி. அவளுக்கு அவன் மீது முதலில் வெறுப்பை உண்டாக்கியது. பிறகு தன் தந்தையின் பரிவையும் அந்த ஏழையின் பரிதாப முகத்தையும் பார்த்தவுடன் அவன் மீது அவளுக்குப் பச்சாத்தாபம் ஏற்பட்டு விட்டது. அது காரணமாகத்தான் அவனுக்கு அன்னம் அளித்தாள். அவனையே தன்னுடைய தோட்டக்காரனாக மாற்றுவதற்கும் தீர்மானித்து விட்டாள்.

* * *

இப்பொழுது கண்ணனுக்கு — இது அந்த வழிப் போக்கனின் பெயர்—-ஸ்திரமாகக் கமலாவின் வீட்டில் வேலை கிடைத்து விட்டது.

கண்ணனுக்குத் துணையாக கமலாவின் பழைய தோட்டக்காரக் கிழவனின் மகள் கண்ணம்மாள் வேலை செய்து வந்தாள்.

கண்ணம்மாள் வீட்டில்தான் அவனுக்குச் சாப்பாடு. கண்ணம்மாளின் தந்தையும் கண்ணனிடம் அன்பு காட்டி நேசித்து வந்தார்.

கண்ணம்மாள் விதைகளை மண்ணைக் கிளறி உள்ளே வைத்து மண்ணைத் தூவுவாள். கண்ணன் அவைகளுக்குப் பாத்தி கட்டிக் காலம் தவறாது தண்ணீர் பாய்ச்சுவான்.

கண்ணன் மலர்களுக்குத் தண்ணீர் தெளிக்கும் போது வேறு ஞாபகமாகக் கண்ணம்மாளின் தலையில் பூத்துக் குலுங்கும் மலர்களுக்கும் தண்ணீரைக் கொட்டுவான். அவ்வளவுதான். கண்ணம்மாள் கோபங்கொண்டு சேற்றை வாரி அவன் முகத்தில் பூசிவிட்டுச் சிட்டாய்ப் பறப்பாள். கண்ணன் முகத்தில் அப்பிக் கொண்டிருக்கும் சேற்றை மறந்து இன்னும் நன்றாகப் பூசிக் கொண்டு அவளைத் துரத்திக் கொண்டு ஓடுவான்.

அவள் மரத்தில் ஏறுவாள். அவனும் அவளைத் துரத்துவான். பிறகு இருவரும் விழுந்து விழுந்து சிரிப்பார்கள். ஒருவரோடு ஒருவர் காதலோடு பார்த்துக் கொள்ளுவார்கள்.

கண்ணம்மாள் முகத்தை 'உம்'மென்று வைத்துக் கொண்டு கோணங்கி செய்து காண்பிப்பாள். கண்ணனும் அப்படியே காண்பிப்பான்.

இதற்குள் மாலை கவிழும்; இருள் பரவும். இருவரும் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே தங்கள் தங்கள் இடத்தை நோக்கிப் பிரிய மனமின்றிப் பிரிந்து செல்லுவார்கள்.

இரவு நேரங்களில் கண்ணன் தோட்டத்தில் போய் உட்காருவான். தன் சிறிய குரலை எழுப்பிப் பாட ஆரம்பிப்பான். அவ்வளவுதான்! கண்ணம்மாள் விரு விரு வென்று சுழன்று கொண்டே வந்து விடுவாள். கண்ணன் அவள் செந்தாமரை முகத்தை ஆர்வத்தோடு பார்ப்பான். அவளும் ஆசையோடு அன்பு கனிய அவன் முகத்தைப்

## என்ன துவேஷம்?

★

தமிழிசை இயக்கம் மும்முரமாக நடந்து கொண்டிருந்த போது நண்பர் ஒருவர் ரஸிகமணி டி. கே. சி. அவர்களிடம் வந்து ஒரு கேள்வியைப் போட்டார். "உங்களுக்குத் தெலுங்கு பாஷையின்மீது என்ன துவேஷம்?" என்றார். இப்படிக் கேட்ட நண்பரைப் பார்த்து ரஸிகமணி திருப்பி ஒரு கேள்வி கேட்டார். "உங்களுக்கு கிரீக் பாஷை தெரியுமா?" என்றார். "தெரியாது" என்று பதில் கூறினார் அந்த நண்பர். "கிரீக் பாஷையின் மீது உங்களுக்கு என்ன, ஐயா, துவேஷம்?" என்று கேட்டார் ரஸிகமணி.

---

பார்ப்பாள். அப்புறம் இருவரும் என்ன என்னென்னவோ பேசுவார்கள்.

அன்று பூரண வெண்ணிலவு தண்ணிய ஒளியைத் தகதக வென்று பொழிந்துகொண்டிருந்தது. இளம் பூந் தென்றல் குளு குளு வென்று கமழ்ந்து கொண்டிருந்தது. அந்தச் சமயத்தில் கண்ணன் நீல வானத்தை அண்ணாந்து பார்த்தவாறு புல் தரையில் படுத்துக் கொண்டிருந்தான். கண்ணம்மாளும் அங்கு வந்தாள். இருவரும் பேசவில்லை.

திடீரென்று கண்ணம்மாள் "கண்ணா!" என்று கனிவுடன் கூப்பிட்டாள்.

"ஊம்!" என்றான் அவன். ஆனால் ஒன்றும் பேசவில்லை. மௌனமாக மேகக் கூட்டங்களையே பார்த்துக் கொண்டிருந்தான். அவன் கருங் கண்கள் படபட வென்று அடித்துக் கொண்டன. கொஞ்ச நேரம் கழித்துக் கண்ணன் "கண்ணம்மா!" என்று கூப்பிட்டான்.

"ஊம்!" என்றாள் கண்ணம்மாள்.

ஏனோ வழிப்போக்கன் மறுபடியும் வாயைத் திறக்கவில்லை. அவன் எண்ணமெல்லாம் நிலவையே சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தன.

இந்தச் சமயத்தில் "ஏய் பரதேசி!" என்ற பயங்கரமான கர்ஜனையைக் கேட்டு இருவரும் திடுக்கிட்டுத் திரும்பினர்.

எதிரே பல்லை நறநறவென்று கடித்துக் கொண்டு கமலாவின் தகப்பனார் - அவர்களுடைய எஜமானர் – ரௌத்திராகாரமாய் அந்தக் காதலர்களுக்கு எதிரில் நின்று கொண்டிருந்தார்.

"பிச்சைக்காரப் பயலுக்குக் காதல்! எச்சில் நாய்க்குக் காதல்" என்று கேட்டுக் கொண்டே அவனைத் திட்டிக் கொண்டிருந்தார்.

அவருடைய கோபத்தையும் அவர் வாயிலிருந்து வந்த வசை மொழிகளையும் கேட்டுக் கண்ணனும் கண்ணம்மாளும் கல்லாய்ச் சமைந்து விட்டனர்.

தந்தையின் கோபக் குரலைக் கேட்ட கமலா அங்கு ஓடிவந்தாள். கண்ணனுக்காகப் பரிந்து பேசினாள். அவர்கள் காதலைப் பற்றிக் கூறினாள். கண்ணம்மாளின் தந்தைக்குக் கூட இதில் சம்மதம்தான் என்பதை எடுத்துக் காட்டினாள்.

கமலாவின் தந்தைக்கு ஏனோ தெரியவில்லை, அவன்மீது வெறுப்பு ஏற்பட்டு விட்டது. அவன் கண்ணம்மாளைக் கல்யாணம் செய்து கொள்ளக் கூடாது என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டார். அவர் அப்படிக் கூறக் காரணம் என்னவோ! அது கடவுளுக்குத்தான் வெளிச்சம்.

கமலா தன்னுடைய திறமை எல்லாவற்றையும் காட்டித் தந்தையைச் சமாதானப்படுத்தி வீட்டுக்கு அழைத்துச் சென்றாள்.

சட்டென்று கண்ணை விழித்துப் பார்த்தான் தோட்டக்காரக் கண்ணன். பக்கத்தில் ஒருவரையும் காணவில்லை. நல்லவேளை தான் கண்டது கனவு என்று உணர்ந்து மகிழ்ந்தான். இருந்தாலும் அவன் உள்ளத்தில் ஒரு பயம்; உடலில் நடுக்கம் ஏற்பட்டு விட்டது.

*   *   *

மறுநாள் கண்ணனிடம் வழக்கமான உற்சாகம் இல்லை. கண்ணம்மாளுக்குக் காரணம் தெரியவில்லை. அவள் எவ்வளவு முயன்றும் அவன் ஒன்றும் கூற மறுத்து விட்டான்.

"கண்ணா! இப்பொழுது என் கேள்விக்குப் பதில் சொல்லப் போகிறாயா, இல்லையா!"

"நான் ஒரு வழிப்போக்கன். நான் உன்னிடம் நெருங்கி நின்று பேசுவது கூடத் தவறு."

"உன்னை யார் வழிப்போக்கன் என்று சொன்னது!"

"ஏன், இதை யாராவது எனக்குச் சொல்ல வேண்டுமா என்ன? நான் வழிப்போக்கன், வழிப்போக்கன்தானே!"

"ஏன் இப்படி எல்லாம் பேசுகிறாய்! உன்னை யாராவது ஏதாவது சொன்னார்களா!"

"என்னை யாரும் ஒன்றும் சொல்லவில்லை. இருந்தாலும் நான் என்னை மறந்துவிட முடியுமா! நான் ஒரு அனாதை, வயிற்றுச் சோற்றுக்காகப் பாடுபடுகிறேன் என்பதை நான் நினைத்துப் பார்க்க வேண்டாமா!"

"கண்ணா! இத்தனை நாளும் இல்லாமல் இன்று மட்டும் ஏன் இப்படிப் பேசுகிறாய்? தயவு செய்து சொல்லேன்!"

"……………"

"பேசமாட்டாயா!"

"கண்ணம்மா! என்னை வீணாகத் தொந்தரவு பண்ணாதே! நாளையிலிருந்து நான் உங்கள் வீட்டில் கூடச் சாப்பிடப் போவதில்லை. எனக்குக் கிடைக்கும் சம்பளத்தைக் கொண்டு நானே சமைத்துச் சாப்பிடப் போகிறேன்."

"அப்பா ஏதாவது சொல்லி விட்டாங்களா!" என்று கண்ணம்மாள் கேட்டாள். அவள் குரலில் இப்பொழுது ஒரு கனிவு இருந்தது.

"கண்ணம்மா! உன் தந்தை ஒரு தெய்வம். அவர் ஒருநாளும் அப்படிச் சொல்ல மாட்டார். அவரைப் பார்ப்பதே எனக்குப் பேரானந்தமாக இருக்கிறது. அவருடன் பேசும்போது நான் அடையும் இன்பத்தை உன்னிடம் சொல்லவே வார்த்தைகள் இல்லை."

"பின் நான் ஏதாவது தப்பு செய்தேனா! இல்லை என்மீது கோபமா! கண்ணா, சீக்கிரம் சொல்லு. என்னால் இனி தாங்க முடியாது" என்று அவன் தோளைப் பிடித்து உலுக்கினாள். அவன் காலில் விழுந்து மன வேதனை தாங்காது கதறினாள்.

"கண்ணம்மா! நீ தவறிக் கூட என்னிடம் கோபப்பட்டதில்லை. உத்தம குணம் படைத்த உன்னை வாழ்க்கைத் துணைவியாக அடையப் போகிறவன் பாக்கியசாலி" என்றான். இப்பொழுது அவன் குரலில் ஒரு நடுக்கம் இருந்தது. அவன் கண்கள் கலங்கி விட்டன.

"கண்ணு! அப்படியானால் நான் வேறு ஒருவனை மணந்து கொள்ள வேண்டியதுதானு! உன்னை மறந்துவிட வேண்டியதுதானு!" என்று கேட்டாள். முகத்தை மூடிக் கொண்டு 'ஓ' வென்று கதற ஆரம்பித்து விட்டாள்.

கண்ணனும் சின்னக் குழந்தை மாதிரி விக்கி அழ ஆரம்பித்து விட்டான்.

இவர்களுடைய சம்பாஷணையைத் தூரத்தில் இருந்து கவனித்துக் கொண்டிருந்த கமலா கண்ணனைக் கூப்பிட்டாள்.

கண்களைத் துடைத்துக் கொண்டு கண்ணன் கமலாவின் எதிரில் போய் நின்றான்.

"நீயும் கண்ணம்மாளும் பேசிக் கொண்டிருந்ததை யெல்லாம் கேட்டுக் கொண்டுதான் இருந்தேன். நீ அப்படி மனம் வெறுத்துப் பேசுவதன் காரணம் என்ன என்பதை என்னிடம் சொல்லு" என்றாள்.

கண்ணன் ஒரு கணம் மௌனமாக நின்று கொண்டிருந்தான். தூரத்தில் நின்று கொண்டிருந்த கண்ணம்மாளைக் காதலோடு பார்த்தான். பிறகு கமலியின் கருணை ததும்பும் முகத்தை நன்றியுடன் பார்த்தான். தட்டுத் தடுமாறிக் கொண்டு பேச ஆரம்பித்தான்.

இரவு தான் கண்ட கனவைக் கூறிக் கண்ணீர் விட்டான். கமலா அவனுடைய வெள்ளை மனசைப் பார்த்துக் கலகலவென்று சிரித்தாள். "கண்ணு! இதற்காகவா கண்ணீர் விடுகிறாய்! நானே அப்பாவிடம் சொல்லி உங்கள் திருமணத்துக்கு ஏற்பாடு செய்கிறேன்" என்றாள்.

கண்ணனின் முகம் மலர்ந்தது.

கண்ணம்மாள் அகமும் முகமும் மலர ஒரு முறை கண்ணனைப் பார்த்தாள். ஒரு துள்ளுத் துள்ளிக் கமலத்திடம் வந்தாள். "அம்மா! நீங்கள் தான் எங்களுக்கு உதவி செய்ய வேண்டும்" என்று கை எடுத்துக் கும்பிட்டாள்.

*　　　*　　　*

அடுத்த சில வாரங்களில் கண்ணனுக்கும் கண்ணம்மாவுக்கும் கமலாவின் தந்தையே முன் நின்று கல்யாணம் செய்து வைத்தார்.

வழிப்போக்கனாக வாழ வழியறியாது அலைந்து வந்த தன் வாழ்க்கையை வளம் படுத்திய வனிதையான கமலாவுக்குக் கரங்கூப்பி வணங்கினான் கண்ணன். கண்ணம்மாளோ கமலாவின் காலடியில் விழுந்து வணங்கினாள்.

இந்தக் காட்சியைப் பார்த்த தோட்டக்காரக் கிழவனின் முகத்தில் மகிழ்ச்சி பொங்கி வந்ததை அவன் சுருங்கிய முகம் எடுத்துக் காட்டியது.

அப்போது அடித்த இளந் தென்றலில் கண்ணனும் கண்ணம்மாளும் சேர்ந்து வளர்த்த புஷ்பச் செடிகள் ஆடி அசைந்தன. அது அவர்கள் வாழ்க்கைக்கு வழிகாட்டிய வனிதைக்கு நன்றி கூறுவது போலவே இருந்தது. அவர்களுக்கு அருகில் உயர்ந்து வளர்ந்திருந்த பவழமல்லிகை மரத்திலிருந்து மண மக்களுக்கு ஆசி கூறுவது போல் பொல பொல வென்று மலர்கள் உதிர்ந்தன.

## சத்தியமூர்த்தி பேசுகிறார்

★

1938-ம் வருஷம் ஜூன் மாதம் 29ம் தேதி யன்று சென்னை ரேடியோ நிலையத்தில் ஸ்ரீ எஸ். சத்தியமூர்த்தி அவர்கள் நிகழ்த்திய பிரசங்கத்தில் பின் வருமாறு கூறினார்:

"......தமிழ் நாட்டில் பாடகர்கள் கச்சேரிகளில் தமிழ்ப் பாடல்களை அதிகமாகப் பாட வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். தமிழில் அழகிய பாடல்கள் இல்லை என்று சொல்லுவது வீண் சாக்கு......என்னுடைய ஆசை நம் கச்சேரிகள் சுமார் இரண்டு இரண்டரை மணிக்குள் முடிக்கப்பட்டு அதில் பாதிக்கு மேல் தமிழ்ப் பாட்டுக்கள் இருக்க வேண்டும் என்பது......"



பரோடாவில் உள்ள சாராபாய் மருந்துத் தொழிற்சாலையைச் சேர்ந்த கைட்ரேஸிட் அதாவது க்ஷயரோக நிவாரண மருந்து உற்பத்தி யந்திரத்தைச் சில தினங்களுக்கு முன் இந்திய சர்க்கார் சுகாதார மந்திரி ஸ்ரீமதி ராஜகுமாரி அமிருத கௌரி ஆரம்பித்து வைத்தார். அப்போது மேற்படி தொழிற் சாலையின் டைரக்டர் ஸ்ரீ அம்பாலால் சாராபாய் (உட்கார்ந்திருப்பவர்), க்ஷயரோகத்தினால் கஷ்டப்படும் ஏழை நோயாளிகளுக்கு இலவசமாக விநியோகிப்பதற்காக ஸ்ரீமதி அமிருத கௌரியிடம் இருபத்து நாலாயிரம் க்ஷயரோக நிவாரண மாத்திரைகளைக் கொடுத்தார்.

# வட்ட மேஜை

அன்று வெள்ளிக்கிழமை. வழக்கம்போலவே காலை ஒன்பதரை மணிக்கு நானும், என் நண்பரும் ஆபீஸுக்குப் புறப்பட்டோம். ஆபீஸுக்கு நேரமாகி விட்டபடியால் ரயில் பாதையைக் குறுக்கே கடந்து, புதுமாம்பலம் ராமேசுவரம் ரோட் வழியாக ஸ்டேஷனுக்குச் சென்று கொண்டிருந்தோம். பாதிதூரம் சென்றவுடன் ஒரு சந்தின் முதல் வீட்டின் வாசலில் நின்றுகொண்டு, மஞ்சள் துணி கட்டிக்கொண்டு திருப்பதிக்குப் போகிறவர்கள், அந்த வீட்டில் யாசகம் கேட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்களைப் பார்த்தேன்.

ஆபீஸுக்கு விரைந்து செல்லும் பொழுதுங்கூட என் நண்பரிடம் "ஸார், நீங்கள் போய்க் கொண்டே யிருங்கள். நான் அவர்கள் உண்டியில் காலணா போட்டுவிட்டு வருகிறேன்" என்று சொல்லி அந்த வீட்டை நோக்கி ஓடினேன். இரண்டு ஆண்களும், ஒரு ஸ்திரீயும்தான் அங்கு யாசகம் கேட்டுக் கொண்டிருந்தார்கள். ஒருவன் கையில் மட்டும் ஒரு பித்தளைத் தட்டு இருந்தது. அதில் பகவானுடைய திருவடிகளை வெள்ளியில் செய்தவை வைக்கப்பட்டிருந்தன. தட்டில் ஒரு சிறிய பித்தளைச் சொம்பு, அதன் வாய்ப்புறத்தை மஞ்சள் துணியால் கட்டி யிருந்தது. அதில் காசு போட ஒரு துவாரமும் இருந்தது. தட்டில் துளசியும் விபூதியும் இருந்தன.

வேகமாக ஓடிச் சென்ற நான் அந்த உண்டியில் காலணாவைப் போட்டேன். தட்டு வைத்திருந்தவன் "பதினைந்து வருஷமாக மலைக்கு வருகிறேன் என்று சொல்லிக் கொண்டு ஏன் வரவில்லை!" என்று ஆவேசம் வந்ததுபோலக் கேட்டான். நான் திருப்பதிக்குப் போனதே இல்லை என்பது உண்மையாதலால், அவன் சொன்ன வார்த்தைகளைத் தெய்வீக சக்தியால் தான் சொல்லுகிறான் என்று நம்பவேண்டி யிருந்தது. ஆனால் பதில் மட்டும் ஒன்றுமே சொல்லவில்லை. அந்த மனிதன், "நீ அதற்காகப் பயப்பட வேண்டாம். இன்னும் இரண்டு, மூன்று வாரங்களுக்குள் நானே உன்னை மலைக்கு வரவழைத்துக் கொள்கிறேன்; உனக்கு அடுத்த மாசத்தில் உத்தியோகத்தில் உயர்ந்த பதவியைக் கொடுக்கிறேன்; நிறைய ஐசுவரியங்களையும் கொடுக்கிறேன்; உனக்கு இனி ஒரு கஷ்டமும் இராது; சௌகரியங்களே யுண்டாகும்" என்று தெய்வமே சொல்வது போலச் சொல்லிவிட்டு "இன்று சாயங்காலத்திற்குள் என்னுடைய உண்டியில் உன் காணிக்கையாக ஐந்து ரூபாய் போடுவாயா?" என்றும் கேட்டான். நான் போடுகிறேன் என்று சொன்னவுடன் அந்த மனிதன் எனது கைகளைக் கூப்பிச் சுவாமியை நினைத்துக் கொள்ளுமாறு சொன்னான். பிறகு என் வலது கரத்தில் இருந்த தங்க மோதிரத்தைக் கட்டிக் காண்பித்துக் கொண்டே என்னைப் பார்த்து "நான் சத்தியமாக என் குடும்பத்துடன் திருப்பதிக்குப் போகிறேன் உன்னுடைய காணிக்கையாக அணிந்திருக்கும் மோதிரத்தை இந்த உண்டியில் கழற்றிப் போடு; நான் இதைத் திருப்பதியில் பகவானுடைய பாதங்களில் போட்டு விடுகிறேன்" என்று சொன்னான்.

மோதிரத்தைக் கழற்றிப் போடு என்று சொன்னவுடன், எனக்கு என்ன செய்வது என்று தோன்றவில்லை. மோதிரத்தைப் போடவும் மனசு வரவில்லை. போடாமலிருந்தால், பகவான் என்ன தண்டனை கொடுப்பாரோ என்று அச்சம் ஏற்பட்டு விட்டது எனக்கு. மூன்று, நான்கு நிமிஷங்கள் வரையில் ஒன்றுமே சொல்லாமல் யோசித்துக் கொண்டிருந்தேன். இதைக் கவனித்த அந்த மனிதன் "என் இரண்டு கைகளையும் சேர்த்துப் பிடித்துக்கொண்டு சுவாமி அவன் மீது ஆவேசம் வந்துவிட்டது போன்று தன் பற்களை நரநரவென்று கடித்துக் கொண்டு என் கைகளையும் பலமாக உலுக்கிக் கொண்டே, "என்ன யோசிக்கிறாய்! நான் கட்டளையிடும்போது ஏன் இந்தத் தாமதம்! உடனே மோதிரத்தைக் கழற்றி உண்டியில் போடு; ஜம் சீக்கிரம்!......" என்று குதித்துக் கொண்டே ஆரவாரித்தான். எனக்கு ஒன்றுமே புரியவில்லை. எனக்கு மயிர்க் கூச்ச லெடுத்தன. ரோமஞ்சனி உண்டாயின. உடம்பு பூராவும் வியர்த்துக் கொட்டியது. ஒன்றுமே சொல்லத் தெரியவில்லை. பகவானே கேட்டுக் கட்டளையிடும்போது, மறுக்கலாமா என்று உடனே மூக்கால் சவரன் எடையுள்ள அந்த மோதிரத்தைக் கழற்றி நானே உண்டியில், சுவாமியை நினைத்துக் கொண்டே போட்டேன். அவன் ஆவேசமும் தாழ்ந்து விட்டது; தாழ்ந்த குரலுடன் என்னைப் பார்த்து "சுவாமியை நினைத்துக் கும்பிடு; இதை ஒருவரிடமும் சொல்லாதே, போ!" என்றான்.

நானும் வேகமாக ஸ்டேஷனுக்கு ஓடினேன். என் நண்பரைப் பிளாட்பாரத்தில்தான் பார்க்க முடிந்தது. "ஏன் இவ்வளவு நேரம்!" என்று கேட்ட அவரிடம், நடந்தவற்றைச் சொன்னேன். "அதெல்லாம் சுத்தப் பொய், உன்னை அவன் ஏமாற்றி யிருக்கிறான்" என்று அழைத்துக் கொண்டு வந்தார். பத்து நிமிஷங்களுக்குள், மேலே சொன்ன சம்பவம் நடந்த இடத்தை அடைந்தோம். என்ன ஆச்சரியம்! மஞ்சள் துணி கட்டியவர்களைக் காணோம்.

அங்கு விசாரித்ததில், அந்த மஞ்சள் துணி கட்டியவர்கள், மங்கேஸ்வரம் ரோட் வழியாகப் போனதாகத் தெரிந்தது. சிலர் சைக்கிளில் அங்கும் இங்கும் தேடிச் சென்றார்கள். நானும் நண்பரும் அவர்களைத் தேடினோம். அவர்களைக் காணவே யில்லை; உடனே தியாகராயநகர் போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்று அவர்களைப் பற்றி ஒரு புகார் எழுதித் தந்தோம்.

"என்னை ஏமாற்றியபடி தெய்வத்தை ஏமாற்ற முடியாது; நான் கொடுத்தது என்னமோ வெங்கடாசலபதி காணிக்கை தானே!" என்று மனதைத் திருப்தி படுத்திக்கொண்டேன். இருந்தாலும் என்னைப்போல் யாரும் ஏமாற வேண்டாம்.

மேற்கு மாம்பலம்
30—3—53

ஆர். வரதன் பி. ஏ.

★

சேலம் டவுன் முனிசிபல் எல்லைக்கு உட்பட்ட பிரதேசத்தில் கால் குதிரை வேகத்திலிருந்து ஒரு குதிரை வேகத்துக்குக் குறைவாக உள்ள மின்சார மோட்டார் வைத்துப் பட்டு நூலுக்குப் புரி போடுதல், பாவாடை நாடா, விளக்கு வர்த்தி முதலியவைகள் நெய்தல், வெள்ளிக் கம்பி இழுத்தல் போன்ற குடிசைத் தொழில்கள் நடைபெற்று வந்தன.

சென்ற சில மாதங்களாக முனிஸிபாலிடி மேலே குறிப்பிட்ட தொழில்களை மோட்டார் வைத்து நடத்தக் கூடாதென்று தடை செய்து விட்டது.

காரணம் : தொழில் நடக்கும் கட்டிடத்தைத் திருத்தி அமைக்க வேண்டுமாம்.

பட்டு நூல் புரி போடுகின்ற தொழிலுக்கும், பாவாடை நாடா நெய்கின்ற தொழிலுக்கும் ஆகும் மொத்த மூலதனமே ரூ. 1,000த்துக்கும் குறைவானது. ஆனால் சேலம் முனிசிபாலிடியின் சட்டப்படி கட்டிடத்தைத் திருத்திக் கட்டவோ ரூ. 3,000த்துக்குமேல் வேண்டியதாய் இருக்கிறது. இந்த விசித்திரமான சட்டத்தை எண்ணும்போது 'சுண்டைக்காய் கால் பணம்; அதை சுமக்கின்ற கூலி முக்கால் பணம்' என்ற பழமொழிதான் நினைவுக்கு வந்து வேதனை செய்கிறது.

இரண்டாவதாக மேற் கண்ட குடிசைத் தொழில்களுக்கு உபயோகமாகின்ற மோட்டார், வீட்டு மேஜைமீது சுழலும் மின்சார விசிறியின் தன்மையுடையது. மாவுமில், லேத் பட்டரை, பனியன் கம்பெனி, ஓர்க்ஷாப் போன்ற தொழிற் சாலைகளில் ஓடுகின்ற மின்சார மோட்டார்களைப் போன்ற அபாயம் உடையவையல்ல.

இந்தச் சிறிய குதிரை வேகமுள்ள மின்சார மோட்டார் வைத்துக் குடிசைத் தொழிலை நடத்துவதற்குக் கட்டிடத்தைத் திருத்தி அமைக்க வேண்டிய அவசியமே இல்லை.

கோவை, திருச்சி, மதுரை, வேலூர் போன்ற முனிசிபாலிடிகளெல்லாம் சிறிய குதிரை வேகமுள்ள மோட்டார் வைத்துத் தொழில் நடத்தத் தாராளமாக லைசன்ஸ் கொடுத்து வரும்பொழுது சேலம் முனிசிபாலிடி மட்டும் குடிசைத் தொழில்களைச் சிறிய சிங்கிள் பேஸ் மோட்டார் வைத்து நடத்த லைசன்ஸ் வழங்காமல் தடைப்படுத்துவதன் காரணத்தைப் புரிந்து கொள்ள முடியவில்லை.

குடிசைத் தொழில்களை நடைபெறாமல் தடைபடுத்துவது சேலம் முனிசிபல் அதிகாரிக்குப் பொழுது போக்காகவும் வேடிக்கையாகவும் விளையாட்டாகவும் இருக்கலாம்.

ஆனால் தொழில் செய்ய முடியாமல் தடைப் படுத்தப்பட்ட குடும்பத்தினருக்கு வேதனையாகவும் விசாரமாகவும் வருத்தமாகவும் இருப்பதோடல்லாமல், சேலம் நகர சபையின் எல்லையில் வாழும் மக்களை அங்கு வாழ முடியாதபடி விரட்டியடிக்கிறது என்பதை மிகத் தாழ்மையுடன் தெரியப்படுத்திக் கொள்கிறேன்.

நமது சர்க்காரின் ஐந்து ஆண்டுத் திட்டத்தில் குடிசைத் தொழில்களைக் காத்து வளர்க்க வேண்டுமென்பது முக்கியமானது.

நமது அருமைத் தலைவர் ராஜாஜி, நேரு போன்றவர்களின் பூரண ஆதரவும் குடிசைத் தொழில்களுக்கு உண்டு என்பதற்கு ஆதாரமாக அவர்கள் பேசி வரும் பல கூட்டங்களில் 'குடிசைத் தொழில்களை' வளர்க்க வேண்டுமென்று கூறி யிருப்பதையும் நமது சேலம் நகரசபையாருக்குப் பணிவுடன் நினைவு படுத்துகிறேன்.

சேலம்
6—4—53. எம். பி. மீனாட்சி சுந்தரம்

# பெரிய முயற்சி

பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் என்று கேள்விப் பட்டிருக்கிறீர்களா? 'அழகிய மணவாளதாஸர்' என்றும் பெயருண்டு. சுமார் எழுநூறு வருஷங்களுக்கு முன்பு தமிழ் நாட்டில் வாழ்ந்தவர். 'திருவரங்கக் கலம்பகம்' முதலிய அஷ்டப் பிரபந்தங்களை இயற்றிய வைஷ்ணவப் பெரியார்.

திருவரங்க க்ஷேத்திரத்தில் அறிதுயில் அமர்ந்திருக்கும் ஸ்ரீ ரங்கநாதரின் தோள்கள் ஒரு சமயம் பூரித்து உயர்ந்தன என்று பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் கூறுகிறார். அதன் காரணம் இன்னதென்பதையும் 'அழகிய மணவாள தாஸ' ராகிய அவரே தெரியப் படுத்துகிறார். கேளுங்கள் :

அருமறைதுணிந்த பொருள்முடிவை இன்சொல்
அமுதொழுகின்ற தமிழினில்விளம்பி
அருளியசடகோபர் சொல்பெற் றுயர்ந்தன
அரவணைவிரும்பி அறிதுயில் அமர்ந்த
அணிதிருவரங்கர் மணிநிகழ் புருந்தர்
அழகியமணவாளர் கொற்றப் புயங்களே!

அதாவது, சடகோபர் என்னும் நம்மாழ்வாரின் அமுதொழுகின்ற இனிய தமிழ்ச் சொற்களைக் கேட்ட ஆனந்தத்தில் திருவரங்கத்தில் பள்ளி கொண்டிருக்கும் ஸ்ரீ ரங்கநாதரின் புஜங்கள் பூரித்து உயர்ந்தனவாம்!

தமிழ் மொழியின் இனிமையை இப்படியெல்லாம் நமது முன்னோர்கள் போற்றிப் புகழ்ந்தார்கள்.

"தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்"

என்று சைவப் பெரியார் அப்பர் பெருமான் கூறி, தமிழுக்கும் இசைக்கும் உள்ள பொருத்தத்தை ஆணி அடித்துக் கூறினார்.

அத்தகைய அமுதொழுகின்ற இன்பத் தமிழ் மொழியானது சங்கீதத்துக்குப் பொருத்தமற்றது என்று இக்காலத்தில் சிலர் சொல்லுகிறார்கள்.

இதையெல்லாம் பார்த்துக்கொண்டு தாய் மொழியில் அன்புள்ள தமிழ் மக்கள் சும்மா இருக்க முடியுமா? அவர்களுக்கு ஆத்திரம் உண்டாகத்தானே செய்யும். ஆத்திரம் காரியமாக உருக் கொள்ள வேண்டும். தமிழோடு இசையை வளர்ப்பதற்கான பெரு முயற்சி நடக்க வேண்டும்.


புண்படுத்தும்
உஷ்ணத்தின்
தொல்லையை ஒழிக்க
COLGATE
PRICKLY HEAT
POWDER
கால்கேட் பிரிக்லி ஹீட் பவுடரை உபயோகியுங்கள் அதில் சேர்ந்துள்ள அற்புதமான சக்தி வாய்ந்த ஒரு பொருள்
1. புண்படுத்தும் உஷ்ணத்தால் அரிச்சல் ஏற்படாமல் தடுக்கிறது; ஏற்பட்டாலும் உடனே குணப்படுத்துகிறது
2. சருமத்திற்கு இதமும் குளிர்ச்சியும் அளிக்கிறது
3. குழந்தைகள், பேபிகளுக்குக்கூட பத்திரமானது, பயன் தருவது!
கால்கேட்
பிரிக்லி ஹீட் பவுடர்
இன்றே ஒரு டப்பா வாங்கி நாளையே இதம் பெறுக!


கொடிய இருமல்
'பெப்ஸ் அருந்துங்கள்'
என்று டாக்டர்
சொல்லுகிறார்
இருமல், ஜலதோஷம், தொண்டைப்புண் கம்மல் இவை போன்றவை, மற்றும் தொண்டை மார்பு, சம்பந்தமான நோய்கள் வளரும்படி விட்டுவைக்காதீர்கள். அவை உங்கள் இருதயத்திற்கும் சுவாசகோசங்களுக்கும் அபாயகரமான தொல்லையைக் கொடுக்கின்றன. பெப்ஸ் உபயோகித்து உடனே குணம் பெற முயலுங்கள். நீங்கள் பெப்ஸைச் சப்பிடும்போது நோய்தீர்க்கும் மருந்துச்சத்துள்ள ஜீவரஸங்கள் உங்கள் மார்புக்குள்ளும், சுவாச கோசங்களுக்கும் போய்ச்சேருகின்றன. பெப்ஸ் இருமலை நிறுத்தி, புண்ணைக்குறைத்து, எரிச்சலைத்தணியவைக்கிறது. அபாயமளிக்கும் விஷக் கிருமிகளை அழித்துவருகிறது. டாக்டர்கள் பெப்ஸைச் சிபார்சு செய்கிறார்கள். இன்சுவையளிக்கும் தொண்டை, மார்பு மாத்திரை அது.
பெப்ஸ் நன்கு அருந்துங்கள்.
PEPS
தொண்டை, மார்பு வலி, நிவாரண மாத்திரைகள்
மதராஸிற்கு ஸோல் ஏஜண்டுகள்: மெஸர்ஸ். தாதா & கம்பெனி, மதராஸ்




மாலை நேரம். ஆதவன் மலை வாயிலில் விழ முயற்சித்துக் கொண்டிருந்தான். அந்தக் குக் கிராமத்தின் நடுநாயகமாக விளங்கிய ஒரு சிறு கோயிலின்மேல், மாலை வெய்யில் பட்டு அந்தச் சின்னஞ் சிறு கோயில் தங்க மயமாகக் காட்சியளித்தது.

உடைந்திருந்த செங்கற்களின் இடைவெளியிலே சூரிய வெளிச்சம் பட்டு, கோயிலுக்குள்ளும் ஒரு சிறிது வெளிச்சம் கொடுத்தது.

கோயிலுக்குப் போகும் படிகளில், மெதுவாக முன்னேற மனமின்றி, ஏறிக் கொண்டிருந்தான் பாலு. அவனுடைய உள்ளம், அவன் ஒவ்வொரு அடி எடுத்து வைக்கும் போதும், "இங்கேதான், இங்கே தான்" என்று அடித்துக் கொண்டது.

கோயிலில் நிலவியிருந்த மௌனம் அவனை நோக்கி 'ஆகாகா' வென்று சிரித்தது.

பூட்டப்படாதிருந்த கோயிற் கதவை பாலு சிறிது தூரத்திலிருந்தே கவனித்தான். தன்னைப் போலவே கடவுளும் அனாதையாக, யாராலும் காப்பாற்றப்படாது கைவிடப் பட்டதாக அவனுக்குத் தோன்றியது.

"குழந்தையும் தெய்வமும் கொண்டாடு கின்ற இடத்தில்!"

காதுகளைப் பொத்திக் கொண்டான் பாலு. பிரமை! இதே வார்த்தைகளைத்தான் அன்று சாவித்திரி சொன்னாள்.

சாவித்திரியும், பாலுவும் ஒருவரை யொருவர் எவ்வளவு நேசித்தனர்!

"இந்தக் கோயில் அன்றும் கவனிப்பாரின்றிக் கிடந்தது. இன்றும் அப்படித்தான். இருந்தும், அன்று சாவித்திரி என்னுடன் இருந்தபோது, நான் இங்கு பூரணத்துவத்தைக் கண்டேன். இன்றோ, சிறு குறைவு கூட, பிரம்மாண்ட மானதாக, வின்னை யளாவி வெறுமை காட்டுகிறது" என்று எண்ணி வேதனைப்பட்டான் பாலு.

கோயிற் கதவு குறுக்கிட்ட பிறகுதான், கதவைத் திறந்தால்தான் கோயிலுக்குள் செல்ல முடியுமென்ற உணர்வு பிறந்தது. சிதைந்து போயிருந்த கதவைத் தள்ளியவுடன், அது 'கிரீச்' சென்று, அவனுடைய இதயத்தைக் கீறிக் கொண்டே திறந்து கொண்டது. திறந்தவுடன், இருட்டோரங்களில் பதுங்கிக் கிடந்த வௌவால்கள், தங்கள் சுதந்திரம் பறிபோவதைப் பலமாக ஆட்சேபித்து, குறுக்கும், நெடுக்கும்பறந்தன.

கடவுள் அப்படியே இருந்தார், அணுவளவும் மாறுதலின்றி. அந்த இருட்டில் தன்னை யாரோ கண்காணிப்பது போல அவனுக்குப் பட்டது. அந்த மூல விக்கிரகம், எவ்வளவு அமைதியாக இருந்தது! 'துன்பத்திலும், இன்பத்திலும், என்னைப் போல சலனமற்று இரு' என்று அது அவனுக்கு எடுத்துச் சொல்லியது. 'அன்றும் மோன தாளங்களால் என் அமைதி குலையவில்லை. இன்றும் என் அமைதி குலையவில்லை' என்று அசரீரி சொல்வதுபோல உள்ளுக்குள் ஏதோ ஒன்று பாலுவுடன் பேசிற்று.

"இங்கேதான்!"

மெதுவாக எழுந்த இந்தக்குரல், கோயில் முழுவதும் வியாபித்தது.

இங்கேதான் பாலுவும், சாவித்திரியும் ஆயிரம் தடவை வந்திருக்கிருர்கள். சாவித்திரியின் அத்திம்பேர் ஏதோ ஒரு காலத்தில் கோயில் பூஜை செய்து வந்தார். பூஜை சமயத்தில் சாவித்திரியைத் தவருது கோயிலில் காணலாம். சாவித்திரியின் பேரிலிருந்த காதல், பாலுவையும் பூஜை சமயத்தில், கோயிலுக்கு இழுத்துச் செல்லும்.

ஆராதனை சமயத்தில், மணியடிப்பதில் இருவருக்கும் போட்டி ஏற்படும். ஒரு பெரிய தகடு, கனமானது தொங்கவிடப்பட்டிருந்தது. அதன் மேல் ஒரு சுத்தி செருகப்பட்டிருக்கும். சுத்தியை எடுத்துப் பலமாக அடித்தால், 'டாண்' என்ற கம்பீரமான நாதம் பிறக்கும். அந்த நாதம் கேட்பவர் எல்லாரையும் மெய்மறக்கச் செய்துவிடும்.

பாலு அந்த மணியைப் பார்த்தான். அது பரிதாபமாகத் தென்பட்டது. அதோ, அதே சுத்தி. மணியடித்து எவ்வளவு நாட்களாயின!

ஒரு தடவை, சாவித்திரி அவசரத்தில் சுத்தியை 'டணர்' என்று அவன் பின்னல் ஓடிவந்த பாலுவின் கால் கட்டை விரல் மேலேயே போட்டு விட்டாள். அவன் அப்பொழுது 'ஐயோ' என்று போட்ட சத்தம் இப்பொழுது கேட்டது! அவனுக்கு அடிபட்டு விட்டது என்பதை யறிந்து அவள் பட்ட வருத்தம், அடடா!......

கோயிலுக்குள் இருந்த மோனம் ஒரு ஜீவ ஸ்ருதியை எழுப்பிற்று. அந்த ஸ்ருதியிலே சோக ராகங்கள் அவன் மனத்தில் அலை அலையாக எழுந்து விளையாடிப் பரவின.

"சாவித்திரி!"

சாவித்திரியின் நினைவு கனத்தது. பாலுவின் கண்களைப் பாசமென்னும் திரை மறைத்தது. அவன் கண்கள் நீரைப் பொழிந்தன.

"எங்கு சென்றாலும் உன் நினைவிலேயே வாழ்வேன் நான்" என்று பாலு ஒரு நாள் சாவித்திரியிடம் சொன்னன். "இதெல்லாம் வாய்ப் பேச்சு. அனுபவத்தில் சாத்தியமாகாது. நீ வேண்டுமானால் பார்த்துக் கொண்டே இரு!" என்றாள் சாவித்திரி.

"பார்த்துக் கொண்டேதான் இருக்கப் போகிறேன். நான் கல்கத்தா, டில்லி, சிம்லா எங்கு போனாலும் என் மனசு மட்டும் இங்கேதானே இருக்கும்!"

"டில்லி, சிம்லாவே வேண்டாம். போன வாரம் ஞாயிற்றுக்கிழமை சீட்டாடும்போது மணி கூப்பிட்டானே, வந்தாயா?"

"வந்து......"

"அதுதான் விஷயம். இது சகஜமாச்சே பாலு. நான் உன்னைப் போல, பட்டணத்திலே படித்து உத்தியோகம் பண்ணவிட்டாலும், எனக்கும் உலகம் கொஞ்சம் தெரியும். என்ன இருந்தாலும், நேரிலே இருந்து பேசும் மாதிரியோ, பழகும் மாதிரியோ, வெளியிடங்களில் இருக்கும்போது பழக முடியாது."

அனுபவத்திலே பட்டிக்காட்டுப் பெண் சாவித்திரி சொன்ன வார்த்தைகள் இவை.

பிறகு ஒரு நாள் அவன் உண்மையாகவே மூட்டை முடிச்சுகளைக் கட்ட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. டிரங்குப் பெட்டியின் மூடிக்கு உள் பாகத்தில், விதவிதமான கோணங்களில் சாவித்திரியின் படத்தை வைத்துப் பார்த்துக் கொண்டிருந்தான். 'களுக்' கென்ற சிரிப்பொலி கேட்டது. அவன் எடுத்த படம் அது. நன்றாக அமைந்திருந்தது. அதைக் கண்டு யார் சிரிக்கிறார்கள்? திரும்பினன். சாவித்திரி இடுப்பில் கை வைத்த வண்ணம் நின்று கொண்டிருந்தாள். அவள் கண்களின் குறுகுறுப்பைக் கவனித்துக் கொண்டிருந்த அவனுக்குத் தொண்டையில் ஏதோ ஒன்று வந்து அடைத்துக் கொண்டது.

"நான்......நான்......நாளைக்கு ஊருக்குப் போகிறேன், சாவித்திரி!"

"உண்மையாகவா?"

அவளுடைய கரு நீலக் கண்களே அவனைக் கேள்வி கேட்டன.

"ஆமாம்."

அவள் அவனை "எங்கே?" என்று கேட்கவில்லை. ஏன்? ஒரு வார்த்தைகூட அவள் வாயிலிருந்து வெளிவரவில்லை. மலர்ந்திருந்த அவள் முகம் குவிந்தது. உதட்டைக் கடித்துக் கொண்டாள். கண்களிலே நீர்த் துளிகள் தோன்றின. புடவைத் தலைப்பால் வாயை மூடிக் கொண்டு திரும்பி ஓடினன்.

அடேயப்பா! இவ்வளவு துயரமா?

பாலு பெட்டியை மூடும்பொழுது பக்கத்து வீட்டில் சாவித்திரி விம்மும் குரல் அவன் காதில் மோதி, அவனைத் தூரத்தி யடித்தது.

அன்று அவ்வளவு அனுபவஸ்தர் மாதிரிப் பேசிய சாவித்திரி, உண்மையாக சோதனை நேர்ந்தபொழுது தன் பளிங்கு உள்ளத்தைக் காட்டி, அதில் பிரிவு செலுத்திய துயரத்தையும் காட்டி விட்டாள்.

சாவித்திரியின் அத்திம்பேரிடம் அவன் விடை பெற்றுக் கொள்ள வரும்பொழுது அவர் சொன்னார், "என்னமோ, தாயில்லாத பெண், உன்னைத்தான் தெய்வமாக எண்ணிக் கொண்டிருக்கிறாள். இவ்வளவு நாள் அவளுடைய நம்பிக்கையைக் காப்பாற்றியது போலவே அவள் கழுத்தில் உன் கையால் ஒரு தாலியையும் கட்டிவிடு."

பாலுவும் இதைத்தான் நினைத்தான். அக்குக் கிராமத்தில் 'ஆடிக்கொருதரம், அமாவாசைக் கொருதரம்' வரும் 'பஸ்'ஸில் அவன் ஏறித் தன்னுடைய பிரயாணத்தைத் தொடங்கும்பொழுது, அவன் மனக் கண்ணில் சாவித்திரியின் முகம் தோன்றியது. செக்கச் செவேலென்று சிவந்த முகத்தில், பளிச்சிட்ட இரண்டு கண்கள். அக் கண்களில் எவ்வளவு ஆழமான கருமை! இதென்ன அக் கண்களில் நீர் சேர்கிறதே!

பஸ், தன் மேலேயே போவதுபோல பாலுவுக்குத் தோன்றியது.

* * *

காலம் பாலுவையும், சாவித்திரியையும் பிரித்தது. பாலு, வடக்கே, பிரயாணமானான். அப்பொழுது அவன் சாவித்திரிக்கு எழுதிய கடிதத்தில், "அன்பே! சந்தர்ப்பம், என்னையும் உன்னையும் பிரித்து விட்டபோதிலும், என்னுடைய உள்ளத்திலே உன் உருவம் செதுக்கிய நினைவு என்றும் பிரியாது, அழியாது" என்று. அதற்குச் சாவித்திரி பக்கத்து வீட்டுச் சிறுவன் மூலம் எழுதிய பதில் "உங்கள் கடிதத்தின் இலக்கியத்தைப் புரிந்து கொள்ளும் சக்தி எனக்கில்லாது போனாலும் உங்கள் அன்பு என்மீது சற்றும் குறையவில்லை என்பதை அறிந்து சந்தோஷமடைந்தேன். அபாக்கியவதி......" இந்தக் கடிதம் பாலுவைத் திக்குமுக்காடச் செய்தது. சாவித்திரியின் போட்டோவுக்குப் பின்னால் இந்தக் கடிதம் செருகப்பட்டது.



தஞ்சை அரண்மனை சங்கீத மகாலில் பிப்ரவரி மாதம் தஞ்சை ஜில்லா கலெக்டர் ஸ்ரீ டி. கே. பழனியப்பன் அவர்கள் முன்னிலையில் போழகுடி சகோதரர்களான ஸ்ரீ பி. வி. கணேசன், ஸ்ரீ ராமய்யா ஆகிய இருவரும் சிறப்பாகச் சங்கீதக் கச்சேரி செய்தார்கள்.

ஒரு நாள் பாலுவுக்கு அவன் தந்தையிடமிருந்து கடிதம் வந்தது. "சாவித்திரியின் அத்திம்பேருக்கு, அந்தக் கிராமத்தில் வரும்படி போதவில்லையென்று அவர்கள் எல்லோரும் அவ்வூரையே விட்டுப் போய்விட்டார்கள். இனி, ஏழைப் பெண் சாவித்திரியை மறந்து விடுதல் நலம். உன் நலனைக் கருதித்தான் சொல்லுகிறேன். இனி அவள் அதிக காலம் மணம் செய்து கொள்ளாமல் வாழ முடியாது. நீயோ, இன்னும் இரண்டு வருடங்களுக்குக் குறையாது அங்கேயே இருக்க நேரிடும் என்று எழுதியிருக்கிறாய்..."

என்ன சர்வ சாதாரணமாக எழுதியிருக்கிறார்? சாவித்திரிக்குத்தான் தன் உள்ளத்தில் இடம் என்று தெரிந்தும், அவனுடைய தந்தையே 'புண்ணில் வேலைப் பாய்ச்சுகிறாரே!' காரசாரமாக ஒரு கடிதம் எழுத வேண்டுமென்ற அவா பிறந்தது. "ஒன்று சாவித்திரி, அல்லது மரணம் வரை பிரம்மச்சாரி!" என்ற வாசகம் பன்முறை அவனுள் பிறந்து ரீங்கார மிட்டது. ஆனால் எண்ணத்தை வார்த்தைகளாகக் கொட்டும் தருணத்திலே ஏதோ தடைப்படுத்தப் பட்டது.

சாவித்திரியினுடைய விலாசத்தைத் தெரிவிக்கும்படி தந்தைக்கு ஒரு கடிதம் எழுதினான் பாலு. அதற்குப் பதில் வரவில்லை. "நான் இவ்வளவு தூரம் இருப்பதை வைத்துக் கொண்டு என்னை ஒரு பணக்காரப் பெண்ணுக்கு மணம் செய்து வைக்க ஆசைப்படுகிறீர்களா? நீங்களே ஒரு பணப் பொம்மையைக் கட்டிக்கொண்டு அழுங்கள். எனக்குக் குணக்குன்றாகிய சாவித்திரிதான் வேண்டும்" என்று மனத்துக்குள் கருவிக் கொண்டான்.

இருளின் ஆழ்ந்த அமைதியிலே, தூக்கம் வராது தவித்துக் கொண்டிருக்கும் நேரங்களில் பாலுவின் மனக்கண்ணிலே ஒரு கோயில் தெரியும்.

ஒரு பாழடைந்த கோயில்.

பகல் உச்சி ஒரு விளக்குத் தெரிகிறது, கோயிலின் இருள் நிறைந்த கர்ப்பகிருஹத்திலே.

அதோ! சாவித்திரியின் அத்திம்பேர். ஆராதனை மணி அடிக்கிறது.

இதோ, சாவித்திரி, 'மணி அடிப்போமா? யார் முதலில் என்று பார்ப்போம்!' 'டணார்' என்ற இன்ப ஒலி எழுகிறது.

பாலுவுக்கு உடனே சாவித்திரியிடம் பறந்து செல்ல வேண்டுமென்ற ஆவல் எழுந்து அவனைச் சித்திரவதை செய்யும்.

அவனுடைய வேலையி லிருந்து ஓய்வு கிடைத்தவுடன் பறந்தோடி வந்தான். ஆனால் இடையிலே காலம் அவனை விட வேக

மாகப் பறந்திருந்தது. அவன் சாவித்திரியைப் பிரிந்து இரண்டு வருடங்களாயிருந்தன. சாவித்திரி ஊரை விட்டுப் போய் விட்டதாக, அவனுடைய தந்தை கடிதம் எழுதி ஒரு வருடம் ஆகியிருந்தது.

தன் சொந்த ஊருக்கு வந்த பாலுவுக்குச் சாவித்திரியைப் பற்றிய தகவலே சரியாகக் கிடைக்கவில்லை. "நீ போகும் பொழுதே அவளை அழைத்துக் கொண்டு போயிருக்க வேண்டும்" என்றது மனச்சாட்சி. "இந்த மாதிரி அவள் காணாமல் போவாள் என்று தெரிந்திருந்தால் நிச்சயம் அழைத்துக் கொண்டே போயிருப்பேனே" என்று நொந்து கொண்டான். கடந்த காலத்தைப் பற்றி நினைப்பதால், கடந்த காலத்தில் மாறுதல் நிகழுமா?

"உன்னுடைய முடிவுதான் என்ன?" தந்தையின் ஆத்திரம் நிறைந்த கேள்வி.

"சாவித்திரி!" என்று அவன் ஓலமிட்டான்.

"அவளுக்குக் கல்யாணம் ஆகியிருந்தால்......" என்று கர்ஜனை செய்தார் தகப்பனார்.

"அதை நினைக்கவும் நடுக்கமாயிருக்கிறது. என்னுடைய சாவித்திரி அன்னியனுக்கு வாழ்க்கைப் பட்டாள் என்பதை அறிந்து விட்டால், உடனே சன்னியாசம் வாங்கிக் கொள்வேன்" என்றான் பாலு.

"நீ சன்னியாசம் வாங்கிக் கொள்ளப்போகிறாயா? என்று ஏமாற்றத்துடன் கேட்டார். அத்துடன் அவர்கள் பேச்சு நின்று விட்டது.

* * *

அவனுடைய தீர்மானம் வீட்டைவெறும் வெளியாக்கியது. பரந்த பெரிய பங்களாவில், தனியாக அவ்விருவரும் வசித்தனர். சாவித்திரி அவ் வீட்டில் ராணியாக வாழ்வதை அவன் மனக் கண்ணால் பார்த்தான். ஆனால், அக்காட்சி, மன உலகத்துடன், கற்பனை வரைக்கும் நின்றது.

"மறுபடியும் எங்காவது தூர தேசம் போய் வேலை பார்த்தால், வேதனை குறையும்" என்று நினைத்தான் பாலு.

மறுபடியும் தான் வேலை செய்த டில்லி காரியாலயத்துக்கு எழுதினான். "ஏற்றுக் கொள்ளத் தடையில்லை" யென்று பதில் வந்தது.

தான் மறுபடி டில்லி போகப் போவதாகச் சொன்னவுடன் பாலுவின் தந்தை முகம் விகாரமான மாறுதலடைந்தது. "கடைசி காலத்திலாவது உன்னுடன் சந்தோஷமாக இருக்க வேண்டுமென்று நினைத்தேன். நீயே என்னை உன் எதிரி என்று நினைக்கிறாய். சாவித்திரியை நானே கண்டு பிடித்துக் கொடுக்கிறேன். என்னைப் பிரிந்து போய் விடாதே பாலு, உனக்குப் புண்ணியமுண்டு" என்றார் தந்தை.

பாலு 'அழுதே' விட்டான்!

சாவித்திரியின் நினைவிலேயே அழுந்திக் கிடந்த பாலு, சாவித்திரியைத் தேடுவதில் மும்முரமாகப் பிரயத்தனங்கள் செய்தான்.



"அசோகா பாக்கு வேண்டும். இந்த ஊரில் ஒரே ஒரு கடைதான் இருக்கிறது. நேரே போய், கிழ மேற்காகத் திரும்பி... வேண்டாம் ... வேண்டாம் ... மேற்கே போய்...அந்த வேலியைத் தாண்டி... வேண்டாம்...வேண்டாம். இங்கிருந்து கடைக்குப் போக வழி ஒன்றும் இல்லை. அதனாலே, நானே கொஞ்சம் அசோகா பாக்கு தருகிறேன். அதைப் போட்டுக் கொண்டு போங்கள்."

ஒரு வருட காலத்துக்கு முன், கிராமத்தை விட்டுப் பிரிந்த சாவித்திரி—ஏழைப் பெண் சாவித்திரி — தபாலாபீஸிலா விலாசம் கொடுத்துவிட்டுப் போயிருப்பாள்?

இந்த சமயத்தில் ஒரு நாள், பாலுவின் தந்தை அவனை அனாதையாகத் தவிக்க விட்டுப் போய் விட்டார்.

தந்தையின் பிரிவு பாலுவின் உறுதிக்கு ஆட்டம் கொடுத்தது. நிறைய சொத்துக்கள் இருந்தன. அவற்றை நிர்வகிக்கவாவது, ஒரு 'அவள்' வேண்டுமே!

"இவ்வளவு பணத்தையும் அவர் எடுத்துக் கொண்டு போயிருக்கக் கூடாதா?" என்று எண்ணி வேதனைப் பட்டான் பாலு.

ஒரு யோசனை பிறந்தது.

"நானும் அவளும் விளையாடிய அக் கோயிலைப் புதுப்பிக்கப் போகிறேன். அவள் நினைவுக் கறிகுறியாக."

எண்ணம் பிறந்தது. செயலாக்கத் துணிவும் பிறந்தது. தோளில் ஒரு துண்டை மாட்டிக் கொண்டு அந்தக் கிராமத்தை நோக்கிப் பறந்தான்.

இரண்டு வருடங்களிலே அந்தக் குக்கிராமம் எந்த மாறுதலும் அடையவில்லை. சாவித்திரி போய் விட்டதால், ஊருக்கு ஒரு குறையும், வரவில்லை. நிறைவும் வரவில்லை. வழக்கம் போலவே ஊர் அழுது வடிந்து கொண்டுதான் இருந்தது.

பஸ்ஸிலிருந்து ஊருக்குப் பக்கம் இறங்கியவுடனே கோயில் கோபுரம், "வா" வென்றழைத்தது. கோயிலை நோக்கி நடந்தான்.

* * *

நினைவுகள். எல்லாம் நினைவுகள். மனத்தில் தேங்கிக் கிடந்தன. அந்த நாட்கள், சாவித்திரியும் தானும் விளையாடின நாட்கள் பறந்தோடிப் போயின. காலம் பறந்தது.

மௌனம், எங்கும் மௌனம்.

உலகம் அவனுக்கெதிராக, சாவித்திரியை எங்கோ வைத்துப் பூட்டி. அவனை அனாதையாக விட்டு விட்டது.

இருட்டி விட்டது.

கோயிலிலிருந்து தள்ளாடிக் கொண்டு வெளியே வந்தான் பாலு. தன் பணத்துக்காகவும், அந்தஸ்துக்காகவும், தன்னைக் கும்பிடப் போகும், ஊரில் காலடி எடுத்து வைத்தான். 'புது ஐயா' வந்த விஷயம் அநேகம் பேருக்குத் தெரிந்திருக்கவில்லை. தான் தங்கியிருந்த அறைக்குப் போகும் பொழுது, சாவித்திரி வசித்த வீடு அவனுடைய கவனத்தைப் பற்றி இழுத்தது.

கதவு பூட்டப்பட்டிருந்தது.

தான் வந்ததை அறிந்து தனக்கு மரியாதை செலுத்தவந்த ஊர் மணியக்காரரிடம் சுருக்கமாக இரண்டொரு வார்த்தைகளில் பதில் சொல்லிவிட்டு, சாவித்திரியைப் பற்றிக் கேட்டான்.

"சாவித்திரியின் அத்திம்பேர் எங்கோ ஒரு ஹோட்டலில் வேலை செய்கிறானாம், ஊர் பேர் வந்து......"

அந்த ஊரின் பெயரைத் தவிர மற்ற விஷயங்களை மறந்து விட்டான் பாலு. அந்த ஊருக்கு அடுத்த நாளே கிளம்பப் போவதாக கிராமத்து மணியக்காரரிடம் அறிவித்து விட்டுச் சென்றான்.

என்றும் போல அன்றும் தூக்கம் வரவில்லை. சாவித்திரியைக் காணும் வரை தூக்கம் ஏது. சாப்பாடு ஏது? அதுவும் அவன் இருக்குமிடம் தெரிந்த பிறகு? இன்று இரண்டு வருஷ இடைக்காலத்திற்குப் பின்னர் அவனுடைய சாவித்திரியை அவன் காணப் போகிறான்!

உள்ளம் ஆனந்த நர்த்தனமிட்டது. மனத்திரையில் சாவித்திரியுடன் நட்புக் கொண்டதுமுதல், அவனுடைய தந்தை இறந்தது வரை பற்பல காட்சிகள் தோன்றின.

"இருக்கும் வரைதான் உறவு. மறைவில் உறவு குறைந்து விடும்" என்று சாவித்திரி ஒரு நாள் உபதேசித்தாளே, அவளுக்கு இப்பொழுது, அவனுடைய அன்பு அணுவளவும் குறையவில்லை என்பதை நிரூபிக்க வேண்டும். அவளை, அரண்மனை போன்ற பங்களாவுக்கு அரசியாக்க வேண்டும். அவளுடைய மலர் போன்ற இருதயம் மலர்வதைக் கண்டு தன் அகமும் மலர வேண்டும்!

கண்களில் ஆனந்த பாஷ்பம் பொங்க, அவன் சாவித்திரி யிருப்பதாகச் சொல்லப்பட்ட ஊரில் இறங்கினான்.

இன்னும் சில நிமிஷங்களில் அவர்கள் சந்தித்துக் கொள்வார்கள்.

பாலு. மணியக்காரர் எழுதிக் கொடுத்த விலாசத்தைத் தேடிக் கொண்டு போனான்.

ஒரு சிறிய வீடு. மிகச் சிறிய வீடு. குடிசை யென்றே சொல்லலாம். கதவு வெறுமனே சாத்தப்பட்டிருந்தது.

"இங்கேயும் வழக்கம் போல ஏமாற்றி விடாதே" என்று எண்ணிக் கொண்டே, "ஐயா!" என்று கூப்பிட்டான்.

ஒரு வைதிகப் பிராமணர் வெளியே வந்தார். சாவித்திரியின் அத்திம்பேர்!

"ஓ!—யாரது! நீயா? வா, வா...ஆமாம், இவ்வளவு நாட்கள் என்ன செய்தாய்? அடியே இங்கே பாரு,—"

சாவித்திரி தான் வருகிறாளாக்கும் என்று நினைத்தான். வந்தது சாவித்திரியின் அக்கா.

"சாவித்திரி எங்கே?" என்று மென்று விழுங்கினான் அவன்.

"சாவித்திரியா?" என்றான். இதற்கு மேல் ஒன்றும் பதில் வரவில்லை. அத்திம்பேருடைய கை மௌனமாக, எதிர் வீட்டைச் சுட்டிக் காட்டியது. அவருடைய முகம் விகாரமாகக் கருத்தது. நெஞ்சு திக் திக்கென்று அடித்துக் கொள்ள அவரைப் பின் தொடர்ந்தான் பாலு.

அங்கே அவனுடைய சாவித்திரி உட்கார்ந்திருந்தாள் ஒரு மூலையில். மடியில் ஒரு சிறு குழந்தையை வைத்துக் கொண்டிருந்தாள். அதற்கு ஆறு மாதங்கள் இருக்கலாம்.

அவளுடைய நெற்றி, வெறுமையாக வெறிச்சென்று இருந்தது.

ஏதோ துர்க்கனவைக் கண்டவள் போல, 'பாலுவா?' என்று கேட்டாள்.

"நானேதான்" என்றான். பாலுவின் நெஞ்சம் வெடித்தது. அதற்கு மேல் அவன் வாயிலிருந்து ஒரு வார்த்தை வரவில்லை.

"ஆண்களானால் எவ்வளவு காலம் வேணுமானாலும் காத்திருக்கலாம். என்னைப்போல, பெண்கள் எவ்வளவு நாட்கள் காத்திருப்பது?" என்று சாவித்திரி கேட்டது அவன் காதில் விழவில்லை.

அவன் எங்கோ வெறித்துப் பார்த்தபடி உட்கார்ந்திருந்தான்.

அவனுடைய மனக்கண் முன்னே ஒரு கோயில் மணி தெரிந்தது.

அதை அடிப்பதற்கு இரண்டு பேர் குதித்துக் கொண்டு ஓடுகிறார்கள்.

'டணார்' என்ற சத்தம் கேட்டது.

என்ன அவ ஒலி!

இப்பொழுது அந்தக் கோயிலிலே பழமை எதுவும் இல்லை. கோயில் புதுப்பிக்கப்பட்டுப் பிரபலமடைந்து விட்டது. அதில் எப்பொழுது பார்த்தாலும், கண்ணீர் வழிந்த முகத்துடன், வாய் மூடி மௌனியாய் ஒரு சாமியார் உட்கார்ந்திருப்பதைக் காணலாம்.

அந்தச் சாமியாருடைய சொத்துதான் அந்தக் கோயிலைப் புதுப்பிக்க உதவிற்று என்பதை விஷயமறிந்தவர்கள் சொன்னாலும் அதை நம்ப, உலகம் தயாராக இல்லை!

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras


வெண்மையாக
சலவை செய்யப் பட்டுள்ளன
பிரகாசமாக
சலவை செய்யப் பட்டுள்ளன
ஸன்லைட் சோப்பினில் தான்
துணிகளை அடித்துத் துவைக்காமலே வெண்மையாகவும் பிரகாசமாகவும் சலவை செய்கிறது!
SUNLIGHT SOAP

S. 201-50 TM

REGD. No. M. 4392
*Registered as a newspaper in Ceylon*